உ

சருவம் விஷ்ணுமயம்.

# பகவற்கீதை

## மூலமும்-உரையும்.

திண்டிக்கல்

## முத்துவீரப்பிள்ளை

மதுரை

## முத்துக்கிருஷ்ணபிள்ளை

இவ்விருவர், உத்தரவின்படி

மதுரை, புதுவை, சென்னை.

இச்சங்கங்களில்

தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

களத்தூர்

## வேதகிரிமுதலியாரால்

ஒருவாறு பரிசோதித்துத்

தமது

இலக்கணக்களஞ்சியஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

பரிதாவி- ௵ - ஆடி௴.







சருவம் விஷ்ணுமயம்.

# ஸ்ரீபகவற்கீதா மகுத்துவம்.



இவ்வுலகின் கண் சிறந்த மந்திரிகளுக்குள் முழுமந்திரி - சுமந்திரன் - முக்கால்மந்திரி - சத்தியகீர்த்தி - அரைமந்திரி - பட்டி - கால்மந்திரி - அப்பாஜி - இந்நான்கு தரத்தாரில் - கலியுகத்தில்மிகுந்தமதியூகியாகவும், ராஜதந்திரியாகவும், சர்வவிஷயானுபவ கைவல்லியராகவும், ஞானசூரியராகவு மிருந்த அப்பாஜி என்பவரை ஒப்பற்ற முக்கியமொன்று கருதி அக்காலத்தில் அரசுசெலுத்தி வந்த ஒருபாக்ஷாவானவர் சர்வசமயாங்கிகாரமாகவும், வியாணபராளின் ஆபேக்ஷரகிதமாகவும்சுத்தாத்விதசுயம்பிரகாசயதார்த்தஆத்மஞான மோக்ஷகைவல்லிய திவ்வியக்கிரந்த மெதுவென்று விசாரணைசெய்துதமக்கு அனுப்பும் பொருட்டுத் தமதுநகரத்திருந்து முஹர் செய்தகடிதம் ஒன்றை அனுப்ப அதைக்கண்டு அப்பாஜியானவர் இவ்வுலகத்தின் வேதாகமபுராணகாவியாலங்காரஸ் மிருதிகளினும் விசேஷமுள்ளதென்றும்சமயகோடிகளினுடையதர்க்கநிவாரணசாக்ஷிபூதமென்றும்இருவினையகற்றி சீவாத்மா-பரமாத்மாவிற் சைதன்னியப் படும்கதியென்றும் ஷேபாக்ஷாவானவர் எழுதியகடித லக்ஷணத்திற்குக்குறைவில்லாததென்றும், அதற்குமேலொரு நூலுமின்றி ஒப்பற்றவேதபரம ரகசியமென்றும் விளங்காநின்ற - ஸ்ரீமத் பகவற் கீதையை அரபிபாஷையில் மொழிபெயர்த்துப் பாக்ஷா அவர்களுக்கு அனுப்பினார். அதுகண்டு மேற்சொன்னபாக்ஷாவானவர் இந்த அத்விதகிரந்தத்தைத்தம்முடைய சமுகத்தின் நாற்றிசைமந்திரிகளுக்குங்கா

ட்ட அவை முகநிலைமந்திரிகளும் திவ்வியமென்றங்கீகரிக்கமற்றோர் நிலைமந்திரி மாத்திரம் சம்மதத்தைச் சாராமலிருக்கின்றதென்று அரசனுக்கறிவிக்க அரசன்சிர் தூக்காமல் அப்பாசிக்குப் பதிலுத்தரமெழுத ஆலசியப்பட்டதால் மதியூகியாகிய அப்பாஜீ நுட்பத்தைக்கிரகித்து மறுபடி ஒருகடிதத்தில் இந்தப்பகவத்கீதையை அலக்ஷியஞ்செய்தவன் நீசபீஜமாக இருக்க வேண்டும் அவனுடைய துராக்ஷேபத்தினால் தமது அங்கீகாரகடிதம் வருதற்கு ஆலசியமாயிற்றென்றுணர்ந்தேன் ஆதலால் அந்தச் சந்தேகத்தை நிவர்த்திசெய்துகொள்ள வேண்டுமென்று எழுதினார் அதைக் கண்ட மாத்திரத்தில் பாக்ஷாவானவர் அம்மந்திரியின்தாயின் வாய்மொழியால் அவன் நீசபீசமென்று உண்மைதெரிந்து கொண்டு அவனைக் கண்டித்துப்போட்டு இந்த ஸ்ரீமத் பகவற்கீதையைப் பிரதிகாலம் பாராயணஞ்செய்து ஜீவன் முத்தரானார்.

முற்றிற்று.

இஃது

புரசை

# தெய்வசிகாமணி

## முதலியாரால்

அச்சடுக்கிநிறைவேற்றப்பட்டது.







கடவுள் துணை.



# பகவத்கீதை

## மூலமும், உரையும்.



## பாயிரம்.

[அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.]

ஐவகைப்பொருளுநான்குகரணமுங்குணங்கண்மூன்றுஞ் .. *
செய்வினையிரண்டுமொன்றியாவருந்திகைப்பநின்ற ... ...... *
பொய்யிருளகலஞானப்பொருட்கதிர்விரித்தபுத்தேள் . ..... *
கைவளராழிச்செங்கட்கண்ணனைக்கண்ணுள்வைப்பாம் .... .. *

(இதன்பொருள்)

அண்டசம்-சுவேதசம் - சராயுசம்-உற்பீசம்- மந்திரசம்-என்கின்ற ஐந்துவிதசனனசீவன்களும் - மனம்-புத்தி-சித்தம்- அகங்காரம்- ஆகியநான்குகரணங்களும் - சாத்துவிகம்-இராசதம்-தாமதம் ஆகியமூன்றுகுணங்களும் - செய்கின்றகாரியமானபுண்ணியபாவமாகியகன்மமிரண்டும் பொருந்தி யெல்லாருந்தன்னையறியாதபடி மயங்கமெய்போல நின்றபொய்யான அஞ்ஞானம்போகத்தன்னது சுபாவசோதியான ஞானப்பொருளைவிரித்தருளிச்செய்த தெய்வம் திருக்கையிலேவளரப்பட்ட சக்கரத்தையுஞ் சிவந்தகண்களையுமுடைய ஸ்ரீகிருஷ்ண சுவாமியைக் கண்ணுக்குள்ளே வைப்பாம் என்றவாறு. ❀ [கண்ணுக்குள்ளேவைப்பாமென்பவே - எல்லாமவனாகக் காண்போமென்பதுகருத்து-இதுவணக்கம் - அருச்சுனனுக்கு ஞானப்பொருளையென்றெழுதாததேதுக்கெனில் உத்தமனுக்கும்- பின்னுஞ்சிலருக்குமுபதேசித்ததினாலே, அருச்சுனனுக்கென்றெழுதாமற் பொதுவாகவெழுதினது இதில்வினையுவமமும், பயனுவமமும், கண்டுகொள்க. ஐவகைப்பொருளென்றது பிருதிவி-அப்பு - தேயு-வாயு- ஆகாயம் என்கின்ற பஞ்சபூதங்களும் பொருந்தும்.] (௧)

மன்னருள்விசயன்கேட்பவாளமர்தனமேலிட்டு ... *
மின்னவிர்படைக்கைமாயனுரைத்தமெய்ப்பொருளையெல்லா
ம், பன்னருமறைகள்கோத்தபழமுனிபணித்தவண்ண ... *
மென்னறிவளவினாலேதமிழினாலியம்பலுற்றேன் ... *

(இ-ள்.) எல்லாரையுங்கொல்லலாகாதென்று அவர்கள் மேல் கிருபைவைத்து அருச்சுனன்கேட்க அவ்வேளையெல்லாரையுங் கொல்லத்தக்க கீர்த்திபிரகாசிக்கிற சண்டையின்மேலிட்டு ஒளி பிரகாசிக்கிற பஞ்சாயுதந்தரித்த திருக்கைகளையுடைய ஸ்ரீகிருஷ்ண சுவாமி யுபதேசித்தவுண்மைப் பொருளையெல்லாம் ஓதவரிய பழைய வேதங்களை நாலாகக்கோத்த வியாசமகா முனிகிரந்தமாக வருவிச் செய்தபடிக்கு அடியேனுடைய அறிவெவ்வளவோ அவ்வளவினாலேதமிழாற் சொல்லத்தொடங்கினேனென்றவாறு. ❀ அறிவள வென்றதனால் வேதத்தை கோவையிட்டவருடைய அறிவினாலேசெய்ததை அடியேனறிவளவினாலே சொல்லுகிறது மகா அற்பமாகையால் அவர் சொன்னதுபோலிருக்காமற் பெரியோர்களால் இகழப்படுவதாயினும் அடியேன் ஆசையினாற்சொன்னதினாலே பெரியவர்களும் இவனறிவுக்கு எட்டினதென்று கொள்ளுவார்களென்பதுகருத்து.(உ)

[கலிநிலைத்துறை.]

விண்ணியன்மொழியினால்வியாசன் கூறிய ... *
புண்ணியகதையையான் புகல்வதென்னெனி ... *
லெண்ணியவகைபிறிதில்லையானுமிந் ... *
நுண்ணியபொருளினைநுவலவேண்டியே ... *

(இ-ள்.) தெய்வசுபாவவசனமான கிரந்தத்தினாலே வியாசமாமுனி சொன்ன புண்ணியகதையான இந்தக்கீதையை அடியேன்தமிழினாலே சொல்லுவதெனனவெனில் மோட்சத்துக்கு எண்ணமிட்ட சாத்திரவிதங்கள் வேறேயில்லையானதாலும் இந்தக்கீதையால்மோட்சமுள்ளதினாலும், இந்தக்கீதையிலுள்ள சூட்சுமப் பொருளிலேபுகுதவேண்டிச்சொன்னதென்றவாறு. ❀ இதனால் வருங்காரணங் கூறியது.] (௩)

உன்னுநான்மறைமால்வரையச்சிமேன் ... *
மன்னுமேசமுழங்கியவாக்கினைப் ... *
பன்னுசீர்பரமார்த்ததரிசன ... *
மென்னுநாமத்தினையியம்புவாம் ... *

(இ-ள்.) பெரியமலையினுச்சியின்மேலேயிருக்கிற மேகங் குமிறிப்பொழிந்த வெள்ளத்தினாலே யுலகத்தை இரக்ஷிப்பதுபோல எல்லாரும் நினைக்கப்பட்ட நாலுவேதங்களுடைய சிரசின்மேலேயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணசுவாமி கெம்பீரமாக உபதேசித்த திருவார்த்தையை எல்லாரு மோதப்பட்ட சிறப்புடைய பரமார்த்ததரிசன மென்றுசொல்லப்பட்ட திருநாமமுடைய இந்தகீதையைத் தமிழினாலே சொல்லுவாமென்றவாறு. ❀ இதனாலிந்நூற்பெயரும்பயனுங்கூறியது. இதனுள் வண்ணவுவமமும, வினையினுவமமும், பயனுவமமுங்கண்டுகொள்க. இவ்வநான தம்பாயிரம் இந்தநூலுக்குப்பரமார்த்த தரிசனமென்று கிரந்தப்பெயர் தமிழிற்பரமபொருட் காட்சியென்று மொழிமாறுபெயர்வழங்குகிறது. (௪)

பாயிரம் - முற்றிற்றுமுற்றும்.



முதலாவது

# சோக - அத்தியாயம்.



[வாக்கியார்த்தம்.]

கௌரவர்களும், பாண்டவர்களும், குருக்ஷேத்திரபூமியிலேசண்டைக்குப்போன அன்றுதிருதராட்டிரன் சஞ்சயனுடனே விசாரப்பட்டுக்கொண்டிருக்கையில், வியாசமகாமுனிவந்து விசாரந்தீரச்சொன்னார் கேட்ட திருதராட்டிரன் சண்டையைப்பார்க்கமாட்டேன் கேட்கவேண்டுமென்ன அதற்கு நல்லதென்று சஞ்சயனுக்குத் தூரப்பார்வையுந், தூரக்கேள்வியுமுண்டாகவும், ஆயுதம்படாமலும், முன்பின்வாராமலும், திரிகாலஞானமிருக்கத்தக்கதாகவரங்கொடுத்தேன் இவனாலே எல்லாங்கேட்டறியென்று சொல்லிப் போனார் அவர்போனபின் சஞ்சயன் சண்டைசமாசாரஞ் சொல்லிக்கொண்டுவந்த பத்தாநாள் இராத்திரிசொல்லுகிறதில் பீஷ்மருக்குச் சேனாபதிபட்டங்கட்டிமுதல்நாள்சண்டைக்கு எதிர்த்துப் போர்க்களத்தில் நின்றபோது, நடந்தசெய்திசொல்லுகிறது.

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

புண்ணியபூமியென்னும்புகழ்குருபூமிதன்னில்...... .....❋
நண்ணியபின்னர்நம்முடையவர்களுநமருமாங்கு...... ❋

கண்ணிபனென்னையென்றுகண்ணிலாவரசன்கேட்பத் *
தண்ணியவினியசொல்லாற்சஞ்சயனுரைக்கலுற்றான் *

(இ-ள்.) உலகத்திற்புண்ணியபூமியென்று சொல்லப்பட்ட கீர்த்தி பெற்ற குருக்ஷேத்திரத்தில் சண்டைபண்ண வேண்டிக்கூடின பின்பு பகைஞராகிய பாண்டவர்களும் நம்முடையவர்களும் அங்கே நினைத்த தென்னவென்று கண்ணில்லா திருதராட்டிரன்கேட்க அதற்குக் குளிர்ந்த இனியசொல்லினாலே சஞ்சயன் சொல்லத் தொடங்கினனென்றவாறு. (க)

போர்முகமாகிநின்றபுல்லலார்படையைப்பார்த்துக் - *
கார்முகவுருவுடையகலையறையவனைநோக்கி ... ... *
வார்முரசதிருந்தானைவாளரவுயர்த்ததோன்ற ... ... *
லேர்முகின்முழக்கமென்னவின்னணம்வியம்பலுற்றான் - *

(இ-ள்.) தோலாற்கட்டின பேரிகை முழக்கப்பட்ட சேனைகளுடனே பிரகாசமுடைய பாம்பைக்கொடியாக வுயரப்பண்ணின துரியோதனன் சண்டைமுகமாகிநின்ற சத்துருக்களான பாண்டவர்களுடைய சேனையைப்பார்த்து வில்லாகிய கலையாலே பகைஞராகிய நிலத்தையுழுகிறவனாகிய சாஸ்திரவேத வல்லவரான துரோணரைப்பார்த்து நீண்ட அழகியமேகமுழக்கம் போல இவ்வண்ணமாகச் சொல்லத்தொடங்கினனென்றவாறு. (உ)

[கொச்சகக்கலிப்பா.]

வீமனையும்விசயனையுநிகர்தருபோர்வில்லாள ... ... *
ரார்மருவுசிலையபிமனுள்ளிட்டாரெனப்பலருந் ... ... *
தார்மருவுதலைவர்களாய்த்தலைப்பெய்ததானையினை ... *
மாமருவுபெருந்தேராய்பாரொன்றுமறித்துரைப்பான் -

(இ-ள்.) வீமனையும்-அருச்சுனனையும் - ஒப்பாகத் தரப்பட்ட சண்டைக்கு உபகாரமான ஆயுதங்களையுடையவர்கள் அங்குத்தங்கினவில்லையுடைய அபிமன்னன் முதலான உள்ளிட்டாரென்ற அநேகருந் தும்பைமாலைதரித்துச் சண்டைக்கு ஆயத்தமான நாயகர்களாகப் பின்னிட்டு முன்னிட்டசேனையைக் குதிரைகள்கட்டின பெரியதேரையுடைய ஆசாரியரேபாருமென்று திரும்பவுஞ்சொல்லுவானென்றவாறு. (ங)

[கலிவிருத்தம்.]

கங்கையாள்பெறுகாதலனும்புக ... ... ... *
அங்கர்கோனெனதாருயிர்த்தோழனு ... ... ... *

[illegible]ங்கள்வாழ்துணைநம்பியுநீயுமிங் ... ... ... ... ✲
குங்களாருயிரென்பொருட்டொக்குநீர் ... ... ... ✲

(இ-ள்.) கங்காநதியானவள் பெற்றகுமாரனாகிய பீஷ்மரும், கீர்த்திபெற்ற அங்கதேசத்தாருக்கு அரசனான வென்னுடைய அரிய உயிர்த்தோழனாகிய கன்னனும், நம்முடைய செல்வத் துணையான அசுவத்தாமாவும், நீருமற்றவிடங்களிலே யேற்றக்குறைச்சலா யிருப்பினும் அன்பினாலே இங்கே என்னிமித்தமாக வுங்களுடைய அரிய சீவன்களெல்லாம் ஒத்திருக்குந்தன்மை (எ-று.) (௪)

அன்றியேயுமரசரனேகரால் ... ... ... ... ✲
வென்றியேதரவல்லரும்வேண்டலா ... ... ... ... ✲
ஒன்றியேதமெனக்குறுமேலுயிர் ... ... ... .. ... ✲
பொன்றியேயதுபோக்குதன்மேற்கொண்டார் ... ... ✲

(இ-ள்.) அல்லாமலும் என்மேலன்பினாலே வுங்களையொப்பாக, இசையப்பட்ட அரசர் அனேகம்பேர் அவர்கள் எனக்குவெற்றியேதர வேண்டுவர் வெற்றியல்லாததோல்வியை வேண்டார் எனக்கு அவசியமான குற்றம்வந்து கலந்து வருமாகிற் றங்களுடைய சீவனை விட்டேயந்தக்குற்றத்தைப் போக்கிச்செய்ததை வருவிக்கிற உத்தியோகத்தை மேற்கொண்டார்களென்றவாறு.] (௫)

எய்தவெங்கள்பிதாமகனேவலாற் ... ... ... ✲
கைகொள்கின்றகடர்படைகண்ணுறில் ... ... ... ✲
வெய்யவீமன்வியப்பொடுகாத்திடு ... ... ... ✲
மைவர்தம்படைக்காற்றவற்றாகுமோ ... ... ... ✲

(இ-ள்.) சேனாபதியாகிவந்த எங்கள்பாட்டனான பீஷ்மருடைய ஏவலினாலே கைகலந்துகொள்ளுகிற கடலையொப்பான சேனையைப் பார்த்தாற் கொடுமையான வீமன் அதிசயத்துடனே காக்கப்பட்ட பஞ்சவர்களுடைய சேனைக்கு ஆற்றத்தக்கதாகுமோ (எ-று.) ✲ இதனுள் வீமன் மேற்றனக்கிருக்கிற பயத்தைச் சேனை மேலேயைத்துச் சேனை நடுங்குமென்றும் பாட்டன்கிழவனென்றும் சேனையைச் சேனாபதிகாப்பார் நமக்கென்னவென்றுபராமுகமாயிராமலுந்தெரிவிப்பதுகுறிப்பு. (௬)

மேல்வருத்ததுகாமின்விரைந்தெனு ... ... ... ... ✲
மேல்வயிற்றிறல்யாதவர்தம்மொடுங் ... ... ... ✲

கால்வளைத்தசிலைக்கங்கைபாண்மகன் .... .... ..... .... *
வால்வளைத்திரடன்னையும்வாய்வையா..... ..... ....... *

(இ,ள்.) இனிமேல்யூகாசாரமாக வகுத்த விடத்தில் எவரெவரை யெவ்வெவ்விடங்களிலேயெங்கள்பாட்டனார் வைக்கிறாரோ அவ்வவ்விடங்களிலே அவரவரிருந்து அதைச்சிக்கைப்பட்டுக்காத்துக்கொள்ளுங்களென்கிறபோது திறமையுடைய யாதவர்களுடனே நின்று நாணையேற்றிக் காலைவளைத்து வில்லைத்தரித்த கங்காபுத்திரனாகிய பீஷ்மர் வெள்ளை நிறமான சங்குக்கூட்டங்களைவாயில்வைத்து (எ-று.) (௭)

வஞ்சர்செய்தவினைமறலிக்குண .... ... ..... ... *
வெஞ்சமர்விளைந்ததன்னவும்வேந்தர்கோ.......... ... *
னெஞ்சமுண்டகிழ்வெய்தவுநேரலா..... ..... ........ *
ரஞ்சவுங்கனன்றார்த்தனசங்கமே .... ..... .... .... *

(இ,ள்.) வஞ்சகர்செய்தகாரியம் யமனுக்குப்பொசிக்கக் கொடுமையான சண்டைவிளைந்ததென்னவும் இராஜாதி ராஜனான துரியோதனனுடைய மனமானது உள்ளேசந்தோஷமடையவும்பகைஞரான பாண்டவர்கள்பயப்படவுங்கோபித்துச் சங்குகளை முழக்கினார்களென்றவாறு. ❊ மேலென்றபாட்டும் வஞ்சகமொன்றபாட்டும் ஒருதொடர். (௮)

[கலி நிலைத்துறை.]

ஆர்த்தனவளைகளெங்குமதிர்ந்தனபல்லியங்கள் .... .... *
போர்சதிடப்படைநின்றிப்பாற்புவனமீரேழும்பூத்த *
தீர்த்தனுந்தனதுசங்கைச்செங்கையால்வாங்கிக்கொண்டு
கார்த்திரண்முழக்கமென்னக்கடல்கிளர்ந்தார்த்ததென்ன

(இ,ள்.) சங்கங்கள்முழங்கின பலவாத்தியங்களும் எங்கு மதிர்ந்தன சேனைகள்நின்று இந்தப்பூமியைப்போர்த்துகொண்டதுபோல நிறைய அப்போது பதினாலுலகத்தையும் பெற்ற ஸ்ரீகிருஷ்ண சுவாமியுந்தம்முடைய பாஞ்சசன்னிய மென்கின்ற சங்கைச்சிவந்ததிருக்கையாலே வாங்கிக்கொண்டு மேகக் கூட்டங்களின் முழக்க மென்றுசிலர்சொல்ல எழுகடலுமொன்றாகக் கூடிப்பொங்கி யெழுந்துமுழங்கின வென்று சிலர் சொல்ல(எ,று.) (௯)

[கலிவிருத்தம்.]

வையமனைத்தையும்வாரிமுன்வைக்குஞ் .... ..... .... *
செய்யதிருப்பவளத்திடைவைத்தா..... ..... .......... *

னாலேமக்குயிராதலினாலே ... ... ... ... ... ... ..*
யுய்வதுமக்கிலையென்பதையொத்தே ... ... *

(இ,ள்) முற்காலத்திலேபூமியெல்லாவற்றையும் வாரியுள்ளேவைக்கப்பட்ட சிவந்தபவளக்கொடியொப்பான திருவதரத்தில் வைத்து முழக்கினார். அதெப்படியிருந்ததென்றால், பஞ்சவர்களெமக்குச்சீவனாகையாலே, தப்பிப்பிழைப்பது உமக்கில்லையென்று அண்டகடாகமறியச்சொன்னதை யொத்ததென்றவாறு. ※ ஆர்த்தனவென்ற சங்கும், வையமனைத்தையுமென்றகவியு, மொருதொடர் சகலசீவன்களும், உயிராயிருக்கிற நமக்குப் பாண்டவர்களுயிரென்பது கிருபை உமக்கரிதென்று பாடமாயில், உங்களுக்கரிது பஞ்சவருக்கெளிதெனவாரும் இல்லை என்பது நிச்சயம் அரிதென்பது சந்தேகம் ஆகையாலே, சந்தேகமாகத் தெய்வஞ்சொல்லாததினாலே, அரிதென்று பாடம் ஓதக்கூடாது.] (௰)

[அறுசீரடி ஆசிரியவிருத்தம்.]

தருமன்பலவீமனருச்சுனனகுலன்சாதேவன் ... ... *
திருமருவுவிசயம்பவுண்டரந்தேவதத்தமெழின் ... *
மருவுசுகோடகமணிபுட்பகக்கொடுமெனவிவற்றி ... *
னுருமனையகுரலெதிர்த்தோர்செவிபோர்ப்பவூதினார்-*

(இ,ள்) இப்படிச்சுவாமியானவர் பாஞ்சசன்னிய மென்கிற சங்கையூதினவுடனே தருமராசாசிறப்புப்பொருந்திய விசயமென்கிற சங்கம்பலமுள்ள வீமன்பவுண்டரமென்கிற சங்கம் அருச்சுனன்தேவதத்தமென்கிற சங்கம் நகுலன் அழகுபொருந்திய சுகோடகமென்கிற சங்கம் சகாதேவன் மணிபுட்பகமென்கிற சங்கம் இப்படியென்று பெயருடைய இந்த அஞ்சுசங்கினும் இடியையொப்பான குரலானதுபகைஞர்களுடைய காதுகள்செவிடுபடஊதினார்கள்(எ,று)௰௧

[சந்தவிருத்தம்.]

ஒன்றலாதுபலவூதினார்கள்பலரூதும்வால்வளையினோசைபோய் ..*
நின்றகௌரவர்கணெஞ்சையூடுருவிவிஞ்சுவானினுநிரம்பமேல் · *
வென்றிசேரமர் தொடங்குமெல்லையினில் வெள்ளைமாகடவுதேரினமேனின்றபோர்விசயனன்றுமாயனெதிர்நில்லலாமையொடுசொல்லுவான் ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ,ள்.) மற்றுமுள்ளராஜாக்களொன்றல்லாதனேகஞ்சங்கையூதினார்கள். இப்படி அனேகரும் ஊதின வெள்ளைச்சங்குகளினுடை

யசத்தமானது போயெதிராகநின்ற கௌரவர்களுடைய நெஞ்சுக்குள்ளே பகுந்து பிறகேபுறப்பட்டுவளர்ந்து யாதாலுந்திரும்பாத ஆகாயத்திலும் நிறைய அதற்குமேலிரண்டுசேனையும், வெற்றி சேரப்பட்ட சண்டைதொடங்குகறபொழுது வெள்ளைக்குதிரைகளாலேநடத்தப்பட்ட, தேரின்மேல் நின்று சண்டைசெய்ய யத்தனப்பட்ட அருச்சுனன் அந்தத்தேரின் மேலே நிற்கமாட்டாத சோகத் துடனே சுவாமிக்கு எதிரே யொருவசனஞ்சொல்லுவானென்றவாறு. * வானினுமென்ற உம்மைச்சிறப்பும்மை நிற்கமாட்டாமையா லதுதள்ளாடல்.] (௰௪)

யாவர்போர்க் கெதிரெய்தினார்களெதிரெய்தி நின்றவிவர்தங்களில்
யாவரோடமர்தொடங்கலா மெனவறிந்துகொள்ளு மளவியா
வையுங்காவல்பூணியவை யுந்துபின்னவை கரந்துகொண்டரு
ள்செய்கண்ணனே, மேவநீகடவு மாகொடேரினை நிறுத்துவா
னவிளம்புவான் …. ….. ….. ….. ….. ….. …. *

(இ,ள்.) எல்லாவற்றையுங் காவலாகவாதரித்து அவைகளையுண்டாக்கிப் பின்பு அவற்றையொளித்துக்கொண்டருளப்பட்ட சுவாமியெதிராகவந்து, நின்றவிவர்களில யார் சண்டையெதினைத்துவந்தார்கள் யாராடே சண்டைதொடங்கலாமென்று அறிந்துகொள்ளுகிறமட்டுமனம்பொருந்த நடத்தப்பட்ட குதிரை பூண்டிருக்குந் தேரை நீ நிறுத்துவாயென்றுசொன்னா னென்றவாறு. (௰௫)

விளம்புமவ்வளவின் மேகவண்ணனும் வெள்ளைமாகடவு தேரி
னைச், களங்கொளும் பரிசுநின்ற சேனைநடுவே கடாவிநிறுத்தா
னென, வளங்கொள்கங்கைமகனுந்தியாகமுடிமன்னரியாவரை
யமுன்னுறத், துளங்குகின்றமுடிபோய் நெஞ்சினொடு வல்ல
வாறுசிலசொல்லினான் …. ….. ….. ….. …. …. .. *

(இ,ள்.) சொல்லப்பட்ட அவ்வளவில் மேகநிறமான சுவாமியும், அந்தவெள்ளைக்குதிரைகளாலே நடத்தப்பட்ட தேரைப் போர்க்களத்தில் எவ்வெவ்விடங்களிலு நிறையக் கொள்ளும்படி நின்றசேனைக்குநடுவே நடத்திநிறுத்தி நீசொன்னபடா னென்று சொல்ல வளமைகொண்ட கங்காபுத்திரனாகிய, பீஷ்மர்முதலாக கிரீடந் தரித்த ராஜாக்களெல்லாரையும், கண்முன்னாகக்கண்டு அசைப்பட்டகிரீடத்துடனே சொல்லவல்லவழியாகத் தன்மனதுடனே சில வசனஞ் சொன்னானென்றவாறு.] (௰௬)

[கொச்சகக்கலிப்பா.]

தாவிலருந்தந்தையருந் தந்தையர்தந்தையரு…… *
மேவியுடன்பிறந்தாரு மெய்ஞ்ஞானமளித்தாரு…… *
மாவியெனநட்டாருமான்றோருமமர்க்களத்தே…… *
மேவியவெம்பொருட்டாகவுயிர்விடவென்றுடங்கினார் *

(இ-ள்.) வருத்தமில்லாத அருமையானதகப்பன்மாருந், தகப்பன்மாருடைய தகப்பன்மாரும், இவர்களுடனே கூடப்பிறந்தவர்களும், மெய்யான ஞானோபதேசப்பண்ணனபேருஞ், சீவனைப்போலச் சிநேகமானவர்களும், அமைந்தடங்கின பெரியோரும் போர்க்களத்திலேவந்து, எங்களுடைய நிமித்தமாகத் தங்களுடைய சீவனைவிட்டுவேண்டிச்சண்டைக்குத்தொடங்கினார்களென்றவாறு. (௰௫)

[கலிவிருத்தம்.]

தீதறுகுரவர்மற்றவர்கள்சேய்களு…… *
மாதுலர்சிலர்களோமாய்கின்றுமொனக்…… *
காதல்செய்திடரினாற்கலக்கமுற்றவன்…… *
மாதவனெதிர்சிலமாற்றங்கூறுவான்…… *

(இ-ள்.) குற்றமற்றகுருக்களும், பின்னும் அவர்கள் பிள்ளைகளும், அம்மான்மார்களும், இவர்கள் முதலானவர்களோ சாகிறார்களென்று, அவர்கண்மேலாசை வைத்து அந்தத் துக்கத்தினாலே, கலக்கமடைந்த அருச்சுனன்சுவாமிமுன்னே சிலவார்த்தை சொல்லுவானென்றவாறு. ✻ குருக்கள்மாராவது கிருபர், துரோணர். (௰௬)

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

வாயேயன்றிமுகம்புலருமனமொன்றுணரமாட்டாது…… *
தீயேயன்றியுடல்வெதும்புஞ்செவ்வேநிற்கமாட்டுகிலேன்…… *
மேயேயகருதின்காண்டீபவில்லுநழுவிவிழாநின்ற …… *
தாயேயனையாய்போர்நின்றதமராக்காணுந்தோறுமன்னே *

(இ-ள்.) வாயுலர்ந்தது அதுவுமல்லாமல் முகம்வாடுகிறது மனது ஒன்றை யறியமாட்டாது நெருப்பையல்லாமற் சரீரம் வெதும்புகின்றது செவ்வையாக நிற்கமாட்டேன் மூங்கிலாலே யுண்டானதின்மையானகாண்டிபமென்கிறவில்லும்நழுவிவிழுகிறது தாயையொப்பானசுவாமி சண்டைபண்ணநின்றஉறவினவரைக்காணும்போதெல்லாமென்றவாறு. ✻ வாயுலர்ந்துமுகம்வாடிமனதுமயங்கிச்சரீரம் வெம்பித்தன்னாடிவில்லுநழுவிவிழுகிறதென்று சொன்னகருத்திப்பு.

ஓதலாகாநிமித்தங்களொன்றேயல்லபலவுளவாங் .... .... *
காதலரைக்கொன்றுபெறும்பயனேதொன்றுங்காணே
ன், ஆதலாலிவ்வெற்றியுடனரசினுரிமையானதனை ... *
ஏதலாவதென்கின்றதியாதின்பொருட்டோவியம்பாயால்

(இ-ள்.) சொல்லலாகாத நிமித்தங்களொன்று தானே அல்ல அனேகமுண்டாகிறது என்மேலே அன்புடையவர்களைக் கொன்று பெறப்பட்டபிரயோசனமோ நான் ஒன்றுங் காணேன் ஆதலால், வெற்றியுடனே அரசுரிமையான அதனைவிசாரிக்கிலெனக்குநல்லநா சமென்றேசுகிற எச்சாகிறது இப்போது இந்தச்சண்டையென்ன நிமித்தமோசொல்லுவாயென்றவாறு. (௰அ)

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

அரசவ்வரசால்வரும்போகமதனுமின்பமெய்துமென, உரை
செய்பொருள்களியாவர்சிலர்பொருட்டாலுலகைபுழைந்தடைவர்
வரைகொள்புயனேமற்றவர்தம்பொருளுந்தங்கள்வாழ்நாளும்
நிரைசெய்தொருவரொருவரின்முன்னீக்கவந்துநின்றரால் *

(இ-ள். மலையைக்குடையாகக்கொண்ட புயத்தையுடைய சுவாமி அரசு அந்த அரசாலவருகிறபோகம்போகத்திலுலே வருகிறசுக மென்று சொல்லப்பட்ட மூன்றுபொருள்களையும், சிலபேர்நிமித் தமாக வருத்திபார் பூமியை யடைவார்களோ அவர்கள் தங்களு டைய அரசுபோகஞ்சுகமென்ற மூன்றுபொருள்களையும், தங்களு டைய ஆயுசுகளையும், விட்டுவந்து வரிசைவரிசையாக ஒருவர் முன் னே யொருவர்நின்றார்களென்றவாறு. ❀ அரசுபோகஞ்சுகமென் றமூன்றுபொருளு மூன்றுபேறு அவை தகப்பன் தாய் குருசினேகர் உறவினர்-பெரியவர்கள் - நலமவர்கள். இவர்கள் முதலானபேர்க ளனுபவிக்கவேண்டிப்பெறுகையால், இப்போது இந்தச்சண்டையில் இவர்களைக்கொன்று பெறுவதாக வந்திருக்கிறது அதென்னில் இ வர்களே யெனக்குமுன்னே யெனக்குமுன்னேயென்று அவசரப்ப ட்டு ஒருவர்முன் ஒருவர்வந்து நிற்கையால், இவர்களைக்கொன்றுவரு ம்பிரயோசனம் ஆகாதென்பது குறிப்பு.] (௰௯)

ஆனபொருளிதாதலினலவரைக்கொன்றலருள்சேரா- *
தீனமல்லாலெங்களுக்கோரின்பமெய்துமில்லையால் ..... *
கானவரிவிற்கொண்டென்னைக்கொலினுமவரையான்கொ

றல், வானம்பெறினுமினிவேண்டேன்மண்ணின்பொரு
ட்டால்வல்லேனே ......... ......... ......... ......... *

(இ,ள்.) இந்தச்சண்டையினாலானபொருளிது ஆதலாலவரைத்தயையில்லாமற் கொன்றாற்குற்றமேயல்லாமல் எங்களுக்கு ஒருசுகமாகிலும் எங்குமில்லை ஆகையால் வளைந்து வரிந்த வில்லைக் கொண்டு அவர்கள் என்னைக்கொன்றாலும், அவர்களை நான்கொல்லுகிறது பெருந்தேவலோகத்தைப்பெற்றாலும், இனி ஆசைப்படேன் இப்படித் தேவலோகத்தை வேண்டிக்கொல்லாத நான் மண்ணுலக நிமித்தத்தாலே கொல்லமாட்டுவனோ மாட்டேனென்றவாறு. (௨௰)

கொற்றவர்தங்குலங்கெடுத்தால்வருகின்றகுற்றமுமெய்-
யுற்றவர்தத்திறம்பிழைத்தாலுறுகின்றவுயர்பழியும் .... .. *
மற்றவர்களறியாதுமறந்திடுகமறந்தாலுங் ..... .... .... *
குற்றமெனவறிந்தவியானகுறிக்கொள்ளாதொழிவேனே.

(இ,ள்.) இராஜாக்கள் தங்கள்குலத்தைக்கெடுத்தால், வருகிறகுற்றமுஞ் சத்தியம் சகிதமானவர்கள் தங்களுடைய ஒழுக்கத்தை விட்டால், அடையப்பட்டபெரியபழியும் அவர்களறியாததற்குமுன்னே மறக்கவேண்டும் அப்படிமறந்தாலும் ஆகாது செய்தாற் குற்றமென்றறிந்தயான் இனியெப்போதும் நினைவாயிருக்கிறபடிக்குத் திடமாய்க்கொள்ளாமல் மறந்துவிடுவேனோ விடேனென்றவாறு. ❀ இதில்நினையாமல் மறந்து ஆயத்தமானேன் இனி அறிந்தபின்பு அதைப் பொறுப்புக்கொள்ளேனென்பது கருத்து. (௨௧)

குலங்கெடவேவருகின்றகுலதருமங்கெடுதரும் .......... *
நலங்கெடவேகுலப்பாவநண்ணுமதுநண்ணவே . .... *
இலங்கிழையார்நெறிதிரிவரிவர்கணெறிதிரியவே ..... .... *
தலங்குலவுமுறைமையெலாந்தலைதடுமாறுமால் ... .. *

(இ,ள்.) குலநாசமாகவே அநாதியாகத்தொடர்ந்து வருகிற குலதருமம்நாசமடையும், குலநலமானதருமமழியவே குலத்தைப்பாவமூடிக்கொள்ளும் அந்தப்பாவங்கள்கூடினமாத்திரத்திலே பிரகாசிக்கிற பொன்னாலும், மணியாலுஞ், செய்த ஆபரணம்பூண்டபெண்கள்தங்கள்மார்க்கத்தைத் தப்புவார்கள் இந்தப்பெண்கள் பதிவிரதாமார்க்கத்தைத்தப்பி விபசரியம்பண்ணவே பூமியிலே வழங்கினவரிசையான முறைமையெல்லாந்தலைதடுமாற்றமாகும்(எ,ஶ.) (௨௨)

தடுமாற்றமக்குலத்தைச்சார்ந்தார்க்குஞ்சாராதே...... *

கெடுமாற்றநினைத்தவர்க்குங்கெடா நிரயங்கிடைப்பிக்கும்
படுமாற்றமென்னுரைக்கேன்பண்டிறந்தோர்களுந்தடைக்
கொள், நெடுமாற்றலவர்கள்பெறு நீருணவகத்திழிவர்க
ளால் .... ..... ..... ..... ..... .... .. ..... ... *

(இ-ள்.) முறைகெட்டதடுமாற்றம்சங்கரமான அந்தக்குலத்தையடைந்தவர்களுக்கும் அந்தக்குலத்தைத்தான்சாராமல் அழியும்படி நினைத்தவர்களுக்கும், எந்தக்காலமும் அழியாதநரகத்தை யனுபவிக்கப்பண்ணும் ஆகையால், உண்டானவசனத்தை யென்னசொல்லுவேன் முன்மரணமான பிதுர்த்தேவர்களுக்குந் தங்களுக்கிடுவதான பிண்டவுதகக்கிரியைகளை இடுவாரில்லாததினாலே பெருமையினின்று நரகத்திற் பிதுர்களிறங்குவர்களென்றவாறு. ❀ இது அதோகதியான நரகிலேதலைகீழாகவிழுவது. (௨௩)

வாராநின்றகுலமடங்கப்பண்ணினர்க்குமற்றவரைச் ... *
சாராநின்றகுலத்துக்குந்தருமந்தளர்ந்துசாயமாற் .. *
சாராநின்றகுலந்தருமமிரண்டுந்தளர்ந்துசாயவே ... [ல்
ம்பாரநிரயமெய்துமெனப்பெரியோர்யாரும்பேசுவரா

(இ-ள்.) பூமியுள்ளநாள்முதலாக வரப்பட்டகுலத்தை மயங்கப்பண்ணிச் சங்கரமாக்கினவர்களுக்கும், அந்தக்குலத்தைக்கெடுத்தவர்களைச் சார்ந்து நின்றகுலத்தாருக்குந், தருமங்கெட்டுவிழுந்துபோம் இந்தவுலகத்தைச்சார்ந்துநின்ற குலமென்றுந், தருமமென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டுந்நிலைகெட்டுவிழுமே அந்த மனிதர்களுக்கு நீங்காத நாகங்கிடைக்குமென்று பெரியோ ரெல்லாருஞ் சொல்லுவார்களென்றவாறு. ❀ குலத்தாருங்குலத்தைக்கெடுத்தாரும் நரகத்திலெக்காலமு மிருக்கவேண்டு மென் பதனாலே பேரா நிரயமென்றார்.] (௨௪)

பின்னையனையசெல்வத்தைவேண்டித்தங்கள்மெய்யுயிரைக் *
கொன்னேகழிக்கநின்றவரைக் கொல்லத்துணிந்தகொடுவினை
யே, யென்னேகொடியபெரும்பாவமெய்த நினைந்தேனிடா
ருமிவர், முன்னேபடைவிட்டமர்துறந்துநின்றாலிவர்கணமு
னிவாரோ ...... ...... ...... ...... ...... *

(இ-ள்.) பின்னையொப்பான செல்வத்தைவேண்டித் தங்களுடைய சரீரத்துயிரை வீணிலேபோக்க நின்றவர்களைக் கொல்லத்துணிந்த கொடும்பாவியான நானென்னவோ கொடுமையான பெரியபாவ

த்தையடைய நினைத்தேன் நானும் இவர்கள் முன்னே ஆயுதத்தைவி ட்டுச்சண்டையைவெறுத்து நின்றாலிவர்கள் கோபிப்பாரோகோபி யாரென்றவாறு. ❀ மின்காட்டினை அந்தக்ஷணமே மறைகையாற் செல்வம் நிலையாதென்பது கருத்து. (௨௫)

[கலிவிருத்தம்.]

கொல்லினுமெனக்கறம்பொறுக்கைதுணையென்றே. ❀
கல்லினுயர்தோள்விடலைகண்ணனெதிர்கூறி ............... ❀
வில்லினுடனேபகழிசோரவிழிசோரச் ... ...... ......... ❀
சில்லிமணியாழிபொருதேர்மிசையிருந்தான் ............. ❀

(இ,ள்.) நிராயுதனென்றுபாராமலென்னைக்கொன்றாலும், அது போகிறது எனக்கு முக்தியும், நல்லது என்றுமலையை யொப்பாக உயர்ந்ததோள்களையுடைய காளையாகிய அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ண சுவாமி முன்னே சொல்லிவில்லுடனே அம்புநழுவக்கண்கள் நீர்து ளிக்க அழகியவண்டிலானது இடியைப்போலப் பூமியைப்பிளக்கப் பட்டதேர்மேலிருந்தானென்றவாறு.] (௨௬)

சோக-அத்தியாயமுற்றிற்றுமுற்றும்-பாயிரமுட்பட
ஆக - திருவிருத்தம் - (௫௰.)



இரண்டாவது

## சாங்கியயோக - அத்தியாயம்.

[கொச்சகக்கலிப்பா.]

இவ்வண்ணமறிவொழுங்கவெழுகின்றவிரதத்தாற் ... ... ❀
செய்வண்ணமறியாதுதிகைத்திருந்ததேர்விசையன் .. ❀
உய்வண்ணமருநாடியொருவண்ணமுலகோதுங் ... .. ❀
கைவண்ணமலருடையகார்வண்ணன்கட்டுரைப்பான் .. ❀

(இ-ள்.) இந்தப்படிக்கு அறிவுவிலக வெழும்புகிற தயையினாலே செய்யத்தக்கதை யறியாமற்றிகைத்துத் தேரிலிருந்த அருச்சுனன் மயக்கந்தீர்ந்து பிழைக்கத்தக்கசென்னவென்று ஆலோசனை பண்ணி, உலகத்தார்தோத்திரம்பண்ணக் கொடுத்தருளுகின்ற செந்தாமரைப்பூவையொப்பான திருக்கையையுடைய மேகநிறமானஸ்ரீ

ருஷ்ண சுவாமி உபதேசமார்க்கங்கள் அனேகத்தில் ஒருவிதத்தைச் சொல்லுகிறானென்றவாறு. ❋ இரக்கமாவது பகைஞரை நம்முடையவர்களென்று அபிமானத்தாலெழும்புகிற இரக்கம். (௧)

ஆயாதவர்க்குமலிகட்குமடுப்பதழியாப்பழியினது ...... ... *
தேயாவறிவைத்தேய்ப்பதறச்சிறுமைகளினுஞ்சிறுமைபது-*
சாயாநரகத்திடைசாய்ப்பதுன்போல்பவர்க்குத்தகாதுவந்*
தேயாநிலைத்தையுனையெவ்வாறடைந்ததெனவறியேன் *

(இ-ள்.) ஐயாவேதசாஸ்திரங்களை விசாரியாதவர்களுக்குமாணும்பெண்ணுமல்லாத அலிகளுக்கும், அடுப்பது- தீராதபழியையுடையது-கெடாவறிவைக்கெடுப்பது - மெத்தவும் அற்பமானவைகளிலும், அற்பமானது-ஒழியாதநரகத்தினிடத்திலே விழப்பண்ணுவது - உன்னையொப்பானவர்களுக்குத் தகாதது இப்படிக்கொத்த அஞ்ஞானம்வந்து இந்தப்போர்க்களத்திலேயுனையெப்படியடைந்ததென்றறியேனென்றவாறு. (௨)

ஒவ்வாதீதொழிந்சமர்மேலொருப்படுகென்றுருக்கரிய ...... *
செவ்வாயின் திருமொழியத்தேர்விசயன்செப்புவான் ... .... *
மெய்வாயினொடுமனத்தால் மிகப்போற்றற்குரியாரை..... *
எவ்வாறுகொலெபுரிவேனென்றிவ்வாறியம்பினான் ......... .... *

(இ-ள்.) இந்தஅக்கியானம் பெரியோர்களுக்குஒவ்வாதுஇதைவிட்டு உயித்திபத்தின்மேலே வொருமைப்படுமென்று கரியதிருமேனியுஞ் சிவந்தவாயுமுடைய சுவாமி திருவாக்கருளிச்செய்ய விசாரிக்கிற அருச்சுனன் சொல்லுவான் மனோவாக்குக்காயமென்கிற மூன்றுகரணத்தாலும்மிகவும் பூசிக்கிறதற்குரியவரான பீஷ்மர், துரோணர், முதலானவர்களை யெப்படிக்கொலைசெய்வேனென்றிந்தப்படிசொன்னானென்றவாறு. ❋ தேர்விசயனை இரதமேறுகிறவனென்றுரைபண்ணில், எல்லாரும் இரதமேறுகிறவர்களாகையாலேகூடாது தேர்தல் விசாரித்தல் ஆகையாலே விசாரிக்கிற அருச்சுனனுக்குபதேசிக்கிறதினாலே, உலாயில்விசாரித்தென் றெழுதினது ஒடுவென்றது திரிகரணத்தொடாயிற்று. (௩)

மாற்றவர்களெனவிவரைக்கொன்றுபெறும்பெருவாழ்வி.... *
னேற்றமுறாத்தியான்பிறர்பாலிரந்துண்கையினிதன்றே.... *
கூற்றமவருயிருண்டாலவர்குருதியாற்குழைத்த .... ..... .... *
சோற்றையினிதாகவன்றேயான்பின்னைத்துய்ப்பதெல்லாம்.*

(இ,ள்.) பாட்டன், குரு, இவர்கள் முதலான பெரியோர்களைப் பகைகளென்று கொன்று மேற்பட்ட பெரியவாழ்வினும் அவர்களுடைய பழிமைகளைச்சொல்லி அன்னியரிடத்தில் நான் பிச்சையெடுத்துண்பது இனியதல்லவோ அவர்களுயிரை யென்னாலே யமனுண்டால், அவர்களுடைய இரதத்தினாலே குழைத்த சோற்றை இனியதாகவல்லவோ நான் அவர்களைக்கொன்ற பின்பு பொசிப்ப தெல்லாமென்றவாறு.] (ச)

தவர்கொல்படைவிடுகையோதவிர்கையோதருவதுமற *
றவர்களெனைவெல்வரோயான்வெல்வமோவறிகிலேய .... *
னவர்கள்சிலரிறந்தக்காலதனாலெனதுயிர்போ ........ *
மவர்களமர்தொடங்குகவென்றடல்குறித்துநின்றனரால்.

(இ,ள்.) வில்லிலேதொடுத்துக்கொல்லப்பட்டஅம்புவிடுகிறதோதவிர்வதோ, இந்த விரண்டிலே தகுமான தெதுவோ அல்லாமல்அவர்கள் என்னைச்செயிப்பரோ நான் அவர்களைச்செயிப்பேனோ அவர்களில் சிலரிறந்தால், அதினாலேஎன்னுடைய அரியசீவன்போம் அவர்கள்சண்டை தொடங்குகென்று பலத்தைக் குறித்து நின்றார்களென்றவாறு.] (ரு)

ஆதலாலறிவாயவிழியின்மதற்றுங்கவர்பாற் .... .... ..... *
காதலாலிருண்மறைப்பநெறியெங்குங்காணேனு ..... ... *
லாதலாலெனக்குறுவதிகிலேனுரைத்தருள்வாய்ச் ... ..*
சாதலானதும்பிறப்புமில்லாததனிமுதலே ..... ..... .... *

(இ,ள்.) ஆகையாலறிவாகிய ஞானக்கண்ணை அவர்களிடத்தில் வைத்த ஆசையினாலே அஞ்ஞானமாகியவிருள்மறைக்க நானெங்கும் வழிகாணேன் ஆதலால், உறுதியானதையறிவில்லாத எனக்குறுதியைச்சொல்லி யருளவேண்டும் சாகின்றதானமரணமும், பிறப்புமில்லாத ஒப்பற்ற முதன்மையான சுவாமி யென்றவாறு. (சா)

உஞ்சேபோகுநெறிவாளாவுரைப்பனோவென் றுளங்கருதிர் *
தஞ்சேயென் றன்சரண்புகுந்தேன்தண்டிற்பரிந்தேன்றாமரை
க்கண், மஞ்சேயன்றன்மாணுக்கனுமுன்பாதமலர்புனைந்தே .... *
னஞ்சேலென்றிங்கடியேன்செய்வினைகளேவியாள்வாயே ..... *

(இ,ள்-) செந்தாமரைப் பூவை யொப்பான திருக்கண்களையுடைய மேகமேதப்பிப் பிழைத்துப் போகப்பட்ட வழியைக்கேளாமற் சொல்லுவேனோவென்று திருவுளத்தில் நினைத்தருளவேண்டா

ம் அடைக்கலம்புகுந்த விடமென்றும்முடைய மறைவு புகுந்தேன் இடைவிடாதபத்தநம்செய்தேன் உம்முடையசீஷனுக உம்முடைய திருவடித்தாமரைகளை அடியேனுடையசிரசிலே தரித்தேன் பயப்படாதேயென்று இங்கே அடியேன் செய்யவேண்டிய காரியங்களை யேவல்செய்தருளியாளுவாயென்றவாறு. (௭)

[ கலிவிருத்தம். ]

மன்னரும்பெருஞ்செல்வமன்றியேமாயாத ..... .... *
விண்ணுலகம்பெற்றிடினுமென்னுடையமெய்யுணர்வு ... *
நண்ணுமலந்துயரநலியமற்காப்பதனைக்..... ... [ன்
கண்ணனையிங்கெவ்விடத்துங்காண்கிலேனெனக்கலுழ்ந்தா

(இ-ள்.) அழியப்பட்ட பூமியையாளுகிற பெரிய செல்வமுமல்லாமல், அழியாததேவலோகத்தைப்பெற்றாலும், என்னுடையமெய்யானவறிவு சேராமற்கெடுக்கப்பட்டதுக்கமானது என்னை வருத்தாமற் காக்கப் பட்டதை இங்கே எந்த விடத்திலே யுங் கண்ணாலேகாணேனென்று அழுதானென்றவாறு. (௮)

நெய்ம்மார்பிற்சொரிவதெனநெடுங்கண்கணீர்சோர.. *
விம்மாநின்றவன்காதல்வெந்தீயால்வேவாமே ... . . *
கைம்மாறொன்றிலாதுயிர்காக்கவேகடன்பூண்ட .... *
வம்மாயன்றிருவார்த்தைமருந்மாரியாலவிப்பான் ..... *

(இ-ள்.) மார்பிலே நெய்சொரிவதுபோல நீண்டகண்கள் நீர்சிந்த விம்மிவிம்மிநின்ற அருச்சுனன் உறவின்மேல் வைத்த ஆசையான உஷ்ணமுள்ள நெருப்பாலே வேவாமல் முன்னேதானே பிரதிஉபகாரமில்லாமற் பஞ்சவர்களுடைய சீவனைக் காக்கிறதே கடனாகப்பூண்ட அந்தக்கிருஷ்ண சுவாமி திருவாக்கினாலே பொழியப்பட்டவருமையாகிய மழையால், அவிக்கவேண்டியென்றவாறு. (௯)

[அறுசீரடியாசிரியவிருத்தம்.]

மின்னையனையதிருநகைகொண்டருளிவிளைத்தாமரைநாளும் ..... *
பொன்னையணியத்திருமார்பன்போகாத்துயர்போம்பரிசெண்ணி-*
முன்னைமறைகளெடுத்துரைத்து முடியாப்பொருளை முதற் பொருளாய், தன்னையுள்ளபரிசவர்க்குத்தானேசாற்றத்தொடங்கினான் ... *

(இ-ள்) பரிமளித்தபொற்றாமரைப் பூவினிற்றோன்றிய மகாலட்சுமியைத்தரித்த திருமார்பையுடைய ஸ்ரீகிருஷ்ண சுவாமி மின்னையொப்பான திருநகைகொண்டருளி யெப்போதும் போகாததுக்க

ய்போம் படிக்கு நினைத்தும் பனைப வேதங்களெடுக் தெடுத்துச் சொல்லியு முடியாதபொருளை முதலானபொருளினாலேதன்னையுள்ளபடி அந்த அருச்சுனனுக்குத்தாமேசொல்லத் தொடங்கினாரென்றவாறு. ☼ எடுத்துச் சொல்லல்லாவது - மேலான பொருள்களாலே தூக்கிச்சொல்லியு மடங்காதபொருள்தானே யென்றதுதன்னைக்குருமுகமாக அறியாமற்றானே அறிவித்தாரொன்றதுஇதனாலேகுருவே தெய்வமென்று குறிப்பு. (௰)

(கலிவிருத்தம்.)

சாவதில்லையார்களுநிற்கவதுதானே ......................*
மாய்வரென நீகருதுமாரதர்களெல்லாந் ......................*
தேவரியதிவினைசெய்யாதமையினாலே ......................*
வீவதன்முன்வானுலகமேவுவர்கண்மேன்மேல் ......................*

(இ-ள்) எல்லாருஞ்சாகிறதில்லை அதுநிற்கசாவார்களென்று நீ நினைக்கப்பட்ட பெரியதேர்க்காரரெல்லாம் ஒன்றுலுங்குறையஅரிதானபாவங்களைச் செய்யாமையினாலே, சாகிறதற்கு முன்னே தேவலோகத்தை மேன்மேலுஞ் சேருவார்களென்றவாறு. ☼ தேயவரிய திவினையாவது யாகங்கள்,மகாதானங்கள்,முதலானவையால, தீராதபாவங்கள் செய்யாததினாலே தேவலோகத்தைச்சேருவார்களென்றதுகருத்து பாவிகள் நரகில் விழுவாரென்றதருத்தாபத்தி. (௰க)

அன்னவர்கள்சோகிதரனுவமுதலானும் ......................*
பன்னவரியோர்கண்மொழிபேசகர்தலானும் ......................*
மன்னுமபமேற்றியுண்மயங்கினைகொல்வாயா ......................*
தின்னதொழிலானவைமறந்திடுவையுங்கேள் ......................*

(இ-ள்.) அப்படிப்புண்ணியவான்களாய்த் தேவலோகத்தைச்சேருகிறவர்களாயிருக்கிற அந்தச்சோகிக்கத் தகாதவர்களைச் சோகிதமொன்று நீ அழுகிறதினாலும்பேசவரியரானவரொன்று அறிந்தும்அறியாதவர்கள்போல நீ பேசுகிற வசனத்தையே சொல்லுகிறதினாலும் நிலைமையானமயக்கமேற்கொண்டுபுத்திமயங்கினையோ இந்தத்துக்கத்தொழிலானது உனக்குத் தகாது இதை மறந்துவிடு இன்னஞ்சொல்லுகிறதையுங் கேளென்றவாறு. ☼ அற்பசுகத்தையு,மகாதுக்கத்தையுமுடையபூமியைவிட்டு மகாசுகத்தையுடையதேவலோகத்

(௫)

தைப்பெறுகிற சந்தோஷமுடையவர்களைத் துக்கமுடையவர்களெ
ன்று துக்கிக்கிறதினாலும், அறிந்து மறியாதவர்களான வாதிகளைப்
போலே பேசுகிறதினாலும், புத்திமயங்கினையென்றது. பன்னவரி
யோர்- பெரியோர் மன்னவரியோர் பாவிகள்வாதிகளென்று சொல்
லது வாதிகளையறிந்தும் அறியாதவரான பிரஞ்ஞா வாதிகளென்று
சொல்வதென்னையென்றால், தற்சபுத்திகளை நன்றாக அறிந்துவாதிக்
கிறதினாலே சொன்னது இவனுடனே பேசுகிறதே அரிதென்றுபய
ப்படவாதிக்கிறதினாலே, வாதியைப்பன்னவரியோரென்றுபாடினார்.

மாயுமவராலுமுயிர்வாழுமவராலு ............... *
மாயுமறிஞோர்களழியாமையறியாயோ ............ *
நீயுமில நாமுநிகழ்நானுநெறிதேரி ............... *
லேயும்வகையாலுலகிலென்றுமுளமேகாண் ......... *

(இ-ள்.) சாகிறவர்களாலுஞ், சீவன் வாழ்கிறவர்களாலுஞ், சகல கலையும், ஆராயப்பட்ட அறிவுடையவர்கள் பணத்திடமழிந்து துக்கப்படாததை நீயறியாயோ இவர்களையெப்படிக்கொல்லுவேனென்றழுகிற நீயும் உன்னுடைய இரக்கத்துக் குரியவரான இவர்களும் எல்லாவற்றையும், நடத்துகிற நானுஞ் சாகிறவர்களோ இருக்கிறவர்களோவென்றிந்த மார்க்கத்தைவிசாரிக்கிற கருமத்துக்கோகவிசையப்பட்ட வெண்பத்துநாலுலக்ஷம் அச்சுப்பேதவகையாலேயுலகத்திலே யென்றுமிருக்கிற நாமேயல்லாமல் இல்லாத நாமல்லகண்டாயென்றவாறு. (௰௯)

பொன்றுவதுடம்பதனுணின்றபொருளென்று .... *
சென்றுயோரியற்கையினிற்குமியல்பைக்கேண் .... *
முன்றுடர்மகப்பருவம்விட்டிளமைமூப்போ ........ *
டொன்றுமுடலாயினுமுயிர்க்கியல்பதன்றால் ... ..... .. *

(இ-ள்.) அழிவதுதேகம் அந்ததேகத்துக்குள்ளே நின்றவுயிர் அழியாது அந்தவுயிர் என்றும் ஒருசுபாவத்திலே நிற்கும் அந்தச்சுபாவத்தைக்கேள் அருச்சுனா முன்னே தொடர்ந்துவரப்பட்ட குழந்தைப்பருவத்தைவிட்டு இளமையோடு மூப்போடுந் தேகங்கூடுமானாலும் அதுவுடலுக்குச் சுபாவமேயல்லாமலுயிருக்குச் சுபாவமல்லவென்றவாறு. ✿ விட்டென்று சொன்னதினாலே, என்றுங் குழந்தைபருவமாகவேயிராமல் விட்டு இளமையான யவ்வனப் பருவத்தைக்கூடியப்படியேயானாலுமிராமல் அதையும் விட்டுக் கௌமார

கப்பருவத்தையடைந்து அப்படியுமிராமல் அதையும்விட்டுமரண திசையையடைந்து அப்படியுமிராமல் அதையும்விட்டு உற்பத்தியைக்கூடி அப்படியுமிராமல் அதையும்விட்டுக் குழந்தைப்பருவத்தைக்கூடி இப்படிக் கொள்ளிவட்டம்போலச், சுழலுகையால்உடலுக்குப் பருவஞ் சுபாவம்போலமரணமுஞ்சுபாவமாகையால்உயிருக்கு ஒருகாலமும் நாசமில்லையென்பதுகருத்து. (௰௪)

அன்னவகையாலுருவழிந்துவருமங்கே... ... ........... *
என்னதுருவாமறிவிறந்துபிறவாதார் ........................ *
பின்னதறிவானுடலழிந்துயிர்போதந் ........................ *
தன்னதெனவேதுமோர்சலிப்பதற்யானால் ... ....... ......... *

(இ-ள்.) அந்தந்தவகையினாலேஅந்தந்தவிடத்திலேதேகமழிந்து வரும் என்னுடைய சொரூபமான ஆன்மாவழிந்து பிறவாது ஆதலாற்பின்பு அதையறிந்தவன் உடம்பு அழிந்து ஆன்மா வுடம்பைப்பிரிகிறபோதுங் கூடுகிறபோதும் எவ்வளவுந் தனதென்று சலியானென்றவாறு. ✽ தானென் ஆன்மாவுக்கு ஒன்றுமில்லை உடம்பிற்கே மரணமும் பிறப்புமாகையால், அதுவந்தபோது நம்முடையதல்லவென்றிருப்பான் நம்முடையதென்று சலியானென்பதுகருத்து.✽

இவ்வகையதாகிலழல்சீதமிடரின்பஞ் .. ...................... *
செய்வகையிலாதறிவுசேருவதென்னின்... ...... *
மெய்வகையினாலிவைவிளைந்ததுதாமேய.............. ...*
ஐவகையினாயபுலனும்பொறியுமையா ... .......... *

(இ-ள்.) இப்படிச்சொன்னதைக் கேட்ட அருச்சுனன்சொல்லுவது இந்தப்படி சனனமரணம் ஆன்மாவுக்குஇல்லாவிட்டால், உஷ்ணம், சீதளம், துக்கம், சுகம் இவைகளைத் தன்னுடையதல்லவென்று செய்யும்படியில்லாமல் ஆன்மாவிலேசேர்ந்து சுட்டதென்றுங் குளிர்ந்ததென்றுங் கிலேசித்தலுஞ் சந்தோஷித்தலுஞ் செய்வதென்ன வென்று கேட்டதற்கு ஸ்ரீகிருஷ்ணசுவாமிவாக்கியம் அச்சுப்பேதத்தேக விதங்களினாலிவைகளுண்டாகிவரவற்றதுக்க சுகத்தைப்பஞ்சீகரணபேதத்தினாலுண்டாயபஞ்சதன்மாத்திரைகளாகிய சத்த; பரிச, ரூப, ரச, கந்தமென்கின்ற ஐந்து ஞானேந்திரியமாகியமெய் வாய்கண்மூக்குச்செவியென்கின்ற ஐந்துவுருவாய் அடைந்து அனுபவிப்பதல்லாமல் ஆன்மா அனுபவிப்பதல்லவை (௰௫)

(கொச்சகக்கலிப்பா)

சீதமழன்முதலவற்றின்செயல்கேட்கிலநித்தியமாய்ப்.*
போதலொடுவருவனவாயிருக்குமவைபொறுநிப.... *
மாதலிலென்பயனென்னிலவைபொறுத்தபெரியோனை.
ஏதமவைநிலைகலக்காதவன்விடேயெய்துவனால்... .... *

(இ-ள்.) சீதள உஷ்ண முதலானவைகளின்செயலைக்கேட்கில்அநித்தியமாய்ப் போகிறதும், வருகிறதுமாயிருக்கும் அவற்றைப் பெரியோர்கள் பொறுப்பார்கள் நீயும்பொறுத்தால்ஆகிறபிரயோசனமென்னவென்றால், அவைகளை சமமாகப் பொறுத்தபெரியோனைக் குற்றமான அர்த்தச்சீதளவுஷ்ண முதலானவை நிலைமைக் கலக்கிவொழியாது அவர்மோக்ஷத்தையே அடைவார்நரகமடையாரென்றவாறு.

மண்ணினுயவிகாரமும்மண்ணேயந்தமண்ணொழிந்து..
பண்ணினுருமற்றிலைப்பண்ணப்பட்டபலபொருள்க.*
ளெண்ணவருங்காலமுதுமற்றிறந்தவிடத்துநிகழ்விடத்
துங், கண்ணிநாடினமண்ணொழியக்கண்டாருளரோகட்
டுரையாய்........ ..... ......... ......... ... ........ .... ....... *

(இ-ள்.) மண்ணினுண்டாகிய விகாரங்களான கடமுதலானவெல்லாம் அந்த மண்ணேயல்லாமல் வேறல்ல அந்தமண்ணைவிட்டு மற்ற, அப்பு,தேயு,வாயு, ஆகாசங்களாலே கடமுதலானவைகளைப் பண்ணின்பேருமில்லை அப்படிப்பண்ணப்பட்ட பலபொருள்கள் நினைப்பாலுண்டாகிய வருகாலத்திலும்போன காலத்திலும்இப்போது நடக்கிறகாலத்திலும், நினைத்துவிசாரிக்கில் மண்ணைத்தவிர வேறுபூதங்களாகக் கண்டபேருண்டோ சொல்வாயென்றவாறு. ※ கண்ணினாடினென்றுபாடமாயிற் கண்ணினாலே பார்க்கிலென்றுமாகொள்ளும் அப்படி யுரைசெய்தால், கண்டதுமெய் காணாதுபொய் யென்ற சாருவாகனமதமாம் அதுகூடாது. (௰௮)

(கலிவிருத்தம்.)

வையாரயிலுழவாவதின்வகையேயதன்வகைகேண்.... *
மெய்யானதுநசியாதிதனுடன்வேறெனவிரவும் ... ...*
பொய்யானதுநிசமாகிலவை புலனாகியபொருளே ..... *
ஐயாவெனையறிவாரிவையறிவார்பிறரறியார்....... *

(இ-ள்) கூர்மைபொருந்திய ஆயுதத்தினாலே பகையரசராணபூமியையுழுது பிளக்கப்பட்ட அருச்சுனா! அந்தந்தப் பூதங்களாலாகிற இதங்கள் அதனதனாலே யாகிறதல்லாமல் ஒரு பூதத்தின் தொ

நிலைவேறொருபூதஞ்செய்யமாட்டாது அதன் தன் விதத்தைக்கேள் சத்தியமான ஆன்மாவானது அழியாது இந்த ஆன்மாவினுடனே வேறான அநான்மாவென்று கலக்கப்பட்டபொய்யானதேகமானது நித்தியமாகாது இந்த அருத்தம் அறிவாலுண்டாகிய பொருளேயல்லாமல்வேறல்லஐயா இந்த அர்த்தத்தைஎன்னையறிந்தபேரறிவார்கள். அறியாதவர்களிதையறியமாட்டார்களென்றவாறு. ※ தெய்வத்தைகர்த்தாவென்றும், ஆன்மாவையகர்த்தாவென்றும், உடலையநான்மாவென்றும், வழங்கப்படுகையால் வேறெனவிரவுமென்றுபாடினார். பொய்யைதேகமென்றும், மெய்யை ஆன்மா வென்றும், சொன்னதேதென்னில் இவ்விடத்திற்சொன்னதெல்லாம் உடலுயிரண்டின்செய்தியாகையாலும் உடலமாயா சம்பந்தமா யழிகை யாலும், உயிர்நித்தியஞான சம்பந்தமாயிருக்கையாலும், சொன்னது. (யகூ)

யானும்வகையதுகேளெழுமொலியேமுதலியாவும்... ※
வானுதியில்வருபூதமும்வருநால்வருமிடர ... ......... ※
யானுதெழுமறியானையுமறிகாரணமதுவாய்...... ..... ※
போனுளொடுவருநாள்வழிபுணராததோர்பொருளே ※

(இ-ள்.) நானுகிற விதத்தைக்கேள் அருச்சுனு? எழும்புகிற சத்தமுதலான அஞ்சும் ஆகாசாதிபூதங்களில் வரப்பட்ட மகாபூதங்களும் உண்டாகிறகாலம் வருமிடமாய் நீங்காமலெழும்பப்பட்டஅறியானையும் அறியப்பட்டகாரணமாய்ப் போகிறகாலத்துடனே வருகிற காலத்தின்வழியைப் பொருந்தாத பொருளேநா னென்றவாறு. ※ மகாபூதமாவது பஞ்சீகரணத்தில் ஒன்றோடொன்று கலக்காமல் நின்றமுதற்பாகபூதம் இந்தமகாபூதங்களுண்டாகிற காலம் பிறக்கிறவிடமாய் அறியானையும் அறிவானையும், அறியப்பட்ட காரணமாய்த்திரிகாலத்தைச்சேராத பொருளேநானென்றது. (உய)

அழியாதமெய்யஃதியாதெனிலவிகாரதனையுருவா.... ※
யொழியாநிறைவொடுநீடியவெனதியானெனவுணரா... ※
வழியாமதியியல்பாவிதுசிலமாறுகொள்குவதாய்.... ※
மொழிவார்செயன்முடியாமையின்முயலார்கெடவயலார்.

(இ-ள்.) அழியாதசத்திய மெதுவென்றுகேட்கில் விகாரமில்லாத அஃதுவிகாரத்தையுருவமாய் அணுவளவிடமாகிலும் விட்டொழியாமல்நிறைந்தபரிபூரணத்துடனே வளர்ந்தது எனதெங்கிற சுத்த

மும், நானென்கிறஆங்காரமும் அறியாதவழியானது அது சுபாவத்தினாலே இது சிலவேறுபாடுகொள்ளுகிறதாய்ச்சொல்லுவாருடைய சொல்லுந்தொழில்முடியாதினாலே முயற்சியல்லவராகிய நினைக்கப்படாததாய்ச் சேடத்துக்கு அன்னியமாயிருப்பது ஆன்மாவென்றவாறு. ❁ சிலமாறுகொள்ளுவதாவது மாயையுடனே கூடியபோது தேகியாய்ச் சுதந்தரியாய் ஆங்காரியாய் நிற்பதுகருத்து. (உக)

இல்லாமையினியல்கேளெழுகழுகாழியினிடையே...*
யல்லாதெழு புனல்போலழி வுறவேயழி குதலா......*
வெல்லாவகையினுமாயதிவ்வுருவேயழிவதுதான்.....*
கொல்லாதழிகொலையானது குறுகாதது வெனநீகேள்...*

(இ-ள்.) இனியெப்போதுமில்லாததுஇருந்தும்உள்ளதுபோலக் காணுகிறதேகத்தினுடைய சுபாவத்தைக்கேள்! அருச்சுனா! கோடையிலெழும்புகிற பேய்த்தேராகிய கானலினிடத்திலே நிச்சயமானசலமல்லாமற் பொய்யாகவெழும்பப்பட்ட சலத்தைப்போல அழிவுண்டாகஅழிகிறதினாலே பொருந்தாத விதத்தினாலும் பொருந்தும் விதத்தினாலும், உண்டாகிய இந்தத்தேகமேயழிவது ஆன்மா அழிவதில்லை அது அவிகாரியானதினாலே தான் கொல்லாது தான் எல்லாவற்றிற்கு மன்னியமாகையாலே அதைக் கொலையானது சேராது அந்தஆன்மாவினுடைய சுபாவத்தைக் கேளென்றவாறு. ❁ கொலைசேராதென்பது அதையாராலும் கொல்லப்படாதென்பது ஒல்லாவகையினுமென்ற உம்மைஎதிரதுதழுவியஉம்மையாகையாலொல்லும்வகையினுமென்றெதிர்தழுவியது. (உஉ)

[கொச்சகக்கலிப்பா.]

ஊறுபடவொன்றிலேபிறத்தல்பிறந்துளதாதல் ... .....*
வேறுபடவளர்தல்வளர்ந்தயலொன்றாய்விளைந்தமைதன்
மாறுபடத்தேய்தலறமாய்தலெனவருகின்ற . ......... ..*
வாறியல்புமுடம்பன்றியறிவடையாதாதலினால் . ......*

(இ-ள்.) தூலசரீரமுண்டாக ஒன்றோடொன்று பரிசப்பட ஒன்றிலேபிறக்கிறதுபிறந்திருக்கிறது அந்தப்பருவம் வேறுபட வளருகிறதுவளர்ந்து அன்னியமானதொன்றாக விளைந்து அமருகிறது இவையெல்லாவற்றுக்கு மாறுபடக்கிழத்தனமாய்க்குறைகிறதுஇந்தவைத்

துந்திரச்சாகிறது என்றுவுரைப்பட்ட ஆறுகபாவமும் உடம்பையல்லாமல் ஆன்மாவையடையாவாம் எ-று. ❈ அறிவையான்மாவென்றது அசேதனமானதேகத்தைநடத்துகையால். (உ௫)

[கலிவிருத்தம்.]

நில்லாவுடற்கே நின்றேயுநித்தமாகியதுநாச..... ..... ................ .....*
மில்லாததும்பொய்ப்பிறப்பிறப்பொன்றறியாததுமற்றதுவறிந்தோர்
கொல்லார்கொலையேவலுஞ்செய்யார்கொலையேவிட்டிக்குலமறைக
ளெல்லாம்விதித்ததொழில்வினையேயியம்பிற்றென்றேயிதுதெளிநீ.

(இ-ள்.) நிலைமையாய்நில்லாமல் அழிகிறவுடலுக்கே ஆதாரமாகநின்றும் அந்தவுடலைப்போல அநித்தியமாகாமல் நித்தியமாகியது அழிவில்லாதது பொய்யானபிறப்பிறப்பென்ற இரண்டிலொன்றுமறியாதது ஆன்மா அதையறிந்தவர்கள் கொல்லார் கொல்லுவிக்கிறதுஞ்செய்யார் நாலென்றொருசாதியான வேதங்களெல்லாங் கொலையைமேவிட்டுக் குலாசார தன்மத்தைச் சொல்லிற்றென்று இதைநீதெளிவா யென்றவாறு. ❈ ஆன்மாவைநித்தியமாய் நாசமில்லாததாய்ச் செனனமரணமில்லாததாய் அறிந்தவர்கள் கொலைசெய்தாலும், செய்வித்தாலும் செய்ததுஞ் செய்வித்ததுந் தமக்கல்ல தேகத்துக்கென்று சாட்சியாய்ப்பார்ப்பார்களென்பதுகருத்து.

(இதுவுங்கலிவிருத்தம்.)

பீறியபோர்வையைப்பெயர்த்தும்பின்னரோர் ....... .... *
வேறியபோர்வையைவிரும்புவானென ........ .........*
ஊறியவுடம்பினிலுதித்தவுண்மைதான் ... ............... *
மாறியோருடம்பினைமருவுமண்ணனே ..... . . ... .......*

(இ-ள்.) கிழிந்தபோர்வையை விட்டுப் பின்பொருவேறான போர்வையை ஆசைப்பட்டுப் போர்த்துக்கொள்ளுவானைப்போலச் சீரணமுடைய தூலமானவுடம்பிலே பிரவேசித்த ஆன்மா அந்தச்சீரணதூலதேகத்தைவிட்டுவிலகி வேறொருதூலதேகத்தைக்கூடும்இராசாவேயென்றவாறு. ❈ இதனுள்தேகியான ஆன்மாசீரணதேகத்தைவிட்டு நூதனதேகத்தைதரிப்பதல்லாமல் அத்தேகத்தைப்போலத்தேகிநாசப்படானென்பது கருத்து. ❈ பெயர்த்துமென்றதுபீறினபோர்வையை வெறுத்துவிட்டுப்பின்பு வேறொரு போர்வையை விரும்பும்போது முந்தினபோர்வையைப்போலச் சிலநாளிலேகிழியுமென்

றறிந்தும் இனிமேல் கிழிகிறபோர்வையை இப்போது புதிதுகெட்டியாயிருக்குமென்று போர்த்துக்கொள்வதுபோல அழிந்ததேகத்தை விட்டும் இனியொன்றையெடுத்தாலும் அழிவதுதானேயென்றுசும்மாயிராமல் வேறொருதேகத்தைச்கூடுமென்றஉவமை. (உ௫)

(இதுவுங்கலிவிருத்தம்.)

உருப்பான்மைமற்றவனுக்கொருநாளுமின்மையாற்.... *
செருப்பாலவெம்படைக்கலங்கள்சேதிக்கமாட்டாவா--*
நெருப்பால்வெந்தழியாதுநீராலின்க்கொழுகாது... *
மருத்தாலுஞ்சயியாது மற்றதன்றனியல்கேளாய் .......*

(இ-ள்.) தேகசுபாவம் அந்தத்தேகிக்கு ஒருநாளுமில்லையாகையால் அந்தந் தேகியைச் சண்டை யிடத்துக்கு உபகரணமான கொடுமையுள்ள ஆயுதங்கள் பிளக்கமாட்டாவாம் நெருப்பால்வெந்துஅழியாதுதண்ணீராலிளகி யோடாது காற்றினாலுமசையாது இதுதவிர இன்னம் அதினுடையசுபாவத்தைக் கேளென்றவாறு. * தேகத்துக்குச்சகலவருத்தமுமுண்டென்பது கருத்து. சுகதுக்கஞ் சுபாவமானது தேகந்தேகசுபாவமானது தேகியாகையாற் செனனமரணதுக்கந்தேகத்துக்குச் சுபாவமாகையால் அதற்குத்துக்கப்படத்தேவையில்லையென்றது. ஆயுதமாவது பிருதிவினுடைய காரியமாகையால், காரியத்தையுடைய காரணமானமண் ஆகப்பிரிதிவிமுதல் நாலுபூதத்தாலும் அழியாதென்ற இவ்விடம் ஆன்மசாரூபம். (உ௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

எல்லாப்பொருட்கும் பழையதனை யெங்குந்தானாயிருப்பதனை
நில்லாத்தன்மையில்லதனை நிசமியத்துவத்தை நிலைப்பெறறை.
யல்லாப்புலன்களபதினொலு மறியாவறிவையறியாதே ........... *
இல்லாப்பொருள்போலழியுமெனவிரங்குகின்றதென்கண்டோ.

(இ-ள்.) எல்லாப்பொருளுக்கும் பழையபொருளானதைஎங்குந்தானாயிருக்கின்றதை நிலைமையாய் நில்லாமல் அழிகிற சுபாவமில்லாததை இன்றுபோலென்று மிருக்கின்றதைப்பெயர்ந்து போகாமல்நிலைமையால்நின்ற பேறுடையதை- இந்தக்குணங்களை யல்லாத பதினொலுகரணங்களுமறியாத அறிவான சைதன்னியத்தை இப்படிக்கொத்த ஆன்மாவை யறியாமல் இல்லாதபொருளைப் போல அழியு

மென்றிரங்குகிறது என்னகண்டோவென்றவாறு. ※ பழையதென்பது-அநாதி- எங்குந்தானாயென்பது - பூரணமான தன்மை - இல்லாதென்பது-அழியாதது - பதினாலுகரணமாவது இந்திரியம் பத்து கரணம்நாலு-ஆகபதினாலும் இல்லாப்பொருளென்பது மாயாசம்பந்தமான தேகாதிபிரபஞ்சத்தை. (உஎ)

(கலிவிருத்தம்.)

விவரனக்கொடுமெய்தளர்வாயேல்......... .........※
யாவர்பிறப்பவர்யாவர்களெனுஞ் ........ ........ ..... ※
சாவர்பெயரத்துமிவ்வாறுசனிப்பர் ........ ........ ※
காவலிதற்குள் தோகட்டேனகாண் ..... .... ... .......※

(இ-ள்.) இவர்கள்சாவர்களென்றெண்ணிக்கொண்டு நீ சரீரந்தளர்ந்து வாடுவாயாகில் ஆர்பிறப்பார்களோ அவர்களானாலுஞ்சாவார்கள். திரும்பவும்படியே பிறப்பார்கள் இதைவராமல் காக்கத்தக்ககாவலுண்டோ இல்லை இதுவிதியே யல்லாமல் வேறில்லை கண்டாய் என்றவாறு. (உஅ)

செறிந்ததெவ்வாறிவ ரென்றதுதேராய்..............※
பிறிந்திவர்போமிட மும்பெரிதோரா ..................※
யறிந்தது நீ நடு வேசிலநாளே ... ..........,............※
எறிந்திடுவேலிவர் பாலிடரென்னெ ...............※

(இ-ள்.) இவர்கள் சிருஷ்டிகாலத்துக்கு முன்னே யெப்படியிருந்தார்களென்றதையறியாய்-, இவர்களிந்தத் தேகத்தைப் பிரிந்துபோகிறவிடமும் வெகுவாய்விசாரித்தாலும் அறியாய் இவர்களை நீயறிந்தது நடுவேசிலநாளே யல்லாமல் அநேகநாளில்லை யெறியப்பட்ட வாயுகத்தையுடைய அருச்சுனா இவர்களிடத்திலே யுனக்குத் துக்கமென்னவோ சொல்லாயென்றவாறு. ※ வேலையருச்சுனவென்ற தாருபெயர். (உகூ)

(கொச்சகக்கலிப்பா.)

ஒருவனென்றுங்கண்டறியாததைக்கண்டாற்போலுணர்ந்திருக்கும் ※
ஒருவனென்றுங்கேட்டறியாததனைக்கேட்டான்போலுவக்கும் .... ※
ஒருவனென்றுமுரைத்தறியாததனையுரைத்தான்போலுரைக்கும்.... ※
ஒருவனென்றுங்கேட்டாலு மறியானிந்தவுண்மையினை........... .... ※
(௬)

(இ-ள்-) இந்த ஆன்மாவை ஒருவனென்றுங் கண்டறியா ததைக்கண்டாற்போலப் பார்த்திருப்பான். ஒருவனென்றுங் கேட்டறியாததைக் கேட்டவனைப்போலச் சந்தோஷிப்பிவான். ஒருவனென்றுஞ்சொல்லி யறியாததைச் சொன்னவனைப்போலச் சொல்லுவான். ஒருவனென்றுங் கேட்டாலுங் கண்டாலுஞ் சொன்னாலு மறியானென்றவாறு. ※ கேட்டாலுமென்ற உம்மையாற் கண்டாலுஞ் சொன்னாலும்; அறியானென் றெதிரதுதழுவியது. (கூ0)

இதனாலெவரு மறியாத பொருளைத் தெரிந்து கொண்டு நீ ... *
இதனாலவனையான் கொன்றேனெனுந்தொழிலாயினனைக்கேண்
மதனாலாயமறைமொழியு மன்னர்தருமம்வாளமொன்......*
பதனாலமோ துடங்கிதனை யறனன்றெனநீயையுறேல்.. ..... .... *

(இ-ள்.) சகலதேகங்களினு மிருக்கிறவனாய் - எவர்களு மறியாத ஆன்மாவை நீ தெரிந்துகொண்டு இதனாலே யிவர்களை நான்கொன்றேனென்று அகம் வகிக்கிறதை விடுவாய். அருச்சுனா இன்னமுங் கேள் சாதிநாலாகச் சொன்ன வேதவாக்கியமும் அரசர் தருமங்கீர்த்திபிரகாசமுள்ள சண்டையென்று சொல்லுகிறதினாலே சண்டையையே தொடங்கு இந்தச்சண்டையைத் தருமமல்லவென்று நீ சந்தேகப்படாதேயென்றவாறு. (கூக)

(கலிவிருத்தம்.)

செய்தியின்றியத் தேவர்கள்வானுல.................... *
செய்தநின்றதிதுபெறுவார்கள்கேள்.................... *
வைதிகத் தருமாதல மேற்கொடு .. ...................... *
மெய்திருந்திய வேந்தர்களல்லரோ........................ *

(இ-ள்.) தவந்தானமுதலான வருத்தமுஞ்செயலில்லாமல் அந்தத்தேவர்களுடைய தேவலோகத்துக்குட்போகாநின்றது இப்படிக்கொத்த சண்டையைப் பெறுவார்களைக்கேள் வேதவாக்கியஞ் சொல்லப்பட்ட பெரியதவத்தை மேலாகக்கொண்ட திருத்தமானதேகங்களையுடைய அரசர்களல்லவோ வென்றவாறு. (கூஉ)

இன்றிவ்வாளமர் தன்னிலெதிர்த்துநீ .......... ...*
பொன்றில்வானவர் போற்றவிண்காக்குவை... *
வென்றிசேரிவ் வேந்தரொலாந்தொழ ........ *
நின்றுஞாலமளிக்குவை நீயரோ .................... *

(இ-ள்.) இப்போது இந்தக்கீர்த்திப் பிரகாசமுள்ள சண்டையிலெதிர்த்து நீ செத்தால் தேவர்கள்தோத்திரம்பண்ணத்தேவலோகத்தையாளுவாய்- சாகாமற் செயமடைந்தால் இந்தராஜாக்களெல்லாம் வணங்கநின்று பூமியையாளுவாய் நீ யென்றவாறு. (௩௩)

ஆவதானவமர்தொடங்காயெனிற் ..... ..... *
போவதான புகழுந்தருமமும் ..... ..... *
பாவமாம்பழி யாயிப்பழியினிற் ..... *
சாவதானது மேவுதலையல்லவோ ..... ..... *

(இ-ள்.) இராஜதருமமான சண்டையைத் தொடங்காயென்னில்தருமமுங்கீர்த்தியும்போய்ப்பாவமும்பழியுமாகும் அந்தப்பழியிலும்சாவேதலைமை யல்லவோவென்றவாறு. ☼ சாவுசிரேஷ்டமாகிப்பழி நாணங்கெடுக்கிறதாம் ஆகையால் சாவினுங்கெட்டது அபகீர்த்தியென்பது கருத்து. (௩௪)

அன்றியுமுனைப்பஞ்சினனென்பரா ..... *
னின்றியங்குநிலத்துமுன்னீசெய்த ..... *
வென்றியும்பழியாய்நிற்குமேலவ ..... ..... *
ரொன்றியம்பினுனக்கிதன்மேலுண்டோ ..... *

(இ-ள்.) அல்லாமலும் உன்னைப்பயந்தானென்றுங் கொஞ்சமாகப்பேசுவார்கள் முன்னேபூமியிலே நீ செய்தநிலைமையாக நின்றவிளங்கப்பட்ட வெற்றியும்பழியாக எக்காலமும்நிற்கும்-மகாரதக்காரருன்னையொன்றுசொன்னால் இதற்குமேலான பொல்லாங்கு வேறேயுண்டோவென்றவாறு. ☼ மேலவரைப்பெரியோரென்றுசொன்னால்ஏற்றக்குறைச்சலில்லாதவர்களைப் பெரியோரென்றுலகஞ்சொல்லுகையாலும் இந்தக்கவியிலே பயப்படப் பண்ணுகிறவனைப்பயந்தவனென்றுஞ் சண்டைபண்ணிச் செயித்தவெற்றியை வஞ்சனைபண்ணிசெயித்தபழியென்றுஞ் சொன்னதினாலு மிப்படிச் சொல்லுகிறவர்களைப் பெரியோர்களென்று சொல்லக்கூடாததினாலும் அதிரதர் சமரதர்-அர்த்தரதரெனசொல்லக்கூடாததினாலும், மகாரதரென்று சொல்லப்பட்டது. (௩௫)

தற்றவின்பமுந்துன்பமுந்தோல்வியும் ..... ..... *
வெற்றியும்விழிவுமிகுபேறுமென் ..... ..... *
றுற்றவின்னவாமொருதமனத்தருய் ..... ..... *
கொற்றவெஞ்சமஞ்செய்குற்றமில்லையால் ..... ..... *

(இ-ள்.) நெருங்கின சுகதுக்கமும் அவசெயமும், நஷ்டமும் மிகுந்தலாபமுமென்றுவந்த இவ்வகளுக்குச் சமமான மனசுடைய் வனாய்வெற்றியும்உக்கிரமுமுடையசண்டையைச்செய்யஇப்படியானு க்குற்றமில்லை — எ-று. ※ குற்றமாவதுபாவம். (ருள)

(கலிவிருத்தம்.)

கதுவியபொருண்ஞானங் கறையறு முறையாலே.... *
பொதுவறுவகைநீயும் புலனறிவகையானு ......... *
மெதுவொருவினையாலே யிருவினைகளும்வீடு ......*
மதுசுனையறிவார்விட்டணைபவமதுகேளாய்........ ......*

(இ-ள்.) இப்படி யுறுதியாகபிடிக்கப்பட்ட பொருளானதுஞான ம் இந்த ஞானத்தைக் கறையற்ற வசனத்தினலே யெல்லா ருக்கும் பொதுவென்பதில்லாமல் அறும்படிக்கு நீயும் ஐம்புலன்களாலும், அறியும்படியானுய் எந்தக்கர்ம்மமானது ஒரு கர்ம்மத்தினலே நல் வினை தீவினையான இரண்டும் அழியுமோ அந்தக்கர்ம்மத்தைஅறிகி றவர்களே மோக்ஷத்தையடைவார்கள். அந்தக் கர்ம்மத்தை யினிச் சொல்லுகிறேம் கேட்பாயாக வென்றவாறு. ※ ஒரு கர்ம்மத்தின லென்றதாவது அநேககர்ம்மமென்று பயப்படாமல் ஒரு கர்ம்மத்தி னுலேயிரண்டுகர்ம்மங்களும் கெடச்சொல்லுகிறேம் கேளென்றது.

அரிதினேரடியேனுஞ் செயினுமழிவாசா........ .... *
திரிதரவிடையூறும் வகைகளுமிடைகூடா ......... ........*
தெரிபொருள் சிறிதேனும் பெருமயறெறுமானு......*
லுரியதிவ் வுலகோர் பாலிதுவலதுளதோதான்.........*

(இ-ள்.) அந்தகர்ம்மத்தை நாலுபாதமாகப் பிரித்து அதிலஒில்அ ரிதாகஒருபாதம் செய்தாலும் அதுநாசமாகாது இதைவிட் டோட த்தக்க இடையூறுனவிதங்களும் நடுவேவந்துகூடாது இப்படிப்ப லனையிச்சியாத கர்ம்மமென்று தெரியப்பட்டபொருள் கொஞ்சமா னுலும்பெரிய மயக்கத்தைக்கெடுக்குமானல் அதுவேயுரியது இந்த வுலகத்தாரிடத்திலே இது அல்லாமல் வேறுண்டோ வில்லை — எ-று. ※காமியகருமங்கள் அனேகப தகமுமறுப்பது பலனிச்சியாத கரு மமொருபாதம் அதுவொருபாதமானாலும் அந்தப் பாதத்தையே செய்யென்பது கருத்து. (ருஅ)

தெளியவருணர்வொன்றே தெளிவிலருணர்வோதிற்... *
றளிர்திகர்பலவாகுந் தருபயனதுமேவு ... ... ... *
மொழிமறைநெறிமேலாயுணர்பொருளெனவோது.. *
மளியவர்தெளியாதா நவையல தறியாரால் ... .. ... ... *

(இ-ள்.) பலனை ஆசைப்படாமல்மோக்ஷத்தில் இச்சையுண்டாய்க் கருமஞ்செய்யத் தெளிவுடையவர்களுக்கு அறிவு ஒன்றேயல்லாமல் அனேகமாயிராது காமியகருமங்களையே செய்கிற தெளிவில்லாதவர்களுடைய அறிவைச்சொல்லில் நிச்சயமில்லாத தளிரைப்போல அனேகமாகுங்கருமத்தினாலே வரப்பட்ட பிரயோசனத்தைச்சொல்லியிருக்கப்பட்ட பிரகாசமுள்ள வேதமார்க்கத்தையே மேலாயறியப்பட்டபொருளென்று வாதுபேசப்பட்ட அளியவர்களேமயக்கந்தெளியாதவர்கள் அந்த அளியவர்கள் அந்தக்காமிய கருமத்தையல்லாமல் மோக்ஷத்தையறியார்களென்றவாறு. ※ அளியவர்களாவது பிறரால்அளிக்கத்தக்கார் தனக்கென வொருவறிவில்லாதாரென்பது அதாவது கருமமேயல்லாமல்வேறில்லையென்றுதிடமாகப்பேசுதல்.

புண்ணியவுலகத்தைப் பொருண்முடிவின்வைப்பார் .. *
கண்ணியபிறவிக் கே கருவழிநெறிநிற்பார் ... ... ... *
பண்ணியவினைகட்கே பயனினையவர்கட்பா........... *
னுண்ணியபொருள்செப்பார்நுணிகியவறிவுற்றோர்... *

(இ-ள்.) பலனையிச்சித்து யாகாதிகருமங்களைப் பண்ணினவர்கள் புண்ணியலோகமான சொர்க்கத்திலே பிரயோசனமுடிவை வைத்துப்போகங்களை அனுபவிப்பார் அறிவுடையவர்கள் பொல்லாதென்று நினைத்துப் பிறவியிலே கெர்ப்பவழியிலேபிறந்து அந்தக்காமிய கருமங்களையேசெய்து சொர்க்கபூமியிரண்டுக்கும் போக்குவரத்தாய் ஆத்மஞானங்கேட்டு நிற்பார் பண்ணப்பட்டகருமங்களுக்குள்ள பலனை நினைக்கிறவர்களிடத்திலே நுண்மையான பொருளைச்சொல்லார்கள்- நுண்மையான அறிவுபெற்ற பெரியோர்களென்றவாறு. ※ நுண்மையாவது சூட்சுமம், (சய)

நவைதருகுணமூப்பா னனுகியபலனுய்த்தார் .. ...... *
சுவைதெரிகுணவைப்பார்தொழின்மறைநெறியுற்றே *
கவைதருகுணமுற்றோர்கருமமதிடனுற்றார் ... ...... ... *
அவைகெடவ்ருமெய்ப்பாலறிவினையெனநிற்பாய்.... *

(இ-ள்.) ஆனாற்காமியகருமங்களை வேதத்திலே சொல்லுகிறதேயென்றால் கேள் குற்றத்தைக்கொடுக்கப்பட்ட குணங்கள் மூன்றினிடத்திலேயபலனை வைத்து நிறைந்த பலவிஷயத்தைச் சுவையைத்தெரியப்பட்ட முக்குணங்களிலே வைப்பாகவிருந்த கருமங்களை வேதத்திலேசொன்ன மார்க்கத்துடனேசேர்ந்து மூன்றுகூப்பாகத் தரப்பட்டமூன்றுகுணத்தையு மடைந்தவர்களே பலனையிச்சித்த கருமத்தினிடத்திலே கூடினவர்கள் அந்தமூன்றுகுணங்களுங்கெட விட்டுக் குணாதீதனாகிய அரிய ஆத்மாவினிடத்தில் ஞானியென்று திடயோக நிற்பாயென்றவாறு. (௪௧)

குளமுதலியவற்றே குளிர்முதலிய துய்ப்பா...... .....*
ளைவறுபுனல் பெற்றாலவைகொளலருமைத்தோ... *
வளமுறுகருமத்தால் வருசிறுசுவையற்று ... ... .... *
உளமகிழ்பிரமத்தேயுட்கொளலுரிமைத்தால்...... ...*

(இ-ள்.) ஆனால்வேதஞ்சொன்ன கருமங்களைவிடலாமோவென்றால் குளிர்ச்சிமுதலாகியன வேண்டியதாகமானவன் குளமுதலான வற்றிலே அளவற்ற தண்ணீரைப்பெற்றால் அவற்றில்தனக்குவேண்டிய தண்ணீர் எடுத்துக்கொள்ளுகிறது அருமையோ அல்லவே அதுபோல்வளமையான கருமத்தினாலே வருகிற அற்பவிஷயத்தால் இச்சியாவிட்டால் இருதயமகிழப்பட்ட பிரமத்திலேயுள்ளதைக் கொள்ளுகிறதரித்தாமென்றவாறு. ※ வேதங்களிற் சொன்ன அனேகத்தால் அறிவுள்ளவன் மோக்ஷத்துக்கு அதிகாரியென்பது கருத்து. (௪௨)

அறிவினையறிகிற்பாயல்லமு மடைகுற்றே.......... .... *
பிறிபொழுதின்னொத்தேபெருவினைதனினிற்பாய்... *
நெறிகருமறிவெட்டா வகைவினைதனினிற்பார் ...... *
சிறியவரெனமிகவோர் தெளிபவர் செயலைக்கேள்.... *

(இ-ள்.) விவேகியான நீ அறியத்தக்க கருமத்தையறிவாய் கருமத்தினால்வருகிறபலன் சகலமுங்கிடைத்தபோதும்பிரிந்த போதுஞ்சமனாகியபெருமையுள்ள கருமங்களில் நிற்பாய் மோக்ஷத்தைத் தருகிற அறிவுக்கெட்டாத காமியகருமத்தில் நிற்கிறவர்கள் கொஞ்சமானவர்கள் இவர்களால் என்னையறியக்கூடாது என்னைப்பெரியோர்கள் தெளிந்தறிவார்கள் அவர்கள்செய்கிற கருமத்தைக்கேளென்றவாறு.
※ பெருவினையாவது பலனையிச்சியாத கருமம். (௪௩)

தருபயனதுவிட்டே தகுவினைசெயலுற்று ........ .........*
லருமயலறு மற்றலறிவுற மறிவுற்று .. .... ..... ........ *
வி ருவினை விடும்விட்டாலிழிவொடுபெறு ..ற்பா ..... ..... *
லொருமனம் வருமத்தா லெனையுணருள்ளிற்பார்......*

(இ-ள்.) கொடுக்கப்பட்ட பிரயோசனத்தை நிச்சயமாகவிட்டு அவரவருக்குத் தக்க காரியத்தைச்செய்தால் வேறொன்றாலுமறாதமயக்கமறும் மயக்கமற்றால் அறிவுண்டாம் அறிவுண்டாகில் நல்வினை தீவினையான இரண்டுகருமமும் விடும் இந்த இரண்டும்விட்டால்இழக்கிறதுடனே பெறுகிறதுமான நஷ்டம் வந்தவிடத்திலும் ஆதாயம்வந்தவிடத்திலும், ஒருமனதாகவரும் அந்தமனதினாலே என்னையறிவார்கள் அறிவுடையவர்களென்றவாறு. ❁ பலனையிச்சித்தால்மயக்கம் விடாது விடாவிட்டால்ஞானம்பிறவாது பிறவாவிட்டால்புண்ணியபாவம்விடாது விடாவிட்டால் இலாபநஷ்டத்திலேமனதுஒருமைப்படாது படாவிட்டால் என்னையறியமாட்டாரென்பது. அருத்தாபத்தி யொருமனமாவது இலாபம் வந்தபோது சந்தோஷமில்லாமலும் நஷ்டம்வந்தபோது துக்கமில்லாமலும் இந்தஇரண்டும் பிராரத்துவமென்றிருத்தல் தகுவினையாவது குலத்தருமம்-தகாவினையாவது பரகருமம்-தருபயனதுவிட்டே தகுவினைசெயலுற்றென்றது பிரயோசனத்தையிச்சியாதவன் தகாவினையுஞ்செய்யலாமென்றெண்ணமல் தகுவினையே செய்யவேண்டுமென்பது கருத்து. (சச)

பேதைமைபடைகுற்றே பிறிதுறுமன்மற்றே .........*
பேதமிறெளிவுற்றணியாதொரு பொழுதப்போ..... . *
தோதலோடுலகத்தே யுரைகளினுளம்விட்டா.... ...... *
ஞுதவிலெனைமெய்ப்பாடடைதருநெறியைக்கேள்......*

(இ-ள்.) அறியாமையையடைந்து மோட்சத்துக்குவேறானசொர்க்காதிபதங்களை இச்சித்திருக்கப்பட்ட மனதானது அந்த அறியாமையைநீக்கிச் சொர்க்காதிபதங்கள் அநித்தியமுந் துக்கமுமென்று குற்றமில்லாத தெளிவையடைந்தான். அதுஎப்பொழுதோ அப்பொழுதே உலகத்திலேசொல்லுடனே வுரைகளிலே மனத்தை யிருத்தாமல்விட்டான் ஆகையாலே யென்னைமெய்யாக அடைகிற மார்க்கத்தைச்சொல்லக்கேளென்றவாறு. ❁ அறியாமையாவது மயக்கம்மனத்தில் தெளிவாவது சொர்க்காதிபதங்களை நித்தியமென்றதுஞ் கக

மென்றுந்தடுமாறி மயங்காமல் அநித்தியமென்றுந் துக்கமென்றும்நிச்சயம் பிறந்ததுக்கு மெய்ஞ்ஞானமென்றுந் திடஞானமென்றும் தெளிவென்றும் பேராகையாற் குற்றமில்லாத தெளிவென்றார். இந்தத்தெளிவுபிறந்தபோதே நூல்களிலும் அதினுரைகளிலும்மனம்போகாமல் விட்டானென்பது கருத்து.— (௪௫)

விடலருமவகையிதால் விளைபயனைவிட்டே ....*
கடவியவினைமுட்டா வகைசெய்துகழிவுற்றோர் *
உடலொடிவ்வுலகத்தே யுளனெனநிகழ்பெற்றே*
இடர்களையறவிட்டா ரெனவறிவகைபெற்றார் *

(இ-ள்.) விடுதற்கரிதான இந்தவகையினாலே விளையப்பட்டபிரயோசனத்தைவிட்டே நடக்கப்பட்ட காரியத்தைத் தடைபடாதபடிசெய்து கழித்தபேர்கள் இந்தவுலகத்திலே இப்போதிருக்கிறாற்போலெப்போதுந் தேகத்துடனே யிருக்கிறானென்னப் பட்டபேறுபெற்றே துன்பங்களையறுத்ததாக விட்டபேரென்னையறியப்பட்டவகையைப் பெற்றாரென்றவாறு. ※ கடவிய வினையாவது தெய்வச்செயலாலே நடத்தப்பட்டகாரியம் விளைபயனாவது உண்டாகிறபிரயோசனம்-விடலரும்வகையாவது அனுமானத்தைநம்பிப்பிரத்தியக்ஷத்தைவிட அரிதாகையால் விடலரிதென்றது. (௪௬)

[கொச்சகக்கலிப்பா.]

தலைநின்றபொருளையுமின்றியேசலியாதே..... ........ *
நிலைநின்றதியாதொருபோதப்போதுநெறிநின்றாய் ..*
கலைநின்றமெய்ஞ்ஞானயோகங்கண்ணுறுமென்னச் ...*
சிலைநின்றதோள்விசையனிவ்வண்ணஞ்செப்பினான் ... *

(இ-ள்.) எல்லாவற்றிற்குந் தலைமையாக நின்றபொருளில்சந்தேகமில்லாமற்சலியாமல் நிலையாகநின்றதெப்போதோ அப்போதுமோட்சமார்க்கத்திலேநின்றாய் அதினாலே சாத்திரங்களிலே அசையாமல்நின்றமெய்ஞ்ஞானயோகம் காணப்படுமென்று கிருஷ்ணசுவாமிசொல்ல-வில்லுநிற்கப்பட்ட கையையுடைய அருச்சுனன் இந்தப்படிச்சொன்னானென்னறவாறு. ※ கலைநின்றஞானமாவது-வாசகஞானத்தைத் நம்பாமல் மயங்கையி லந்தமயக்கந்தீரவும் நம்பவுந்திடம்பிறக்கவும் வேதமுதலான வைகளிலே சொல்லாநின்ற ஞானத்தைக்காட்டுகையாம். (௪௭)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இவ்வகையவனை நின்றோ ரெவ்வகையுரைப்பரந்தச் ... ...... . ....... ※
செவ்வகையிலாதோன் செய்யும் செயல்களென்செப்புமாறேன்...※
மெய்வகையருளுகென்ன விண்ணையேமுதலாக்கொண்ட......... ※
வைவகைப்பொருளுமீன்ற வவனதையருளிச்செய்தான் ......... ... ※

(இ-ள்.) இந்தப்படி பிரமமே நித்தியமென்று சலியாமல்நின்று அந்தக்காரியத்தைச்செய்து அழிக்காத காரியத்துக்கு முயற்சியல்லாமலிருக்கிற சமாதியறிவுடையவன் அவனே தவிர நின்றபேர்கள்-எப்படிச்சொல்லுவார்கள் அந்தச் செய்யும் வகையென்று மில்லாதவன் செய்யப்பட்ட செயல்களென்ன பேசுகிறவழியென்ன இவைகளை மெய்யானவகையாக அருளிச்செய்யுமென்ன ஆகாயத்தையேமுதலாக்கொண்டு வைத்துக்கொண்ட அஞ்சுவகைபூதங்களையும் உண்டாக்கின அந்தச்சுவாமி இதையருளிச் செய்வா னென்றவாறு. ※ பிருதிவிமுதலாக வழங்கினாலும், சோத்திராதி- சத்தாதி- வக்காதி-வசனாதி-முதலான தத்துவ உற்பத்தியுஞ் செயலும், ஒழுக்கமும் சொல்லும் மேலாக,ஆகாயமுதலாய் வைத்துக்கொண்டதனாலே-மேற்றேகாரம் வருவித்தார். (௪௮)

அறிவினையழகிதாக வறிந்தெலா வரவுநீக்கி ........................ ※
வெறிதருவெருளிகாம மயக்கநீத் தின்பதுன்பம்...........※
வறிதெழுபொழுதில்வாடி மகிழ்ச்சியென்றிவையுமாய்த்துப்.※
பொறிதருபுகழுந்தீங்கும் போற்றல்போற் றமைபோக்கி ※

(இ-ள்.) ஆத்மஞானத்தை நன்றாகவறிந்து அந்தமனதுக்கும், புத்தி யிந்திரியங்களாலும் வருகிறவெல்லா ஆசைகளையும், போக்கி போதப்பட்ட-கோபம்- ஆசை- மயக்கம்- இந்தமூன்றையும்விட்டு, விருதாவாக சுகதுக்கங்களெழும்புகிறபோது சந்தோஷமுங்கிலேசமுமென்ற இந்தவிரண்டையும்கெடுத்து, உலகத்திலெழுகிறகீர்த்தியைப் பரிபாவித்தலும், அபகீர்த்தியைப் பரிபாவியாததும், போக்கியென்றவாறு. (௪௯)

ஆமைதன்னுறுப்போனைந்துந் தன்னுளேயடக்குமாபோற்......※
றிமைசெய்புலன்களைந்துந் தன்னுளேசெறியச்சேர்த்தி......... ... ※

வாய்மையினிகழுமன்னே ழுத்தவும்படுகின்றாற்... ..........*
றூயமைசெய்தவையைத்தானேச் சொல்லுவதவன்றன்சொல்லே.*

(இ-ள்.) ஆமையானது தன்னுடைய வுறுப்பான நாலு காலும் ஒருதலையும் ஆகிய அஞ்சையுந் தன்னுக்குள்ளே யடக்குகிறவழியைப் போலப் பொல்லாங்கு செய்யப்பட்ட அஞ்சுபுலன்களையுந் தன்னுள்ளேயடங்கச்சேர்த்து வாக்கினாலே நிந்திக்கிறதும் வாழ்த்துகிறதுஞ் செய்கிறவர்களாலே இரண்டையுஞ் சமனாக்கியப்போதே மனதைச் சுத்தஞ்செய்து அந்தமனதே தானேச்சொல்லுகிறது அவனுடைய சொல்லென்றவாறு. (௫௰)

குறையுமாற்பணியற்றாலுங் கொண்டவிப்புலன்களெண்ணி, ........*
லறைகடலனையவெஞ்சத் தவாவுறுவழியினில்லா.....................*
யறைமொழிடலவுமோதி யடக்குவான் மனத்தைவாங்கிப் ........*
பொறைகெடப்புலன்களைந்தும் பொறியிலேபோக்குங்கண்டாய் *

(இ-ள்.) இப்படி யடக்கிக்கொண்ட இந்த ஐந்துபுலன்கள் செயலற்றாலும் ஆத்மஞானங்குறையுமாகில் அளவில்லாத அலைகளாலேசத்தமுள்ள கடலைப்போன்ற மனதிலே ஆசையுறாத ஆத்மஞானத்தினிலில்லாமல் வேதவாக்கியங்களை அனேகமும் ஓதியடக்குகிறவனுடைய மனதை அஞ்சு புலன்களும் வாங்கிப் பொறுமைகெடத்தக்கதாக அஞ்சுபொறிகளிலும் போகவிட்டுக்கெடுக்குங் கண்டாய் அருச்சுனனேயென்றவாறு. ஆத்மஞானம் வருமாகில் ஆசைவிடுமென்றும், ஆத்மஞானத்தில் நின்றவனுடைய மனதைவிடயங்களாகிய புலன்கள்கெடாதென்றும், அப்போது இந்திரியங்கள் செயலற்றுச் சடமாமென்றும், அருத்தாபத்தியாலிந்திரியங்களுடைய செயலாவதுவிஷயங்கள் அதையறிதலாவது - அனுபவியாதுவிடுதல் ஆகையால் ஆத்மஞானமில்லாமல் இந்திரியங்களை அடக்கிவிஷயங்களையனுபவியாமல் விட்டாலும், ஆசைவிடாதென்பதும், ஆத்மஞானத்தில் நில்லாமல்-வேதவாக்கியங்களினாலடக்குகிறவனுடைய மனதை விஷயங்களிந்திரியங்களிலே போகிக்கக்கெடுக்குமெனவேமோக்ஷத்திலேசெலுத்தாதென்பதுங் குறிப்பு. (௫௧)

ஆதலாற்புலன்களைந்து மடக்கரிதடங்காவாகிற் ... . ... *
றீதலாக்கருத்துந்தீதா லவற்றிலேசெல்லுஞ்சென்றாற்..*
காதலாற்புகைந்துவெய்ய காமமாக்கொளுமக்காம. . *
மேதிலாக்காமத்திய வெகுளியாயெரியுமன்றே.... ....*

(இ-ள்) ஆத்மஞான மில்லாதவனுடைய மனதைவிஷயங்க ளிந்திரியங்களிலே செலுத்தும், ஆகையாலே ஐம்புலன்களையும் அடக்குவது அரிது அது அடங்காதாகிற் பொல்லாதல்லாத நல்லமனதும் பொல்லாதாய் அந்தப்பொல்லாங்கிலேபோம்- போகூல்விஷயவிச்சையினாலே அந்தமனது புகைந்து விருப்பத்தையுடைய காமமாகக்கொள்ளும் அந்தக்காமம் மனதிற்கு அன்னியமாகாமலொன்றாகியேபொல்லாத கோபமாகிப்பெரியுமென்றவாறு. ஐம் விடயங்களடங்காவிடில் மனதுபுகைந்து சொலுந்தியெரியுமெனபது மனதுளசனுடலேகூடிற்றே அதுபோலே நடக்கையாலும் ஞானத்தைக்கூடி மோக்ஷத்தைப்பெறச் செய்வதுமாகையால் நல்லமனதெனறூர் (ருஉ)

எரிந்திகர்வெகுளிபொங்க மயக்கம்வந்தெய்துமெய்தத் .... ...*
தெரியவைகளிதையுளுள்ளந் தெரிந்தவைகிதைந்தபோதே.....*
யுரியபெயப்புணர்வு மாயுபுணர்வுமாய்ந்தொழிந்தவாறே... *
யரியவென்றறிஞர்பேசு மனைத்துமாய்ந்தொழியுமன்றே .....*

(இ-ள்) இப்படிநெருப்பை யொப்பானகோபம் கொதித்தெழும்ப அப்போது அஞ்ஞானமுண்டாம்- அஞ்ஞான முண்டாகவே அப்போதே ஆத்மஞானத்தைத் தெரிகிறபுத்தியழியும் மனதுதெரிந்தபுத்தி யழிந்தபோதே யுரித்தானசத்திய ஞானம்நாசமாம் தெளிந்தஞானம் நாசமாய்ப் போனவுடனே பெரியவர்கள் அரிதென்று சொல்லப்பட்ட சகலமும் நாசமாய்ப்போமென்றவாறு. (ருங)

வேண்டல்வேண்டாமையின்றி மிகைசெலாப்புலன்களாலே ..... .. *
மாண்டபோகங்கடுய்ப்பான் மனங்கலக்குறுஞ்மற்றத்தா .... ........ *
வீண்டியதெளிவுண்டாமாற் றெளியவேவமெய்க்லேயின்றிப் ............ ,*
பூண்டநோய்நீங்குநீங்கிற் புலனலாப்பொருளுந்தோன்றும்........*

(இ-ள்) தன்தன் வழியேபோகாம லடங்கின விஷயங்களாலேமகிமையுள்ள போகங்களை - விருப்பு வெறுப்பு இல்லாமல் அநுபவிக்கிறவன் மனசுகலக்கமடையான் அந்தக்கலங்காத மனதினாலேநெருங்கிய தெளிவுண்டாம் தெளியவே பிரமாண மில்லாமற் பூண்டபிறவிமுதலான வியாதிநீங்கும், நீங்கினால் விடயங்களை யெல்லாமென்றிருந்ததினாலே அந்த விடயங்களல்லாத பரமாத்மாவும் பிரசன்னமாமென்றவாறு. ஐம் நெருங்கியபொருளு மென்றதுதோன்றும் பொருளுந்தோன்று மென்றகிறப்புமை. (ருச)

அடுத்ததந்தொழில்செய்யாதார்க் கறிவில்லையறிவின்றாக... ......*
விடுத்தமெய்ப்புணர்வின்றாமால் மெய்ப்புணர்வில்லையாகத்......... ...*
தொடுத்தபின்சித்தசாந்தி தோன்றிடாததுதோன்றாதே........ *
லெடுத்தநல்லின்பமென்று மில்லையேயிசைக்கவேண்டாம் ........ *

(இ-ள்) பிரசன்னமாக அடுத்த பரமாத்மாவினுடைய தொழிலான ஞானயோகத்தைச் செய்யாதவர்களுக்கு ஞானமில்லை ஞானமில்லையாகவே சகலமுமித்தையென்று பெரியோர்கள் கைவிட்ட மெய்ஞ்ஞானமில்லையாம் மெய்ஞ்ஞானமில்லையாகவே மோக்ஷமேயதுவாகத் தொடுத்த இனிதானசித்த சாந்திதோன்றாது அது தோன்றாதாகில் மேலாகவெடுத்த மோக்ஷசுகமென்னைக்குமில்லை உண்டென்றுசொல்லவேண்டாவென்றவாறு. ❀ மித்தையாவதுபொய் . (௫௫)

ஆறுசெல்பொருள்கடுய்க்கு மைம்புலன்களுக்குப்பின்னே .... .... *
காறொடர்நெஞ்சையந்தப்புலன்களேகலக்குமாகே ......... ...*
ஞாறுசெய்கடலுளோடுங் கலத்தினையுடன்செல்காற்றே.......... .... *
வேறுசெய்தறைந்துமாய்த்து வீழ்த்துமாய்போலவேயாம்......... *

(இ-ள்.) வழியாகப்போகப்பட்ட போகங்களை யனுபவிக்கப்பட்டவிடயங்களுக்கும் பிறகேகாலந்தொடரப்பட்டமனதை அறிந்த துன்பத்தைச்செய்யப்பட்ட விடயங்கள்தானே கலக்குகிற வழியைக்கேள் அருச்சுனா கடலினிடத்தோடுகின்ற மரக்கலத்தை அந்தமரக்கலத்துடனேகூடப்போகின்ற காற்றானதானே மோதி வேறுபடுத்தி அழித்துவிழப்பண்ணுகிறாற்போலவே யாமென்றவாறு. ❀ இதனால் விஷயங்களின் பிறகேதொடருகிற மனதை அந்தவிடயங்களே தெளிவைக்கலக்கி ஆத்மஞானமில்லாமல் மயங்கப்பண்ணுகிறதெப்படிப்போலவென்னில் கடலிலோடுகிற மரக்கலத்தைக் கூடப்போகிறகாற்றே கெடுத்ததுபோலவாமென்பது ஆத்மஞானத்துக்குஉவமைகடல் அதிலேநடக்கிறமனதுக் குவமை மரக்கலம் அதைக்கெடுக்கிறவிடயங்களுக்கு உவமைகாற்று ஆகையால் விடயங்களின்பிறகேதொடராமல் ஆத்மஞானத்தைத்தொடர வேண்டுமென்பது குறிப்பு. (௫௭)

யாதொருபொருளையெல்லா வுயிர்களு மிருள்போற்காணு........*
ஓவாதருஞானியத்தை யுளங்கையிற் கனிபோற்காணும்..........*

யாதொருபொருளையெல்லா வுயிர்களுமெங்குங்காணும்...... ...*
காதலில்யோகியத்தைக் கண்ணினாற்றெரியக்காணான் ........ ..... .. *

(இ-ள்.) எல்லாச்சீவன்களும் யாதொருபொருளை யிருள்போல எங்குங் காணாவோ அந்தப்பொருளைச் சொல்லவுரிதானாலுள்ளங்கையிலிருக்கிற நெல்லிப்பழத்தைப்போலக் காண்பன. எல்லாச் சீவன்களும் யாதொருபொருளை எங்குங் காண்பனவோ அந்தப் பொருளை ஆசையில்லாத யோகி - கண்ணிலே தெரியக்காணானென்றவாறு. ☼ தேகிகாணாப்பொருள் ஆத்மா தேகிகாணும்பொருள் விஷயங்கள் ஆகையால் ஆத்மாவை ஞானிகாண்பான் விஷயத்தை யோகிகாணானென்பது குறிப்பு. (௫௭)

நீரினிறைந்துநின்ற கடலிலே நெறிமேற்கொண்டு.... ... *
நீரினிறைந்தவாறு விழுமது நெறியுறாது .... ......... . .. .... *
தேரினதுபோலாசை செறிந்தவர் திறமேநோக்கிச்.......... *
சாருமாலாகிலத்தை யவர்களுஞ்சலித்தல்செய்யார் .... .. .... *

(இ-ள்.) சலத்தினாலேநிறைந்து நின்ற சமுத்திரத்திலே சலத்தினாலேநிறைந்த ஆறானது ஓடுகிறவழியைமேற்கொண்டுவிழுந்த ஆற்றுச் சலத்தினுடைய வழியை அந்தக்கடல்சேராதுஎப்போதும் முள்ளபடியேயிருக்கும் அதுபோல நாம்விசாரிக்கில் ஆசையானது சித்தசாந்தியான கனமுடையவர்களிடத்தைக் குறித்துச் சேருமாகில் அந்த ஆசையையவர்களுஞ் சலித்தல் செய்யார்களென்றவாறு. ☼ இதனால் கடலிலெத்தனையாற்றுச் சலங்கூடினாலும் கடலானது அதிகங்குறைச்சலும் ஆற்றுச்சலத்தினுடைய குணமில்லாமல் தன்சுபாவப்படியே யிருக்கிறது போலச் சகல ஆசைகளும் வந்தாலும் அதிலேபற்றில்லாதவர்கள் சலனப்படார்களென்பது கருத்து. இச்சையுள்ளவனுக்குச் சாந்தமில்லையென்ற தருத்தாபத்தி. (௫௮)

யானெனதென்பதின்றி யெவ்வகைப் பொருளுமிட்டான் .... *
றானெனச்சரிக்கின்றான்யா ரவனேயடையுஞ்சாந்தி .... .. *
ஈனமதடையாதித்தை யடைந்தவரிறக்கும்போதின், ........*
ஞானமேயடைவாரென்னை நண்ணுவார் பிறவிநண்ணார்...... *

(இ-ள்.) நானென்கிற அகங்காரமும் என்னுடையதென்கிறசுதந்திரமுமில்லாமல் எந்தவிதப்பொருள்களையும்விட்டவன் சகலமோ

ருள்களுந்தானேயென்று சஞ்சரிக்கிறவனெவனோ அவனேயே சாந்தியடையும் அஞ்ஞானமடையாது இந்தச்சாந்தியையடைந்தவர்கள்மரணமாகிறபோது ஞானத்தைச்சேர்ந்து பிறகு என்னைச் சேருவார்கள். பிறவியடையார்களென்றவாறு. ஞானமேமெய்யென்ற தேற்றேகாந்திருமேல சாந்தியான பிரமத்தினுடைய பத்தியை நிசமான அப்பியாசம் பண்ணினவன் ஞானத்தைப்பெற்று மோக்ஷத்தையடைவானென்பது கருத்து. (௫௯)

[கலிவிருத்தம்.]

பின்னையோவிவ் வுலகமெலாம்பெற்ற ...... *
வன்னையோதிரு மார்பத்தணைத்தவன் ...... *
முன்னையோர்புகழ் வேதமுடிவையோ ...... *
தன்னையோவுள்ள வாறெலாஞ்சாற்றினர் ...... *

(இ-ள்.) மகாலட்சுமியோ ! உலகமெல்லாம் பெற்றதாயோ ! அவளைத்திருமார்பிலேயணைத்தகிருஷ்ணசுவாமிபெரியோர்கள் புகழப்பட்டவேதாந்தத்தையோ? தன்னையோ! அந்தப்பிரமத்தை யுள்ளபடியெல்லாஞ் சொன்னாரென்றவாறு, (௬௰)

இரண்டாவது சாங்கியயோகவத்தியாயம்முற்றும்.
ஆக அத்தியாயம் இரண்டுக்குக் கூடியசெய்யுள் (௬௰.)



மூன்றாவது.

# தேவபூசா

## அத்தியாயம்.



(கொச்சகக்கலிப்பா.)

அலையிலேகடற்கிடந்தவரு மறைகளா னவற்றின் ...... *
தலையிலேயிருக்குமவன் றேரிலேநின்றருளிக்... ...... *
சலையிலேபொருள்விரித்துக் காட்டவும்மெய்காணுதே *
சிலையிலேயுயர்விசைய னிவ்வுண்ணைஞ்செய்பிறுன ... *

(இ-ள்.) திருப்பாற்கடலில் அலையிலேபள்ளிகொண்டவர் ஔரி யவேதங்களின் சிரசிலேயிருக்கிறவர். இப்படிக்கொத்த கிருஷ்ணசுவாமி தேரிலே நின்றருளிச் சாத்திரத்திலே சொன்னபொருளை விரித்துக்காட்டவும் உண்மையாகக்காணாமல் வில்லிலே அதிகனென்று பெயர்பெற்ற அருச்சுனன் இந்தப்படிச்சொன்னானென்றவாறு. ஃ கிடந்ததையு மிருந்ததையுங் கண்ணாலே கண்டதில்லை தேரின் மேலேகாண நின்றருளி வேதாந்தப்பொருளை விரித்துக் காட்டவுங் காணாத அருச்சுனன் கிடந்தபோது மிருந்தபோதுஞ் சொல்லுவது ஒருசொல் வேதாந்தப்பொருள் மகாசூட்சுமம் அப்படிக் கிடந்த போது மிருந்தபோதுங்காணாமற் கேட்கப்படுகிற ஒரு சொல்லான மகாசூட்சுமத்தைக் காணமாட்டுவாமோ மாட்டாமென்பது குறிப்பு.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

நன்றேவினையின்ஞானமென வுரைத்தாய் மீளவினை நல்ல...... ......*
வென்றேயுரையா நின்றனையா லிவற்றிலெதுநன்றெனவுணரக்... *
குன்றேயனையாயுனையடைந்தேன் குற்றத்துயர நீக்குவதா ......*
மொன்றேயாகவுரைத்தருள வேண்டுமென்ன வவனுரைப்பான்...*

(இ-ள்.) கருமத்திலும்ஞானமே நல்லதென்று சொன்னீர் திரும்ப ஞானத்திலுங் கருமமே நல்லதென்று சொல்லாநின்றீர் இந்தக்கருமம் ஞானம் இரண்டில் எது நல்லதென்று நான் அறியவேண்டும் நீலமலையையொப்பான திருமேனியையுடையவரே உம்மைச்சரணமாகவடைந்தேன் என் குற்றமான துக்கத்தைத் தீர்க்கிறது கருமஞானமிரண்டில் ஒன்றே நிச்சயமாக உபதேசித்தருள வேண்டுமென்று கேட்கக் கிருஷ்ணசுவாமி சொல்லுவாரென்றவாறு. (௨)

(கலிவிருத்தம்.)

ஆதியிலுலகினை யாக்கியஞ்ஞான்று நா... ......... ........... *
னோதியபொருளிவை யிரண்டு முண்மையே......... ..... *
தீதியலவாருஞ் செயலை மாற்றுவான் ...... .... .......... *
மீதியல்வினையுறுஞ் விடு மேவிடான் .......... ... .... ... *

(இ-ள்.) ஆதிகாலத்திலே யுலகத்தையுண்டாக்கியபோது நான்சொன்னபொருளான இந்தக்கருமஞானமென்ற விரண்டும் நிச்சயமே இவற்றில் ஞானிகளுக்கு ஞானமுங் கருமிகளுக்குக் கருமமுமென்று நீகேட்டிருந்தும் மறந்தாய்பொல்லாங்கேசுபாவமான ஆசையை

நலனுறுமவ்வினை நரகமன்றியே ...................... *
சலமுறுபிறவியுந் தவிர்க்குந்தன்மைகேள் ............... *

(இ-ள்.) விஷயங்களை ஐம்பொறியான விந்திரியங்களிலேசெல்லுகிறதைவிலக்கி மெய்யானபலனை யுறப்பட்ட கருமத்தைஎன்னுடைய நியமித்தியமாகப்பண்ணு நன்மையுடைய அந்தக் கருமமானது நரகமல்லாமல் வைரமடைந்த பிறவியையுந்தவிர்க்கும்அந்தச்சுபாவத்தைக்கேளென்றவாறு. ※ என்பொருட்டெனவே யென்பொருட்டாக இச்சித்துச்செய்யாதேயென்றது- நரகமன்றி யென்றது நரகைவிலக்கும் அருமாத்திரமோபிறவியையுந் தவிர்க்குமென்றது இப்படிப்பலனையிச்சியாமல் கருமானுஷ்டானம்பண்ணுகிறவனை சாந்தஞானநிஷ்டனிலும் அதிகமென்றுசொல்லப்படும்தேகமெடுத்தவனுக்கெல்லாங்கருமம் பண்ணுகிறது நியமம் ஆகையால் நீயுமுசிதமான கருமத்தைப்பண்ணு கருமத்தைவிட்டஞானத்திலுங்கருமத்துடனே கூடினஞானம் நல்லது கருமம்பண்ணமாட்டேனென்றால் சரீரத்துக்கு நடக்கவேண்டியகருமத்தைவிடவேண்டும் இவையெல்லாம் அருத்தாபத்தி தன்மைகேளென்றதாவது இந்தக்கருமம்பண்ணினாற்பந்தமென்றால் இந்தகருமமே பந்தமல்லாமல் தேவதாபூசையான என்னார்த்தமான கருமபந்தமல்ல அதெப்படியென்றால் அதினுடைய சுபாவத்தைக் கேளென்ற தருத்தாபத்தி தேவதாபூசையென்றும், யக்ஞார்த்தமென்றும், பாட்டிருக்கிறதோவென்றால் பின்வரும் பாட்டுக்களாலும், இந்தப்பாட்டில் என்பொருட்டென்று இருக்கிறதினாலுஞ் சொன்னது. (௯)

தேவர்களைமகிழ்விக்குஞ் செயலோடேதெரிந்த.... *
மூவகையவுலகினைய முன்படைத்தமுதன்மொழிவான்,
மேவரியசுரர்பூசை யிதுநீங்கள்வேண்டினால் .............. *
யாவையுந்தருமின்ன மிதுகேட்பீரெனவிசைப்பான் *

(இ-ள்.) தேவர்களைச் சந்தோஷிப்படுத்துகிற கருமத் தோடேகூடவிருந்தமூன்றுவிதமான உலகங்களையும், ஆதிகாலத்திலேவிசாரித்துண்டாக்கின பிரமதேவர்-அந்தச்சனங்களுக்குச் சொல்லுவார்-இதுவுடைய அரியதேவர்பூசையிந்தத் தேவர்பூசை நீங்கள்வேண்டினஇஷ்டார்த்த விதமெல்லாங்கொடுக்கும், இதையின்னமுங்கேட்பீர்க

ளென்று சொல்லுவாரென்றவாறு. ✽ செயலோடே யென்றதுமகிழ்வியாதசெயலோடு என்றதுபாராமல் மகிழ்விக்குஞ் செயலோடே யென்றது நிச்சயஞ்சொன்னது, தெரிந்தென்றது சிருஷ்டிக்கு முன்னே பிரமதேவர் ஆலோசனை பண்ணினது இந்தச் சிருஷ்டியைச்சதகருமத்துடனே உண்டாக்கவேண்டுமே-அதற்குச்சதகருமமே தேவர்களை மகிழ்விக்குஞ்செயல்- ஆகையால்- அதுவுடனேசிருஷ்டிக்கவேண்டும் அதல்லாததுற்கருமத்துடனேசிருஷ்டிக்கலாகாதென்று, ஆலோசனையில் விசாரித்துத் தெரிந்தபின்பு இந்தமூவுலகமும் படைத்தானென்றது-இதுவென்றது சொல்லும்பொருளைக் காட்டல். (௩)

செயல்வகையாநீங்களவர் திறம்போற்றுமாங்கவரும் ...... ✽
புயல்வகையா லுங்களையே புறம்போற்றிப்புரந்தருள்வா.... ✽
ரியல்வகையானதுபிழையீ ரொனிரண்டுதிறத்திரு............ ✽
முயல்வகையாலென்னையடைவீரெந்நிலத்தோர்க்குரைத்தனனால்.

(இ ள்.) நீங்கள்செய்யும் விதங்களினாலே அந்தத்தேவர்களின் விதங்களைப்பூசைசெய்யுங்கள், அப்போது அந்தத்தேவர்களும்,மேகமென்கிறவிதத்தினாலே வுங்களையே புறம்பேகாத்துத் தயைசெய்வார்கள் உங்களாலியன்றவிதமானது தப்பாமற்செய்வீராகில்இரண்டுவிதமான தேவர்மனிதரான நீங்களுந் தப்பிப்பிழைக்கிறவிதத்தினாலேயென்னைச்சேருவீரென்று மனிதருக்குச் சொன்னானென்றவாறு. ✽ இதனால் எக்கியம்பண்ணித்தேவர்களைச் சந்தோஷிம்பண்ணுங்கள் அவர்கள்மேகங்களாலே மழையைப்பெய்வித்துப் புறம்பேகாத்துரட்சிப்பார்கள் இப்படியிருவகையாருந் தப்பாமல் நடந்தீர்களானாலென்னைச் சேருவீர்களென்று, மனிதனைப்பார்த்து இருவகையாருக்குஞ்சொன்னார். ஒருவனைப்பார்த்திருவருக்குஞ்சொன்னதேதென்னில்- ஒருவன்முன்னேசெய்தால் மற்றொருவன்பின்னேசெய்யவேண்டியவிதியாகையால் முன்னே செய்யவேண்டிய மனிதனைப்பார்த்துத்தேவர் நடக்கையுங்கூடச்சொன்னது. தப்பிப்பிழைக்கிறவிதமாவது-நான் எனதென்கிற ஆங்காரசுதந்தர மிரண்டினாலுங் கெடாமலிருத்தல்-இப்படி யொருவருக்கொருவர் அன்னியோன்னியமாகவிருந்தால்- மேன்மையை யடைவார்களென்பது குறிப்பு. (௪)

மற்றவர்தந்ததுகொண்டு மறித்தவரைப்பேணுதான் ..................... ✽

கற்றவர்முன்பழித்துரைத்த கள்வரினுங்கடைப்பட்டான் ........ *
பெற்றவைகொண்டவர்ப்பேணிப் பிழைத்ததுகொண்டின்றே.*
யுற்றதுதன்பொருட்டாக வுண்பவன்றீதுண்கின்றான் ..... ....... . .... *

(இ-ள்.) எக்கியத்தினாலே பூசைபண்ணின தனக்கு அந்தத்தேவர்கள்வேண்டியனகொடுப்பார்கள் அவர்கள் கொடுத்தவை கொண்டுதிரும்ப அந்தத்தேவர் களைப் பூசியாதவன்பெரியோர்கள்முன்னேபழித்துச்சொன்ன திருடரிலுங்கடையானன் அவன் அந்தத்தேவர்களாலே கொடுக்கப்பெற்றவைகொண்டு அந்தத்தேவர்களைப் பூசித்து அவைகளிலே மீந்ததைக்கொண்டு பொசியாமற் கிடைத்தவைதத்தன்னுடைய நிமித்தமாகப் பொசித்தவன்பாபத்தினாலே விழுங்கப்பட்டவனென்றவாறு. ❋ எக்கியத்திலே மிஞ்சினதைப் பொசித்தவன்பாபத்தில் விடுபட்டவனென்ற கருத்தாபத்தி. (௮)

(கலிவிருத்தம்.)

உளவாமுயி ருணவாலுணவுயர்மாரியினுளவாம்...... ..... *
வளவான்மழைபுயர்வானவர் மகிழ்வால்வருமதுதா...*
னிளவாளரியனையாயிசைதொழிலால்வருமிசையி... ... *
னுள்வாமறைதருநான்மறையறிவாலறிவுறுமால்.......*

(இ-ள்.) இப்படிக்கொத்த பொசிப்பாலே ஆத்மாவுண்டாம்இந்தப்பொசிப்புஉயர்ந்தமழையாலுண்டாம்- இந்தவளமையுள்ளமேகம்பொழியுமழைகீர்த்தியுடைய தேவர்களின்- சந்தோஷித்தால்வரும்இளமையும்பிரகாசமுமுள்ளசிங்கத்தை யொப்பான் அருச்சுன அந்தமழைதான்சொல்லப்பட்டஎக்கியமானகருமத்தினால் வரும்இந்தக்கருமத்தைச்சொல்லுகிற வேதஞ்சொல்லினுண்டாம் இந்தச்சொல்லாலுண்டான நாலுவேதத்தினுடைய அறிவினாலே அறிவுண்டாமென்றவாறு. (௯)

இதனால்வினைகளிலேவிளைவனயாவையுமிங் ........... *
னெதினால்வருவினையாழியினெறிசேரலர்திரிவார் .....,... *
மதனூரியபுலனேமகிழ் விடமாகவுமுடையா .........*
ரதனாலவரவமேகழிபவராமெனவறி நீ ............ ....... *

(இ-ள்.) இப்படி யொன்றொன்றுண்டான இதனாலே கருமங்களிலேசகலமும் விளையப்பட்டன இவ்விடத்திலே எக்கியத்திலேயுஞ்

ஞாயிருக்கிற பரமபுருஷனாலே வருகிறகருமசக்கிரத்தினுடையமார்க்கத்தைச்சேர வில்லாதவராய்த் திரிவார்களேமதமுண்டாகியவிஷயங்களிலே சந்தோஷிப்படமிடமாகவும், விஷயங்களை சந்தோஷமாகவுமுடையவர்கள் அதனாலே அவர்கள் விருதாவிலே நாசமாகிறவர்களாமென்று நீயறிவாயென்றவாறு. ※ திதனுவது உள்ளானவன் அதீதனுவதுகடந்தவன். (ம)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

கண்ணிற் கருதரு மறிவைக்கருதிய வறிவேமிகவரு களி
கூர்வோ, னெண்ணிற் றெழிறரு பயனுற்றிடும்வகை யி
சையாதலின் வினையாவும், பண்ணிப் பெறுவதோர்ப
யனுண்டோவவை பண்ணாதுறுவதோர் பழி யுண்டோ,
மண்ணிற்பிறரிவ னிவையுற்றிலனென மதியா ரவைசெய்
தவிதியாரால்...................................................※

(இ-ள்.) கண்ணாலே காணவும், மனதாலே நினைக்கவும், அரிதாகிய ஆதமாவைத்தரிசனமுந் தியானமுஞ்செய்து அந்த ஆத்மாவே நஷ்டமில்லாமல் மிகுந்திருக்க அதனால்வரப்பட்ட களிப்பு மிகுந்தவன் விசாரித்தா லவனுக்குச்செய்யவேண்டிய காரியமொன்றுமில்லாததினாலே கருமத்தால்வருகிற பலனையடையும் படிக்குச் சம்மதியான் ஆதலால் ஆத்மதரிசனம் சித்தியானவனுக்குச் சகலமும் ஆகும்வயல்லாமல் வேறேசகல கருமங்களையும் பண்ணிட்பெறுவதொருபிரயோசனமுண்டோ அதுவில்லை ஆனால் அந்தக் கருமத்தைட்பண்ணுதினாலே யடைகிறதொருபழியுண்டோ அதுவுமில்லை ஆனாலிவனையுலகத்தில் மற்றட்பொருள் இவன் இந்தக்கருமத்தைச்செய்து இந்தப்பிரயோசனத்தை யடையவில்லாதவ னென்று மதியார்கள் அதேதென்னில் அந்தக்கருமத்தையுண்டாக்கின விதியினாலே யென்றவாறு. ※ விதியென்கிறலது விதியாறென்றது-உபசாரம்- விதியாவது-பிரமம் பலனையிச்சியாதவனுக்கு உலகம்மதித்தாலென்னபிரயோசனம் மதியாமையால் என்ன நஷ்டம் இரண்டு மில்லை யென்பதுகருத்து. (மக)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

ஆதலானீயும்பலத்தின்மேலவவவற் றடுத்தகாரியஞ்செய்வாயதனற்※
றிலாவீடே சேருவாய்முன்னஞ் சேர்ந்தவரனேகர்முன்றேறிற்..※

காதலாலரசன் சனகனேமுதலோர் கருமமோடொழுகியேயன்றே-
போதலாவுலகு புக்கதுமற்றும் புகுந்தனரனேகர்முன்பொலிவார்*

(இ-ள்.) ஆகையால்நீயும் பலத்தின்மேலாசையற்று இராஜ்ஜியத்துக்கு அடுத்தகாரியத்தைச்செய்வாய் அதனாலேகுற்றமில்லாதமோக்ஷத்தைச்சேருவாய் இப்படி முற்காலத்திலே சேர்ந்தவர்கள் அனேகம்பேர் அவர்களாரென்று ஆசையாலே முன்னே விசாரிக்கில் ராஜாவான சனகனேமுதலானவர்கள் கருமத்தோடே நடந்தேயல்லவோ மற்றவர்களா யாரும்போகமாட்டாதமோக்ஷமாகியவுலகத்திற்புகுந்து பின்னேயு முன்னேபுகுந்தன ரனேகர்விளங்குவா ரென்றவாறு.※ விளங்குவாரென்றது அவர்களையுலகர் புகழ்ந்து கொண்டே யிருக்கையால் விளங்குவாரென்றார். பலத்திலாசையற்றவன் அடுக்காத காரியத்தைமுயற்சிபண்ணான். அடுத்தகாரியத்தைச்செய்வான்-அடுத்ததாவது-பசிவந்தபோது தனக்கல்லவென்று பொசித்தது -அடுக்காதாவது-பசியில்லாதபோது பொசிப்பைக் கண்டாற் பசிவாராமற் பொசிக்வேண்டுமென்று பொசித்தல். இன்னமும் அடுத்த தாவது-அவரவர்குலத்துக்கு அடுத்தகருமம் அடுக்காதது பரகருமம்சனகராசாவைச்சொன்ன தேதென்னில் இந்த அர்த்தம் அன்னிய சாதிக்கென்று நினையாமற்காட்டினது கருத்து. (௰௨)

பெரியவர் பயின்ற படியலாற்பயிலார் பின்புளோ ரென்பதன்றாயி-னுரியவிவ்வுலக மூன்றினுமெனக்குச் செய்யவேண் டுவதுமொன் றுண்டோ - வரியவையென்று ஒருதவுமுறுதற் பாலவுமியாவையிங்கையா - பரியவிவ்வுலகு மகிழவும் வினைதான் பண்ணுதற்கென்னையும் பாராய்...........................*

(இ-ள்.) பெரியவர்கள் ஆசரித்தபடியே மற்றசனங்களும் மாசரிப்பார்களே யல்லாமல் மற்றொன்றையு மற்றசனங்க ளாசரியார்கள் இப்படியென்றுசொல்லப்படும் அப்படியாகில் உரியதான இந்தப் பூமியந்தர சுவர்க்கமென்ற மூன்று லோகங்களிலும் என் னிச்சையாயிருக்கிறவெனக்குச் செய்யவேண்டிய தொன்றுண்டோ ஒன்றுமில்லை என்றாலே கூடாதஅரியதுவுங் கூடத்தக்க வுரியதுவும் என்ன இந்தவுலகங்களிலொன்றுமில்லை ஐயா யிப்படியெங்கும்என்னிச்சையாயிருந்து ஒன்றுடனுங்கூடாதவனும் இனிமேற் கூடுகிறவனு மல்லாத எனக்குச் செய்யவேண்டுவ தொன்றுமில்லையே இப்படிக்கொ

த்தநான் பருத்த இந்த வுலகங்கள் சந்தோஷிக்கவும் துக்கிக்கவுங்கருமம்பண்ணுகிறேன் இப்படிப்பலனை யிச்சியாமற் கருமம் பண்ணுகிறதற்குமுன்னே ஜனகமகாராஜன் முதலான அனேகரைப் பார்க்கச்சொன்னேன் இப்போது என்னையும்பாரென்றவாறு. *மகிழவுமென்றவும்மையாற் றுக்கிக்கவுமென்று வருவித்தது. என்னையுமென்றவும்மையால் முற்காலத்துச்சனகன் முதலானோரையும் இந்தக் காலத்திலென்னையும் பாரென்று முற்பாட்டினையை யெதிரது தழுவியது.

என்செயறவிறில்யான் செயாவினைக ளியாவருஞ் செயாததனா
லே மன்செய்த குலங்கண் மயங்கிமாய்ந்திடுவர் மற்றவர் மற்ற
தற்காகப் - பின்செயலறியா தவாவொடு முயலும் பேதை யை
ப்போற்பிறர் பொருட்டா - துன்செயல்களைச் செய் யவைசெ
ய்வார் தம்மை யுணர்வுவே ளுக்கலுமுரைப்பான்...............*

(இ-ள்.) இப்படிக்கொத்த வென்னுடைய செயலானது செய்யாமல்விட்டால் நான்செய்யாத கருமங்களை யாருஞ் செய்யார்கள் அதனாலே நிலைமையாகச் செய்தகுலங்கள் மயங்கிநாசமாவார்கள் ஆனாலிந்தநாசம் நானேபண்ணினவனானேன் மற்ற அஞ்ஞானியான ஜனங்கள் அந்தக்கருமத்தைத் தங்களுக்காகச்செய்து பின்னே வருகிற அனுபவச்செயலை யறியாமல் ஆசையுடனே செய்யப்பட்ட மூடனைப்போல நீயும் பிறர்நிமித்தமாக உன்கருமங்களைச்செய அந்தக் கருமத்தைச்செய்கிறவர்களை யறிவுகேளுக்குவதையுஞ் சொல்லுயாரொன்றவாறு. * என்செயல்தப்பில்யாவருந்தப்புவாரொன்றதினாலே என்செயல்தப்பாவிடில் யாவருந்தப்பாரொன்றது அருத்தாபத்தி குலங்கள்மயங்குவதாவது எல்லாமொன்றாகிச் சங்கிரமாகிறது. கருமத்தைவிட்டது தானானபடியினாலே அந்தநாசமும் என்னாலேவந்ததென்றது கருமத்தைத்தங்களுக்காகச் செய்தாற் பின்னாலே வருகிறது ஜெனனமரண சுகதுக்கமென்றறிவது மூடன் தனக்காகஎப்படிகருமம்பண்ணுவானோ அப்படிப்பிறருக்காகவுங்கருமத்தைப்பண்ணென்றது உனக்காகப்பண்ணாதே என்ற கருத்தாபத்தி. (௰௪)

மெய்வகைதனக்கும் புலன்கட்குமுள்ள வேறுபாட் டினைமிக
வறிந்தோன் - ஐவகையியற்கைப் புலன்களேமொழியுற் றழுந்
துகின்றனவென மயக்கா - னிவ்வகையறியா தவனிரு வினையு

மியான்செய்தேனென விளைந்தெங்கும்- உய்வகையி து நீபுணர்
ந்தினக்கடுத்த வினைசெயென் றுரைத்துமீட்டுரைப்பான்...*

(இ-ள்.) உள்ளபடிக்குத் தனக்கும் விஷயங்களுக்குமுள்ள வேறுபாட்டை நன்றாக அறிந்தவன் அஞ்சுவிதசுபாவத்தையுடைய விஷயங்களை யிந்திரியங்களில்விழுந்தழுந்துகின்றனவென்றும் தான் மடங்கான் இப்படியறியாதமூடன் புண்ணியபாவமான இரண்டுரூபமும் தான்செய்தேனென்று அகங்காரம்பண்ணி யினைத்துக்கத்தி லிலப்படுவன தப்பிப்பிழைக்கிறவகையிது நீயறிந்து உனக்கு அடுத்தகருமத்தைச்செய்யென்று சொல்லித் திரும்பவுஞ்சொல்லுவானென்றவாறு. ஃ மிகஅறிதலாவது நன்றாகஅறிதல்- பொறியுற்றதுபுலன்களேயென்ற தேற்றேகாரத்தினாலே விஷயங்களேயல்லாமல் ஆத்மாவல்லவென்ற நிச்சயமடங்கானென்ற பாடத்லத அசங்கானென்று பாடமோதில் அசையானென்றுரைகொள்ளும் இளைத்தலாவது அகங்காரத்தினாலே பிறந்திறந்து சுகதுக்கங்களை யனுபவித்துழன்றிளைத்தல் இகிலாவது இந்தத்துன்பம் எப்போதுதீருமோ யாராலே தீருமோ இது நம்மைவிடாதோ வென்றேவருந்தல். (௰௫)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

என்யாற்பொறுமை யினைத்தவிர்ந்தேன் கருத்தாயுள்ள வினை
யதனை-யன்பாற்டயில்வா ரியாவர்சிலரவர்கள் வினைகளறவிட்
டா - ரென்பாற்பொறுமை யாலேயா னுரைத்தவிவற்றை யிக
ழ்கிற்பார்-வன்பார்த்தரையி லெழுமரம்போன் மாய்ந்தாரறி
வுமாய்ந்தாரோ ............................................ *

(இ-ள்.) என்னிடத்திற் பொறுமையை விட்டுத்தன்கருத்தேயென் கருத்தாய் அவரவருக்குள்ள கருமத்தை அன்பினாலே ஆசிரிக்கிறவர்களாரோ சிலபேர் அவர்களே கருமங்களை அறவிட்டவர்கள் இனியென்னிடத்திற்பொறுமையாலே நான்சொன்ன இந்த வாக்கியத்தை யிகழுகிறபேர் கற்பாறையான தரையிலேமுளைத்த மரம்போலமாய்த்துபோவார்களதுவல்லாமல் அறிவுமாய்த்தபேர்களென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௰௬)

[கலிவிருத்தம்.]

பண்டுநின்ற பழவினை யின்படி ........................*
கொண்டுநின்றது கூடுமவர் கட்குக் ....................*

கண்டுநின்றவர் கற்பனை யென்செயு........ ......... ........*
மூண்டுநன்றிதெனவுரைநண்ணுமோ.... ........ ........ *

(இ-ள்.) தேகமெடுத்திருக்கிற பேருக்குமுன்னே பழையதாயிருந்த வினையின்படி க்கைகூடுமென்று வஸ்துவைக்கண்டு மிருக்கிறபேர்களுக்குக்கற்பனை யான வினையென்னசெய்யுமென்று அறுவகைச் சுவையுண்டு நல்லதென்று லதுநாவுடனேசேரும் அப்படிப்போல வஸ்துவைக் கண்டு இருக்கிறபேரை வினைசேராது என்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (யஎ)

(இதுவுங்கலிவிருத்தம்.)

அஞ்சுபலன் வழிதொடரு மஞ்சுபொறியின்வயாம்.... -*
வெஞ்சுரனி லுழறியுயிர் வெம்பியழிவுறுவோ......... ...*
ரஞ்சுபுகும் வழிதகைய வொன்றுபகையுளகே........ *
ளெஞ்சுதலி லின்பமிட மொன்பவையையிகழ்நீ... ... *

(இ-ள்.) ஐந்துபுலனையும் ஐந்துபொறிதொடரு மதினாலுலகத்திலிருக்கிறபேர் கோபத்தினாலேயுழன்று உயிர்வெம்பி யழிந்துபோவார்களப்படிக்கொத்தபேர்பிறந்திருக்கிறவழியைமறிக்கிறதற்குஒரு வகையுண்டுசொல்லுகிறேன் கேள் அது எப்படியென்றால் சுகதுக்கமென்கிறவை யிரண்டு இழந்துவிடுகிறதே பிறந்திருக்கிற வழியைமறிக்கிறவகை ஆகையினாலேநீயுமிகழ்ந்துவிடுமென்று சொன்னார்ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (யஅ)

தடுத்ததொழில் செய்வது தகாதது தனக்கே.... .........*
யடுத்ததொழில் செய்துகொடு மேனுமழகையா......... *
விடுத்தகருமம்பெரிது செய்வதெனின் மேலோர்........*
தொடுத்தகருமஞ்சிறிது செய்கைதொழி லென்றான் · *

(இ-ள்.) ஞானவான்கள் வேண்டாமென்னத் தொழிலைசெய்கிறது ஆகாது தனக்கு அடுத்த தொழிலைச் செய்வது யாதாகிலுங் கெடுக்கிறதே அழகையாவென்று விட்டுவிட்டக் கருமத்தைத் திரளாய்ச் செய்கிறதினாலேயு மேலோரானஞானவான்கள் செய்கிறகாரியங் கொஞ்சமாகிலு நாமதைச் செய்கிறதே தொழிலென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவ ரொன்றவாறு. (யகூ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மாயனிவையென்றுரைசெய்ய விசையன் மறுத்துங்கூறுவான்.... *
தீயவினைசெய்டாதவரைத் திகைப்பச்செய்து திறலடுஃல .......... *
யேயபணிகொள் வாரைப்போ லியற்றுவிப்பா ராரொன்றன் ........ *
பாயல்பர்வைபாக்கொண்ட பழையோ னிவ்வாறெனப்பணித்தான் *

(இ-ள்.) இந்தவிதம் ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்ல அதற்குத் திரும்பவும் அருச்சுனராசன்கேட்கிறான் துஷ்டபடியென்றல்கொடி தானவினைசெய்ய தமபேரைத் திகைக்கச்செய்துவல்லமையினாலே வேண்டிய தொழில் செய்வித்துக்கொள்ளுகிறவர்களைப் போலச் செய்விக்கிறபேர் ஆரென்றுகேட்க அதுக்கு யாக்கையென்கிறபொம்மையை ஆட்டிவைக்கிற ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்வாரொன்றவாறு. (உய)

(கலிவிருத்தம்.)

தீமனந்தனி லேசெனனஞ்செயக் ........ ........... *
காமமென்னுங்கைத் தாய்வளர்கின்றது ......... ......*
வேமனங்கொள் வெகுளியென்கிற்பது .... ........... ...*
நாமமற்றதன்னனலந் தன்னைக்கேள்... ... ....... ....*

(இ-ள்.) அக்கினியிலேபிறந்தது- மனது - மனதிலேபிறந்தது- காமங்காமத்திலேபிறந்தது - குரோதகர்மமென்கிறது தாயினுடையகைபோலச் சகலமும்வளர்கின்றது - குரோதமென்கிறதுமதமயங்கொண்டிருக்கிறது-இது இரண்டையும் பேரறவிட்டுவிடுகிறதேநல்லநலம். அதை இன்னந் தெரியச்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிஷ்ணதேவரொன்றவாறு. (உக)

எவ்வகைப்பய னுந்திறவல்லது ................ ...*
மெவ்வகைப்பெரும் பாவமுமிவ்வகை............*
யெவ்வகைப்பொருட் குப்பகையாவகை ... ..... *
யெவ்வகைத்தெனப் பேசுவதின்னங்கேள்...... *

(இ-ள்) எந்தத்தருமமுஞ்செய்தாலு மந்தத்தருமத்தைவிழுங்கிப்போடுகிறதும், எந்தவகையினாலேயும்வெகும்பாவத்தையுண்டாக்கிறதும், எந்தப்பொருளுக்கும் பகையாக்குகிறதும், எந்தவகையினாலேயுந் தினம்பேசுகிறதுங் காமக்குரோதத்தினாலே என்று இன்ன

ஞ்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிஷ்ணதேவர். — எ-று.

நெருப்பைமுற்றிய தூமமுநீடொளி ............... *
தருப்பணத்தை மறைத்தனமாகுமொத் ........ *
திருப்படைத்த வருள்ஞானர்வியாவையும் ....... *
விருப்பமுற்றவெங் காமம்விழுங்குமால் ..... ...... *

(இ-ள்) புகையினாற்பிறந்த அக்கினிக்குமதிகப் பிரகாசம்பொருந்தியதன்னைச் காமமானது எப்படிமறைத்தது என்றால் - தங்கப்பணத்தை மாசுமறைத்தாற்போல உலகத்திலேயிருக்கிறபேர்களுக்குஎன்னுளுண்டான உள்ஞானர்வான மனமெல்லாவற்றையும் விருப்புமுற்றகாமமும் விழுங்கிப் போமென்று சொன்னார் - ஸ்ரீகிஷ்ணதேவரொன்றவாறு. (உங)

காதலாற்றவிக் காமம்புலன்களை ..................... *
வாதலாற்புகுந் துள்ளமயக்குவ.................. *
வாதலாற்புல னைந்துமடக்கிமெ .................. *
யேதலாற்கடுங் காமமிறக்குவாய் ............... *

(இ-ள்,) ஆசையினாலே தவிக்கிறகாமமானது - ஐம்புலன்களினுடையவாசலிலே புகுந்து மனதை மயக்குமாகையினாலே-ஐந்துபுலனையுமடக்கி ஒப்பிலாத காமக்குரோத பாரத்தையிறக்கிப் போடுவாயென்று சொன்னார் ஸ்ரீகிஷ்ணதேவரொன்றவாறு. (உச)

ஆற்றுமிவ்வுடம் பிற்பரமைம்புலன் ................* 
மாற்றுமைம்புல னிற்பரமாமனம்...............*
போற்றும்புத்தியினிற்பரப்பத்தியி.... ........... *
மேற்றுமிங்கவை காண்பதுமேதாற்பரம் ....... ..*

(இ-ள்.) வாயுவினாலே சஞ்சரிக்கிற தேகத்துக்குப் பரமாயிருக்கிறது ஐம்புலன் தேகத்தைமாற்றுகிற- ஐம்புலனுக்குப் பரமாயிருக்கிறதுமனது மனம்போற்றுகிறதற்குப் பரமாயிருக்கிறதுபுத்தி. அந்தப்புத்தியிலே பரமாயிருக்கிறதுகாணு மதைக் காண்பது மேலானபரமென்றுசொன்னார். ஸ்ரீகிஷ்ணதேவரொன்றவாறு. (உரு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மேலாயுள்ளவிப்பொருளை மெய்யாவறிந்துபொய்மாய. .....*
மாலான்மயங்குமனத்தினையு மடக்கியந்தயனங்கலக்கும் ...... *

காலர்யுள்ளகாமத்தைக் காப்பாயென் றுப்பரைத்தான். ..... *
சேலாயுலகமுறுபுலனோர் செவியிற்புணையிற்செலுத்தினான் *

(இ-ள்.) சகலத்துக்குமேலா யிருக்கிறவஸ்துவை மெய்யாகவறிந்து பொய்யானது இறந்து போகத்தக்கதாக மயங்குகிற மனதையடக்கிக்கலக்கிறதற்குக்காலாயிருக்கிற காமத்தைக் காப்பாயென்று முன் சேலாயுலகத்திலே அவதரித்து இப்போது சனங்கள் செவியின்வழியாக ஞானத்தைப் போதித்தார் ஸ்ரீகிருஷ்ணதேவர்.—என்-று. (௨௩)

மூன்றாவது - தேவபூசா- அத்தியாயம். முற்றும்.
ஆக அத்தியாயம்-மூன்றுக்கு-கூடியசெய்யுள் (௱௰௩.)



நான்காவது.

# சம்பிரதாய

## அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

நற்றவமகிழ்தரு கருமஞானமும்............*
மற்றதுமறவுனக் கறியக்கூறினேன்.........*
மற்றவைகளினவர் வாறுகேளெனக் ......*
குற்றமிலாழியங் கையன்கூறுவான்.........*

(இ-ள்) நல்லதவமகிழ்விலேயுண்டானதல்லாமல்- முன்னிருந்தபேருக்குஞ், சொன்னேனென்றும், கருமஞானமிரண்டு-முனக்குமயக்கமறத்தக்கதாக அறியச்சொன்னேனென்று-சொன்னதல்லாமல் முன்னிருந்தபேருக்குஞ் சொன்னேனென்று, மவர்கள்பெயரையுஞ் சொல்லுகிறேன் கேளென்று குற்றமில்லாதகையிலே சங்குசக்கரத்தைத் தரித்த ஸ்ரீகிருஷ்ணதேவர் சொன்னாரென்றவாறு. (௧)

எவமறமுன்பியா னிரவிக்கோதினே......... *
ஏவன்மனுவரசனுக் கறியக்கூறினு ........ *
னுவகையோடவனுமிக் குவாவுக்கோதினுன்,
தவமுயலரசநீ யறியுந் தன்மையார் ... *

(இ-ள்.) மயக்கமறக் கியானத்தை முன்னுலே சூரிய னுக்குச் சொன்னேனென்றுஞ், சூரியனு மனுராசனுக்குத் தெரியச்சொன்னுனென்றமனுராசனிக்குவாவுக்கு வகையாய்ச் சொன்னுனென்னு மாயையினுலே ஞானயோகத்தை முயன்று ஆசரிக்கிறபேரிதையறிவார்களென்று மின்னமதின் வகையைத் தெரியச் சொல்லுகிறேன் கேளென்றுசொன்னுர் ஸ்ரீகிஷ்ணதேவரென்றவாறு. (௨)

கருகரும்வகைநிகழ் காலஞ்சேரலா ....... *
மருவரும்வகையதாய்மறைந்தவாய்மையை,
யிருவினைகெடவரு போகநீர்மையை.....*
யொருவருமறிவரி தாயவுண்மையே......*

(இ-ள்.) முற்காலத்திலே மாயைவஸ்த்துச்செந்து-அனேகவிதமுண்டான வகையுங் கருவுண்டாய் முன்பிறந்திறந்துபோன வகையையுமிப்போது பிறந்து இனியிருக்கிற வகையையு மிருவினைகள் கெடவருகிறயோக நிலைமையையு முன்னுடைய வுண்மையு மறிகிறதற்கு எவர்களாலேயு மரிதென்று சொன்னு னருச்சுனன்.— எ-று.

நல்லகாதல்செய் நண்பெனுமாயனே............ *
யல்லதியாவு மறியவொயாதலால்..... ......... ......... ...*
சொல்லன்மெய்யின தென்றனன்றுாயவன்.....*
மெல்லவேறு விசயன்விளம்புவான் ............ ...*

(இ-ள்.) இந்தவகைகளெல்லா மறிகிறதற்கு - எனக்குத்தொண்டுபட்டு- என்பேரிலேயன்பாய் மனதுவைத்து என்னுலே யறியவேணுமென்னை யல்லாமலறிபப்போகாது ஆகையினுலே யிதுமெய்யென்றதுாயவனுன ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லவிசயனுன அருச்சுனன் கேட்டு மெள்ளச் சொல்லுவா னென்றவாறு. (௪)

(கலிவிருத்தம்.)

ஞானமாயிதுநல்லவர் கேட்டிடப் .... ........... .... ...*
போனகாலமும் யான்புகன்றேனென ........... ...... ....*

வினதாயினு மவ்வுடம் பன்றிது..........................*
தானதாம்வகை தாமறி தக்கதோ........ ............*

(இ-ள்.) ஞானமானதை நல்லவர்கள் கேட்கத்தக்கதாகமுற்காலத்திலேயும் நான்சொன்னேனென்று சொன்னீரே யுமக்கு மெனக்குமுன்னே மாயா தேகம் வந்த வகையு மிப்போது தேகம்வந்தவகையும் நமக்குத் தெரியுமோ வென்று அருச்சுன ராசன் கேட்டானென்றவாறு. (௫)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சொல்லார்விசைய னிதுமொழியத் துளபமுடியோ னருள்செ
ய்வான்-பல்லாயிரங்கா ணுடம்பெனக்கு முனக்குநடுவும்பிறந்
தழிந்த-தெல்லாமறிவன் யானீயுமேதுமறியா யிது வன்றே -
வில்லார்தோளாய்நமக்குள்ள வேறுபாடு விளம்புங்கால்......*

(இ-ள்.) விசேடத்திலே விசையனான அருச்சுனராசன் இந்த வகைகேட்க. அதற்குத் துளசிமாலை முடியோனான ஸ்ரீகிருஷ்ண தேவர்கிருபைபண்ணிச் சொல்லுகிறாரது எப்படி யென்றால் பல்லாயிரமாய் எங்கும் வியாபித்து இருக்கிற தேகங்காணெனக் கென்றும் உனக்கென்று முனக்குநடுவே தேகம்வந்து அழிந்துபோனதூ மிப்போதுதேகம்வந்ததும் நானெல்லாமறிவேனென்றும் நீயேதுமறியாயென்றும் இவையல்லாமல் வில்லைத்தோளிலே தரித்த அருச்சுனராசனே ! நமக்குள்ளவேறுபாடான விருத்தாந்தத்தைச்சொல்லுகிறேன் கேளென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௬)

(கலிவிருத்தம்.)

சாவாதுபிறவாது தனிமுதலா யிருந்தவனு ..............*
னாவாவிவ்வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக ..........*
மேவாதுநின்றேயென் மாயையினால் மெய்போல .....*
வோவாதுபிறந்திடுவ னுகந்தோறு முகந்தோறும்... *

(இ-ள்.) என்னுடைய விருத்தாந்த மெப்படியென்றால் நான்சாகிறதுமில்லைப்பிறக்கிறதுமில்லைத்தனிமுதலாயிருக்கிறவனென்னையறியாமல் உலகத்திலே யிருக்கிற பேர் நாலு விதமாய்ப் பிறந்து அழிகிற துயரைத்தீர்க்கிறதற்காகஉலகத்தைச் சேராம லிருந்து என்மாயை யினாலே மெய்போல ஒப்பில்லாமலும் தலங்கடோறு மபிறந்திடுவேனென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ண தேவரென்றவாறு.

மெய்வகைப்பிற வென்னவேண்டியார் வேண்டியன…*
வைவகையத்தெய்வமா யானேதானளிப்பேனு…… ……*
மிவ்வகையென் செயல்களினை யறிந்தாரிவ்விடும்பையினின்…*
றுய்வகையநெறிபெற்று ருயர்ந்தாரை யுரைப்பரிதால்*

(இ-ள்.) இந்தவகை நான்சொன்னதேமெய்யென்று எவரெவர்க ளுக்கு எத்தத்தெய்வத்தின்பேரிலே யிச்சையோ அந்த விதம்பலவ கையானதெய்வங்களை யுண்டாக்கினவனுமென்று மென்செயல்களை யிந்தவகையென்று அறிந்தபேர் ரிடும்பையான சனனமரண வகை யைச்சேராம லுலகத்தார்க்கெல்லா முயர்ந்த கதியடைவார்க ளவர் கள் பெருமையைச் சொல்லுகிறதற்கு அரிதென்றுசொன்னார் ஸ்ரீகி ருஷ்ணதேவரென்றவாறு. (௮)

செயலாலுங்கருத்தாலுஞ் செயனுடங் குணனாலு…. … …*
மியலான்முன்படைத்தே னிப்பொழுது காப்பேனுன்…*
மயலாலவ்வினைப்பயனின் மனமவையேன் மற்றதனு…… …*
லயலாயேயிருக்குமெனக் கவையிவைவேறறிவாரார்………*

(இ-ள்.) மகிமையுண்டானநான்குகுணத்தை வல்லமையி னாலேயு மனதினாலேயு மியலாகமுன்னேயுண்டாக்கினவனுமிப்போ தெல் லா வற்றையுங் காக்கிற வனும் நான் ஆசையினாலே காமப் பலத்தி தின்பேரிலேமயலாகியமனத்தை வைக்காததினாலே யென்னையெது வுஞ்சேராம லிருக்கு மிப்படிச்சேராமலிருக்கிறனென்கிறதை அறி கிறபேரரென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு (௯)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

உய்யும்பரிசி லுணர்ந்தவர்க ளுணர்ந்தவினைமே லொருப்படுநீ……*
செய்யுங்கருமஞ்செய்யாமை தீயகருமமொன்றிலதை…… ……*
மெய்யும்பொய்யு மறிவறிய வேண்டும்பொருளு மிவையன்றி……*
யெய்யுஞ்சிலைக்கையுரவோய் மற்றிவற்றின்செயலையியம்பக்கேள் *

(இ-ள்.) வினையொழிக்கிறகாரிய மறிந்தபேர் செய்தகருமத்தின் பேரிலே நீயு மொருமையாய் மனதை வைத்துச் செய்யென்று மு ன்னேசெய்தகருமமல்லாத் தீதானகாரியமென் றறிந்து அதைச் செய்யவேண்டாமென்று மெய்யானஞானத்தையும், பொய்யானக ருமத்தையும், விசாரித்து வத்துவைநன்றா யறிய வேண்டுமென்று

கருமத்தை யெய்திற விலக்கையுடைய அருச்சுனராசனே! மனதினுட்செயலைச்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு.] (௰)

ஓடுகின்றபுனல்யாற்றி னேடத்துடனே யோடுகான் ...... ..... *
மாடுநின்றமர மோடத்தானின்றற்போலயாச்செய்தே .... .. *
நீடுநின்றமரங்களினைநிற்கு மியற்கைத் தன்மனத்தி ..... ... *
லோடுகின்றன் யானேயென்றுணர்வுமிக்கோனுணர்ந்தாற்போல்.

(இ-ள்.) ஆறுபோலோடுகிற புலன்வழியாய் மனதோடுகிறபேர்மாட்டுக்குச்சமானமென்று மதுவல்லாமல் மனத்தானது ஆற்றங்கரையில் நின்ற மரம்போல வேரற்று யாற்றிலே யோர்மங்கையில் உருவாயுயர்ந்திருக்கிற மரத்திலேதட்டுப்பட்டு நின்றாற் போலச் செய்துநிற்கு மியற்கையாக மனதை நிறுத்திஓடினது மரம் நிற்றதென் அடிநுனிமர மதிலேயெல்லாநானேயென்று அறிவினாலறிந்தபேர் அறிந்தாற்போல நீயுமறியென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௰௧)

செயன்மேனின்றவறிவிடையே செயலின்மையுமச்செயல்செய்யா-வியன்மேனின்ற புலன்களிலே யெல்லாவினையு மிசைவதுவும் - மயன்மேவின்றியறிந்தான்யா ரவனேயெல்லா மறிந்தானு-முயன்மேனின் றயோகியுநல்வினைக ளெல்லா முறுவானும் ............ *

(இ-ள்.) மனதிற்குமேலாயிருக்கிற அறிவு மனதிலே யடங்கிமனது வழி போகா தென்று மனதிற்கு மேலாயிருக்கிற புலன்களிலேயெல்லாவினையுஞ் சேருமென்றும் விகார மேலிடாமல் ஞானத்தையறிந்தபேர் ஆத்மா அவர்களெல்லா மறிந்தவர்க ளென்று அவர்களேமனதிற்கு மேலாயிருக்கிற யோகிகளென்று மவர்களே நல்லகருமங்களையெல்லாஞ் செய்கிறபேர்களென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௰௨)

(கலிவிருத்தம்.)

ஆவதென்பது மாசையு மற்றது ............ *
மேவஞானம்வெந் தீயிடை வெந்ததீ ............ *
யாவதாந்தொழி லிவ்வகை யோர்களே ............ *
சாவதும்பிறப் புந்தவிர்ந்தார்கடாம் ............ *

(இ-ள்.) என்றாலே ஆகிறது என்கிறதையு மெனதென்கிறதையமற்றத்த மேலான ஞானமென்றந் தன்தொழிலை ஞானக்கினியிலேசுட்டு வெந்ததியாகரும் பேராமோ அப்படிக்கொத்தபேர்சனன மாணதைச் சுடடுச் சாம்பலாக்கினபேரென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௰௩)

எண்ணுமின்றி யிகபரன் யானிவை............................ *
பண்ணுகின்றன னென்றுமப் பான்மைபோ.............. *
புண்ணுமேவினை புண்டென வோர்கிலார்................ *
நண்ணுகின்ற வினைநலி வுண்ணுமோ........................*

(இ-ள்.) இகபரமா யென்றுமிருக்கிற வனு மிகபரத்தை யுண்டாக்கினவனும் நானென்கிறதா யறிந்தபேர் மனதிலே வினையை மெய்ன்று நின்றபோட்டு வினையுண்டென்று சொல்லார்களப்படிச்செய்திருக்கிறபேர்களை வினையான்து நலிபண்ணுமோவென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவ ரென்றவாறு. (௰௪)

அடங்குகின்ற புலன்களோ டாசைபோய்..................... *
மடங்குகின்ற மனத்தின ஞனவ ................................*
னுடம்பிதன்பொரு டாலுள தாமெனத்........................ *
தொடங்குகின்ற வினைத்தொடக் குண்ணுமே ..........*

(இ-ள்.) ஆசைசேர்ந்திருக்கிற புலன்களுடனே மனது சேர்ந்திருக்கிறபேர்களுக்கு அதினாலே தேகமுண்டாம்தேகந்தனதென்றளண்ணிவினைதொடர்ந்திருக்கிற பேர்களுக்கு வினையென்கிற தொடக்குக்கெட்டுப்போகாதென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவ ரென்றவாறு.

பெற்றதேகோடவ் வைந்துமுன்பேறிழ ............ *
வுற்றபோழ்திலொத் தொன்றுமொருவர்பாற்..... *
செற்றமேதுமிலாதவன் செய்வினைக்.................. *
குற்றமோவவற் றின்றிறங்கூறக்கேள் ................ *

(இ-ள்.) தேகமுண்டானதுகொண்டு-ஐம்புலாதிகளின் விவரத்தைநன்றாக முன்னேதெரிந்த ஞானவானகளவற்றிலொன்றிலேயுஞ்சேருகிறதுமில்லை அவர்களுக்கு மொருவரிடத்திலேயும், சிநேகமுமில்லை- அப்படிக்கொத்தபேர் செய்கிறவினை குற்றமாமோவெ

ன்று மதினுடையவிவரத்தை யின்னஞ்சொல்லுகிறேன் - கேளென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிஷ்ணதேவனென்றவாறு (௰௬)

விட்டுமுற்றும் வினைகள்வினைப்பயத் ............... *
திட்டமற்றினை தன்னிலெழுங்கருத் ............... *
தொட்டநின்றவன் யாகப்பொருட்டுறப் ........ *
பட்டகாமம்பலத்துடன் மாயுமால் ............... *

(இ-ள்.) கருமங்களையெல்லாம்விட்டுக் கருமபயத்தினுடையநடத்தையு மற்றுலோகத்திலேயுண்டான கருவைத்தொட்டவஸ்துவே தாமாகவெண்ணி யிருக்கிற ஞானவான் செய்கின்ற கருமம்பலத்துடனேமாயுமென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௰௭)

பிரமநேயப்பிரமநெருப்பிடை ........................ *
பிரமமாகியமந்திரந்தன்னினற் ........................ *
பிரமயாயசருவுடன்பெய்துபின் ........................ *
பிரமமேயடை வாருளர்பின்னுங்கேள் ........................ *

(இ-ள்-) நேசப்பிரமமானபிரமாக்கினியிலே நேசப்பிரமமாயிருக்கிற மந்திரத்தினாலே பிரமம் யாயா சமித்தானதேகத்தை யாகுதிபண்ணிப்பின்புபிரமத்தையடைகிறபேருண்டு இதுவல்லாமல் இன்னபிரமத்தையடைகிறபேர் செய்கிறவிதத்தைச் சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௰௮)

அறிவதாகியவங்கியிலேகொள ........................ *
வறிவையேசிலராகுதிபண்ணுவர் ........................ *
செறிவதாஞ்சமதீயிடையோசில ........................ *
பொறியதாயபுலன்களையீவர்கள் ........................ *

(இ-ள்.) அறிவாகிய அக்கினியிலே சேரத்தக்கதாக அறிவைத்தானே சிலபேர யாகுதி பண்ணுவார்களென்றுஞ் சமத்தினாலேதாமுண்டாக்கின அக்கினியிலே யிருதிவைத் தெறிவது போலச் சிலபேர் ஐம்புலாதிகளை யீவார்களென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௰௯)

புந்தியாப்பொறி யைந்தையும்போக்கவே ...... *
யிந்தியத்தழல் வாயிடுவார்சில ........................ *

ரிந்திரியத்தொழில் யாவையுஞானநெய ............ *
சிந்தியொககவெந் தியிடுவார்சிலர்...... ......... *

(இ-ள்.) நடுவாயிருந்து - ஐந்துபொறியையும் - இந்திரியாக்கி னிவாயிலிடுகிறபேர்சிலபேரொன்றுமிந்திரியத்தொழிலெல்லாவற்றை யும், ஞானமென்கிறநெய்வார்த்து யோகத்தினாலே வெந்த அக்கினி யிலேயிடுகிறபேர் சிலபேரென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிருஷ்ண தேவ னென்றவாறு. (உ௰)

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

தேடியபொருள்களாலுஞ் செயலறிதவங்களாலும்...... *
நாடியயோகத்தாலு நவின்மறைஞானத்தாலும் ...... *
கூடியபரிசில்வேள்வி குலவுவாரனேகரிங்குப் ............ *
பாடியவிவர்களன்றி யிவர்சிலபரிசுங்கேளாய் ........ *

(இ-ள்.) சம்பாதித்ததிரவியங்களினாலேயும், வல்லமையினால் செ ய்ததவங்களாலேயும், பிரமத்தைநாடிச்செய்தயோகத்தினாலேயுஞ், சொல்லுகின்ற நால்வேதஞானத்தினாலேயும், பிரமத்தைக் கூடுகிறநி மித்தியம் - யாகஞ்செய்கின்ற பேரனேகம் பேருண் டென்று மிப் போதுசொன்ன விவரமல்லாம லின்னம்பிரமத்தைச் சேருகின்றவி வரமுண்டு - அதுவுஞ்சொல்லுகிறேன் கேளென்று சொன்னார் ஸ்ரீகி ருஷ்ணதேவனென்றவாறு. (உக)

(கொச்சககக்கலிப்பா)

மிகமேநின்றபிராணனையங் கபானனிடைமேயபுகவிட்டுள்............ *
ளகமேநின்றவபானனையிப் பிராணனிடையாகுதியண்ணி ........... *
யிகமேயிரண்டுமயக்கமற விருப்பார்சிலர்மற்றிவர்கள்காண் ......... *
டகமேநின்றபிராணயா மத்தேதலைநின்றவமொன்பார் .................. *

(இ-ள்.) முகத்திலே யிருக்கிறபிராணனை அபானனிடத்திலே போகவிட்டுமனதுக்கு அதிசமயிருக்கிறஅபானனையிந்தப் பிராண னிடத்திலே யாகுதியண்ணி யிகத்திலேயிந்த இரண்டு மயக்கமுமற த்தக்கதாக விருக்கிறபேர்சிலபேருண்டு பின்னையுமிப்படிக்கொத்த பேர்தேகத்துடனேயிருந்தாலும், பிராணயாமத்திலேமேலாயிருக்கி றபேரொன்பார்கள் என்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு.

(கலிவிருத்தம்.)

இன்னவர்கள்யாவர்களும் யாகமறிவாரோ............ *
யன்னவர்களையறணித்திலமையினைகனன்றார்............*

சொன்னபரிசாலிவை தொடங்கிமுடியாதார்க் ……… *
கென்னன்பரிசாலுமிகமில்லைபரமுண்டோ ……… , … *

(இ-ள்.) இப்படிக்கொத்த பேரெல்லாரும், பிரமத்தைச்சேருகிற விவரத்தையறிவார்களென்றும், இது வல்லாமலிவர்களை திமையை நீங்க அறுத்திருக்கிறபேர்களென்றும், நான்சொன்னபிரகாரமிந்தவகைசெய்துமுடியாதபேர் எந்தவகைசெய்தாலு மவர்களுக்கு இகபரமிரண்டுமில்லையென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. ௨௩

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

இப்படியுரைத்த விந்த யாகங்கள்யாவுமுன்னுஞ் ……… *
செப்பியபிரமத்தின்கண் செனித்தனசெய்யுங்காலை …. *
யொப்பரிதாயபுத்தி கருமத்தினுளவாமுள்ள ……… *
தப்படியறிந்துநீயும் பாவத்தினகலநிற்பாய் ……… *

(இ-ள்.) இந்தவிதஞ்சொல்லுகின்றயாகங்களெல்லா முன்னேசொன்னபிரமத்தினுடையகண்ணிலே பிறந்தனவென்று, மதுவல்லாமல் ஒப்புக்கு அரிதான புத்தி கருமத்துக்குள்ளாவாமென்றும், இதுவுண்டான காரியமென்று நீயுமறிந்து பாவத்துக்கு அகலநில்லென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௨௪)

தொன்மையாகமுன்சொன்னதொகைக்கெல்லாம் …. *
நன்மையாமிகற் பாலதுஞானமே ……… ……… *
பின்மையாலுறுத் தாங்கதுபேணிடுந் ……… *
தன்மையாதெனி லாங்கதுசாற்றுவாம் ……… *

(இ-ள்.) என்போலாகிறதற்கு விவரமாய் முன்னே சொன்னது-தொகைக்கெல்லாம் நன்மையான தென்னவென்றால் களங்கமில்லாத அமிர்தமாயிருக்கின்றது ஞானமென்றும், இது வல்லாமல் பின்னையுந் தேகம் நானாகத்தானே செய்கின்றவகை யெப்படியென்றாலதுவுஞ் சொல்லுகிறேன். கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்.--எ-று.

( கலிவிருத்தம். )

விழியாமெனவறிவாலழி வுறுவார்விழிவசமே ……… *
வழிபாடுசெய்தவர்சேவடி மலர்சூடிடவவர்தா ……… *
மொழியாதவர்களும்யாவையு மொருநீயுனதிடையே. *
யழியாவகையதுவாவதோ ரறிவேயருளுவரால் ……… *

(இ-ள்.) அறிவின்கண்வசமாய் வழிபாடுசெய்தவர்கள் - சேவடியி லேமலர்சூடினபேர்கள் தயையிலாத நீச்சராலும்; அவர்களுக்கு வழிபோமலே அறிவினாலே அறிவுண்டாமென்றுமான படியினாலே எல்லாவற்றையும், நீ விட்டுஉன்னிடத்திலே அழியாவகையாயிருக்கி றபேரதினை யறியென்றுசொன்னார்ஸ்ரீகிருஷ்ணதேவ ரென்றவாறு

அதனால்வருபயன்யாதெனி லழிபாதகமுதலாம் ....... *
விதனாடரும்வினையாழியி னிடையேவிழுந்துறுவார்.... *
இதனுக்கவறிவாகிய சிதையாமிதனையினை ........ ... *
விதனும்வகைகளாசேர்வர்களெங்ஙனே யெனிலதுகேள்.

(இ-ள்.) தயவுஞ்சாதவீகமுமில்லாம லோகத்திலேயிருக்கிறபேர் களுக்கு அதினாலேவருகிறபயனென்னவென்றால்-பழிபாதகமுதலா ன வெல்லாமுண்டாம் வினையென்கிறசமுத்திரத்திலே விழுந்துஅழு ந்திப்போவார்களது எப்படியென்றால்- அதிதனையிருக்கிறசறகுஅறி வாகியவாளினாலே வினை யெல்லா வற்றையுஞ் சங்கரித்தால் எனைப் போலாகிறவகையாய்ச் சனாசேருவார்களது எப்படியென்றால் அது வுஞ்சொல்லுகிறேன்கேளென்றுசொன்னார்ஸ்ரீகிருஷ்ணதேவர்.எ-று

எறியாவெரிவருகானிடை யெரியாதனவெவைதா.... .*
னறியாவறிவுடையிர்களு மறிவீரதுவதுபோற் ....... *
குறியால்வருகுணஞானமே யனலேகொளுவிடுமேற் . *
பொறியால்வருவினையாமினைபொடியாமிதுபொருளோ *

(இ-ள்.) காடானது வெந்துபோமென்றறியாமல் காட்டுமரந்தா னேயிழைந்துபடுதிப்பட்டுக் காடுவெந்ததுபோல மனதினாலேவரு கிறதையுங் குணத்தாலேவருகிறதையும், மெய்ஞ்ஞான மென்கிற அ னல்கொளுத்திப் போடுமென்று அறிவுடையப்பே ரறிவார்க ளென் றும், அது வல்லாமல் பொறியினாலே வருகிறவினைப் பொடியாகிற து ஒருபொருளோ வென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிஷ்ருணதேவர். எ-று.

(கலித்துறை.)

ஓதற்பாலாம்வினைபுரிவோருஞ் சிலநாளி ............... *
லேதற்பாலாமறிவறிதக்கோயாதொன்னி ........ ........ *
லோதற்பாலார் பானுமிவ்வுண்மைப்பொருள்யானுங்... *
காதற்பாலானாம்புலன்வென்றாரிவர்கண்டாய்.... . .... *

(இ-ள்,) கருமத்தைச்செய்கிறபேர் சிலநாளையிலே கருமத்தைப்
போலத் திதைபடைவார்களறிவைநன்றாகவறிந்தபெரியோர்களா
ரென்றால் ஞானத்தைச்சொல்லுகிறபெரியோர்களிடத்திலேயும், மு
ண்மையான வஸ்துவினிடத்திலேயும், காதலுடனே மனதுவைத்த
பேர்களவர்களே ஐம்புலனையும்வென்றபேர்களென்றுசொன்னார் ஸ்ரீ
கிருஷ்ணதேவரென்றவாறு. (௨௯)

சொல்லருஞானப்பொருடெரியாதுசொன்னாலு.*
மல்லவிதாமென்றையுறுவார்களன்பில்லா .... . .. *
ரில்லவராவரிகபரமில்லா ரிவர்கண்டாய் .. ... ..... *
தொல்லறிவாலே யையுறவற்றார் துறவுற்றார்......*

(இ-ள்.) கருமிகளுக்குச் சொல்லுதற் கரிதான ஞானத்தினுட்
பொருள்தெரியாது அல்லவென்று ஞானத்தை எத்தனைசொன்னாலு
ம்,இதுவரமல்லவென்று சந்தோஷிப்படுவார்கள் சொல்லுகிறஞான
த்தினிடத்திலே யன்பில்லாதபேரவர்களுக்குச் சுகமிகபரத்திலுமில்
லைபேரறிவினாலே சந்தேகமற்றிருக்கிறபேர் துறவான ஞானத்தைத்
யறிந்தபேர்களென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு.

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

அறியாமையிலேபிறந்துன்ற னகத்தேவளர்ந்தேவையுறவை .... *
நெறியாநின்றஞானமெனும் வாளால்வெட்டியறநீக்கிக் .. . ... .. *
குறியானுன்றன்வினைவிளைத்துக் கொள்வாயென்றுங்கூறினான். ... *
உறியார்வெண்ணெய்தொட்டுண்டிவ்வுலகமுண்டபெருவாயான் *

(இ-ள்.) என்னையறியாமையினாலே யிதுவரைக்கும், உலகத்திலே
யனேகசனனமெடுத்தாய் இனி யுன்னுடைய மனதிலேவளர்ந்த சந்
தேகத்தைச் செவ்வையாயிருக்கின்ற ஞானவாளினாலே நீக்கியறவெ
ட்டிப்போட்டுக்குறிப்பாயென்பேரிலேமனதைவைத்துஉன்னுடை
யகருமத்தைச் செய்துகொடு வாவென்று வெண்ணெயுறிதாவிவெ
ட்டியுண்டுபூலோகத்தையு முண்ட பெருவாயனான ஸ்ரீகிருஷ்ணதே
வர்சொன்னாரென்றவாறு. (௩௧)

நான்காவது-சம்பிரதாய- அத்தியாயம் - முற்றும்.

ஆக அத்தியாயம் -௪- இ - கூடிய செய்யுள். (௱௪௭-)





ஐந்தாவது.

# சந்நியாசயோக

## அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

பூத்தருளியொருமலராற் புவனமவை யீரேழுங்...... *
காத்தருளிவிளையாடிக் கடையொடுக்கிக்கண்வளரும் *
தீத்தன்மறைமுறைமொழிந்த திருவாக்குத்தெரியாது *
பார்த்தனவனெதிர்நின்று சிலபின்னும் பகராநின்றான்... *

(இ-ள்.) திருவுந்தித்தாமரைப் பூவொன்றினாலே ஆதியிலே பதினாலுலோகத்தையுஞ் சிருஷ்டித்தருளிநடுவிலே அவைகளைக்காத்தருளித் தாமுங்கூட நின்று திருவிளையாடலாடி அந்தத்திலேயொடுக்கும் யோகநித்திரை செய்தருளுகிற சுவாமி வேதவிதியாகச்சொன்ன திருவாக்குத்தெரியாமல்அந்தச்சுவாமிமுன்னேநின்று பின்னையும் அருச்சுனன் சிலவசனஞ் சொல்லுகிறானென்றவாறு. ※ கடையென்றதனாலே ஆதிமத்தியம்வந்த தருத்தாபத்தி- ஒடுக்குதலாவது திருவயிற்றிலேயடக்குதல். (க)

(கலிவிருத்தம்.)

கருமநன் றெனவுமெதிர் சமழ்றுகின் றனைதுறவை.... *
யருமருந் தெனமொழிதி யவையிரண் டினுமமல... *
ஒருமையென் றுயர்தவில்லவை யுணர்செயென்றனனவிசைய.
னிருமையின்பரிசு மிதுவெனவியம்பிடு மிறைவன்... *

(இ-ள்.) கருமத்தைநல்லதென்றும் முன்னேசொல்லுகிறாய் ஞானத்தைஅரிதான அமிர்த சஞ்சீவி யென்றும் பின்னே சொல்லுகிறாய் நின்மலமானசுவாமிஅந்தக்கர்மஞானமென்றவிரண்டிலும் ஒன்றென்று அதிகமானதெது அதைச்சொல்லுமென்றான் அருச்சுனன் அதற்குச்சுவாமி யிரண்டின்விதமு மிதுவென்று சொல்லுவானென்றவாறு. ※ மருந்தெனவுமென்றும்மை வருவிக்க. (உ)

துறவுநன்றருவினைசெய் தொழிலுநன்றி வைதுணியி... ...*
லறவுநன்றருவினை கள்விடவிலங் கலைவு முயல்கை ... ... ... ...*
பெறவிவின்பமுமிழவிணிடரு மொன்றிலர்பெரிது......... *
துறவினின்றவர்பிறர்கம்மியரினின்றிம்தொழிலர்... .... ......... *

(இ-ள்.) ஞானமும் நல்லது அரியகாரியத்தைச் செய்கிற கருமமும் நல்லது இந்த இரண்டிலும் அதிகமேதென்று சொல்லத் துணிந்தால் அரியகருமங்கள் மெத்தவும் நல்லது அந்தக்கர்மங்களை விடுகிறதிலுஞ் செய்கிறது நல்லது பலன்பெறுதலிலே சந்தோஷமும் இழக்கிறதிலே துக்கமும் இவைகளொன்றுமில்லாதகர்மிகளே பெரிய ஞானத்தில் அசையாமல் நின்றவர் இப்படி இல்லாதவர்களான ஞானிகளே துக்கத்திலசையாமல் நிற்கிறகருமிகளென்றவாறு. ❋ பிறர்களால் பெறுதலிலே சந்தோஷமும் இழக்கிறதிலே துக்கமுமுள்ள ஞானிகள் பெரிய கருமியென்று மறிவது. (௫)

பெருமையொன்றிய துறவுகருமமென் றிருமையினு.... .... *
மருமையொன்றினை யறிஞரவை யிரண்டையுமுடைய . . .... *
ரிருமையென்றறியு மவரிவையறிந்தில ரியல்பி... ... ........ *
னொருமையென்றுணரு மவரிவை யுணர்ந்தவருணர்வில்...... *

(இ-ள்.) பெருமைபொருந்திய ஞானம்கர்ம்ம என்ற இரண்டிலும் ஒன்றைபருமையாக அறிந்தவர்களே அந்தவிரண்டையுமுடையவர்கள் இரண்டையுமொன்றென் றறியாம லிரண்டென் றறிகிறவர்களே இரண்டையுமறிய அறிவில்லாதவர்களிந்த இரண்டும் ஒருசுபாவத்திலே அறிவிலொன்றென் றறிகிறவர்களே யிரண்டையு மறிந்தவர்களென்றவாறு. ❋ துறவாவதுவிடுதல்- இந்த விடுதலை ஞானமென்றுமொழுதுவார்களென்னில் அறம்பொருளினபமான கர்மமொன்றைடம் விட்டதே ஞானமாகையாலே துறவை ஞானமென்றுமொழுகினது இரண்டாகவறிதலினாலே கர்மபந்தப்படுவனென்பது இயல்பினொருமை யென்றுணருமவரென்பது கர்மானுபவத்தையும், ஞானானுபவத்தையும், முன்னிலாராய்ந்து மனதிற்கொண்டு கொண்டதுசுபாவம் இந்தச் சுபாவத்தினாலே இரண்டனுபவத்தையுமொன்றாகக்கண்டு கொண்டபோது இரண்டனுபவமுமொன்றானதினாலே ஞானகருமமென்ற விரண்டும் ஒன்றென்று கொண்டநிற்கிறவர்களென்பது இதனாலே யிரண்டென் றறிகிறவர்கள் அந்தவிர

ண்டையுமே அறியார்களென்பது ஒன்றாக அறிந்தவன் ஞானியெ ன்பதருத்தாபகம். (௪)

வினைப்பயனற்றிடவதனில் வினைதருஞ்ஞானவேதுகோ............ *
டெனையடைந்திடுவரெவர்களு மதன்செயலெதனி.......... *
னினைவருந்தகைய பொருணெறியறிந்தவர்களெனறி.... ....... *
யனையதந்தொழில் புரியுமவர்களெனப்படுதனை யறி.... ..... ..... *

(இ-ள்.) பலனையிச்சியாத கருமத்தைச்செய்ய அந்தக்கருமபுலத்தில் ஞானம்விளையும் அந்தஞானத்தைக்கொண்டு எவர்களும் என்னைச்சேருவார்கள் அந்தக்கருமத்தின் செய்கையேதென்றால் நினைக்க அரிதான சூட்சுமமுள்ள பொருளின்மார்க்கத்தை அறிந்தவர்களுடையவழியையொப்பான தங்கள்கருமத்தைச்செய்கிறவர்களென்கிறதை நீயறியென்றவாறு. ✲ என்னையடைதலாவது-பிரமத்தையடைவதென்பது. இந்தப்பிரமத்தையடைகிறது இவனுக்குண்டு இவனுக்கில்லையென்பதில்லை எவர்களுங் கருமநிஷ்டனாகிற பிரமத்தையடைவார்கள். அந்தக்கருமஞ்செய்யவேதென்னிற் பிரமத்தையடைகிறவர்கள்வழியே கருமம்நினைக்க அரிதானசூட்சுமமுள்ள பொருளாவது பிரமம்நினைவருந்தகைய பொருணெறியறிந்திடுத லெனத்தனையதந்தொழில் புரியுமவரறிந்திடுவ ரறியென்று பாடமோதில் பிரமமார்க்கத்தையறிதலறிந்து அதையறிவதாமென்னில் அதையொப்பான தங்களுடைய கருமத்தைச்செய்கிறவர்க ளறிவர் அதைநீயறியென்றுரைகொள்ளும். (௫)

சுவைதருங்குணமுமிகு சுகிதரும்புலனுமெனு....... *
மிவைகடந்தவர்களெனையறிவினின் றிசையுமவர் .... .. *
நவைதருந்தொழில் செயினுநலிவதெங்கணாயவை *
யவையுகந்தவர்கள் வினையவைதுறந் தடைகுவதென் .. *

(இ-ள்.) கருமத்தைத்தரப்பட்ட குணமுமிகுந்த சுகத்தைத் தரப்பட்ட விஷயமுமென்று சொல்லப்பட்ட இதைக் கடந்தவர்க ளென்னையறிவிலே நின்று பொருந்தப்பட்டவர்க ளிவர்கள்குற்றத்தைத் தரப்பட்ட கருமத்தைச்செய்தாலும் அந்தக்கருமம் அவர்களை எங்கேவருத்தப்படுத்தும் வருத்தமாட்டாது தானேகெடும் அந்தக்கருமத்தை இச்சித்தவர்கள் அந்தக்கருமத்தினாலே விளைகிறபலனைவிட்டுப் பெறுவதென்ன அந்தப்பலனையே பெறுவா ரென்றவாறு. ✲

குணத்தையும் விஷயத்தையுங் கடந்தவர்கள் நிருமலராகையாலே அவர்களுக்கு நுட்பமான அழுக்கடையாது இச்சித்தவர்கள் குணவிஷயங்களுடனே கூடினவராகையாலே பலமாகிய அழுக்கடையுமென்பது.— (சு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

காணுங்கேட்குமுறாமுகக்குங் காலானடக்குங் கண்வளரும்........*
பேணுந்திறக்கு மூச்சுவிடும் பேசும்விழிக்குஞ் சும்பிளிக்கும்... *
பூணுமின்னும்பலவெனினும் புலன்சேர்பொறியின் புணர்ப்பென்
றே-தாணுங்கிரியுமென்வென்றுந் துளங்கான்விளங்குந்துணிவுடை
யோன்...................................................................*

(இ-ள்.) கண்பார்க்குங் காதுகேட்கும் தோல்பரிசிக்கும்மூக்குமுகக்கும், கால்நடக்கும், நித்திரைபண்ணும் கூடும்விடு மூச்சுவிடும், பேசும் கண்விழிக்கும் கண்மூடும். இப்படித்தரிக்கப்பட்ட இந்தவிதங்களனேகமாயினும் விஷயங்களைச்சேர்ந்த விந்திரியங்களின் அனுபவமென்றேநிச்சயமாக இவையெல்லாம் தான்பண்ணினவனல்லவென்றும் தூணைப்போலும் மலையைப்போலும், என்றைக்குங்கலங்காத அறிவுவிளங்கப்பட்ட துணிவையுடையவனென்றவாறு.❋ இவையெல்லாம் தான்பண்ணினவனென்றுந் தன் அனுபவமென்றும் அறிந்தவன் துரும்பைப்போலும் அணுவைப்போலுந் தடுமாறுவனென்ற திருத்தாபத்தி.— தானல்லவென்று விளங்காதவன் குளங்குவனென்றும். (எ)

யாரும்வினைகளென்பொருட்டா வியற்றிப் பயனை யிகழ்
வார்கள் - சேரும்வினைகள்வற்றோடு சேராரோவத்திறனு
ரைக்கிற்-சாருமுடனே பிறந்தெழினுந் தண்டாமரையி
ன்றகையிலையு - நீருமெனலா யிருப்பரது நின்றாற்கென்
று நிகழாதால்............................................*

(இ-ள்.) ஆராயினு மென்னிமித்தமாகக் கருமங்களைச்செய்துபிரயோசனத்தைவிட்டவர்கள் தங்களைச்சேரப்பட்ட கருமங்களோடுந்தாங்கள்சேரார்கள் அந்தக்கருமங்களோடு சேராதவர்களுடனே அந்தக்கருமங்கள் சேர்ந்தவிதத்தைச் சொல்லில் சார்பாகப்பட்ட தண்ணீருடனே கூடப்பிறந்தெழும்பினாலுங் குளிர்ந்ததாமரையினி

டமான இலையும் நீரும்ஒன்றோ டொன்று கூடினாலும் ஒட்டாது போலவிருப்பார்கள். அப்படி ஒட்டாமல் நின்றவர்களுக்கு என்றைக்கும் அந்தக்கருமம் நடவாதென்றவாறு. ※ நடவாதாவது அவர்களுடனே கூடிநடவாது அப்போதே பழுதுமென்பது, ஒழினுமென்றவும்மை-சிறப்பும்மை நீரிலேபிறந்து, நீரிலேவளர்ந்து - நீரிலே மூழ்கி யெல்லாம் நீராலே விளங்கினாலு மந்தநீரும், இலையுங் கூடினாலும்-ஒட்டாததினாலே சிறப்பும்மை. (௮)

(கொச்சகக்கலிப்பா.)

உடனாயபுலனாலு மனனாலுமுடம்பாலு ......... ※
நடமாகுமெனமுயல்வர் நாடோறுமுயன்றாலும் ...... ※
விடமாகும்வல்வினையே வீடாகும்வெறுப்பயனைக் .... . ※
கடனாகுமெனமுயல்வா னவற்றாலேகட்டுண்பான் ...... ※

(இ-ள்,) கருமத்துக்குடனாகிய விஷயத்தினாலும், மனதினாலும், உடம்பினாலும், பலசங்கம - நஷ்டமாகுமென்று கருமத்தைச்செய்வார்கள்-தினந்தினமுஞ் செய்தாலும், விஷயத்தை யொப்பாக வெறுக்கப்பட்ட வலுமையானகருமமே மோக்ஷமாகும், கருமப்பலனைத்தனக்கு அனுபவிக்கக்கடனுமென்றிச்சித்துச்செய்கிறவன் அந்தக் கருமத்தாலேகட்டுண்பானென்றவாறு. ※ பலசங்க நஷ்டமாவது கருமபலத்துடனே கூட்டம்நாசமென்பது பலத்துடனேகூடின சித்தத்துக்குப்பலசங்கம்-நஷ்டமாகவே சித்தசுத்தியாமென்றறிவது பலனை விஷமாகநினைத்துச்செய்கின்ற கருமிக்கு அந்தக்கருமமே மோக்ஷமாம்வேறில்லை கருமப்பலனை அமிர்தம்போல அனுபவிக்கக் கடனுமென்றிச்சித்தவன் கருமபந்தப்படுவனென்பது லக்ஷித்தால் வந்த அமிர்தம்-ஆகுபெயர், (௯)

(கலிவிருத்தம்.)

அன்பவினையாகுபயன் விட்டமைதியாலே...... ※
யொன்பதுபொய்வாயிலமை யூரதனினுள்ளே ※
இன்பவுருவாயினி திருப்பனியல்பாயே ........ ※
முன்பயில்வதாம்வினைசெய் யென்முயல்வியேறல்.

(இ-ள்.) தோழா! கருமத்தாலுண்டாகிறபிரயோசனத்தைவிட்டு-அடங்கி யமைந்தவிவேக சித்தத்தினாலே ஒன்பது பொய்வாசலமைந்த ஊரானதேகம்-அந்தத்தேகத்தினுள்ளே சுக சொரூபமாய்

ச் சுகமாயிருப்பான் கருமமானது சுபாவமாகவே அநாதியேவந்த பழக்கமாம், நான்கருமத்தைச் செய்தேன் செய்வியேனென்றவாறு. ❋ இதன்பொழிப்புரை- இந்திரியஜெயமுண்டானவன் எப்படியிருப்பானென்னில்- அடங்கியமைந்த விவேகசித்தத்தினாலே கருமத்தாலுண்டாகின்ற பிரயோசனத்தைவிட்டுத் தான்கருமப்பயனைப்பண்ணுவியேன் கருமமானது - நவத்துவாரபுரமான தேகத்துக்குச்சுபாவமாக அநாதியேவந்த பழக்கமென்று அந்தத்தேகத்துள்ளே சுகசொரூபமாய்ச் சுகமாயிருப்பனென்பது இதனையடைந்தயாலே வினையாகுபயன்விட்டு வினைசெய்யேன் முயல்வியேனென்பது பொய்வாயிலமையூரியல்பாயே முயல்பயில்வதா மதனினுள்ளேயின்பவுருவாயினிதிருப்பனெனமாறுக. (௰)

இவ்வகையினுயசெயல் யாவுமியல்பேகா............. .*
ணவ்வகையமாயையதனாலறிவுறுதே.......... ......*
செய்வகையன்யானெனது செய்கையிவையென்றே... *
பொய்வகையினாலழிவரே புலனிலாதார் ... ................*

(இ-ள்) இந்தவிதத்தினாலுண்டாகிய கருமங்களெல்லாஞ்- சுபாவமேகண்டாய் அருச்சுனா அந்தவிதமான மாயையினால் அறியமாட்டாமல் கருமங்களைச்செய்தவன் நான் இந்தக்கருமங்கள் நான்செய்தேனென்று நிச்சயமாகப் பொய்விதத்தினாலே நாசமாகிறவனேயறிவில்லாதானென்றவாறு. ❋ என்றேயென்ற ஏகாரமும் இயல்பேயென்ற ஏகாரமும், உறுதேயென்ற ஏகாரமும், அழிவரேயென்ற ஏகாரமும், தேற்றேகாரம், அறியமாட்டாமலாவது - கருமங்களைச்சுபாவமென்றறிய மாயாமயக்கத்தினாலே மாட்டாமலே நான்செய்தேன் என்கருமமென்றே பொய்யான அகங்கார சுதந்தரவிதத்தினாலேயறிவில்லாதானுசமகிறதேயல்லாமல் இருக்கமாட்டுவானுமாட்டானென்பது- இயல்பேயாவது- சுபாவமே யல்லாமல் வேறல்லவென்பது அறிவுறுதேயாவது- அறியமாட்டாமலே யல்லாமல் அறிந்தல்லவென்பது என்றேயாவது நான்செய்தேன்கருமமென்றேயெல்லாம் சுபாவமாகச்செய்யப்பட்டது சுபாவமாகவுள்ளகருமமென்றெண்ணமல்லென்பது- அழிவதேயாவது அழிவதல்லாமலிருப்பதில்லையென்பது அறிவுள்ளவர்கள் மாயையை நீங்கிச் சுபாவமென்றறிந்து தன்செயலுஞ் சுதந்திரமும், மற்றும் அழியாமலிருப்பமென்பது கருத்தாபத்து. (௰க)

(கலிவிருத்தம்.)

அறிவினாலறிவிலாத வையெலாமழியவே.........*
செறிவினாரறிவுவா னிரவிபோற்றிகழுமா...... *
நெறியினாலிதனிலோர் நிலையுமாயிதனிலோர்...*
பிறிதிலாவகையினார் பிறவியானவையிலார்... ...*

(இ-ள்) ஞானத்தினாலே-அஞ்ஞானமெல்லாம் நாசமாகவேகண்டானவர்கள் ஞானமானது ஆகாசத்திலேவிளங்குகிற சூரியனைப்போலப்பிரகாசிக்கும் இந்தமார்க்கத்தினாலே ஞானத்திலேநிலையையும் நிஷ்டையுமாகி இந்தஞானத்மாவானவைசதந்நியனிடத்திலேவேறொன்றில்லாதவிதத்தினாலே பரவசத்தை யுடையவர்கள் இனிமேற்பிறக்கிறதானசனனமில்லாதவர்க ளென்றவாறு. ❁ வெறொன்றுவது அஞ்ஞானத்திலே மயங்கி ஆங்காரத்தை யடைந்து மறுபடிபிறக்கிறது.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

நன்றேஞானம்வருமறையோ னட்டினாயினிறைச்சியினைத்.........*
தின்றேபழலுமவன்யானே யாவேனறிந்தநிறத்தெல்லா.........*
மன்றேயென்றுதாமென்று தறிவாய்நின்றவனையெங்கும்.........*
ஒன்றேபாகக்கண்டிருப்பா னுடம்போடிருந்தேயுடப்பறப்பான்.*

(இ-ள்.) நன்மையுள்ளஞானம் வரப்பட்டபிராமணன் நாட்டிலே நாயினிறைச்சியைத் தின்றுசும்மாறுகின்றநீசன் ஆனைபசு இப்படியென்றறிந்தவிதத்திலெல்லாம் ஏற்றக்குறைச்சலினாலே அல்லவென்றுமல்ஆமென்றுமல்ஆத்துமாவாய் நின்று அந்தக்கருமங்களெக்கும் ஒன்றாகவே கண்டிருக்கிறவன் அந்தவுடம்போடே யிருந்தநிஷ்டிதேகத்தை இனிமேல் வாராமலறுப்பானென்றவாறு. ❁ இப்படியெல்லாரிடத்திலும் ஆத்மாவொன்றாகக் கருமங்களு மொன்றாக இசையல்லவென்றுமல் ஆமென்றுமல் சமமாகக் கண்டிருக்கிறவனிந்தத்தேகத்துடனே இந்தப்பிறவியை யொழிப்பானென்பது.(௰௫)

இகமேநிகழும்புலன்விளைந்த வின்பமெல்லாமறவிகழ்ந்துள்......*
ளகமேநிறையுப்பேரின்ப மடைந்தார்க்கென் றுமழியாதாற்...*
புகமெய்யென்றபுலன்பொறிகள் புணர்ந்தேயின்பமென்றுந்...*
தகமேவிடார்மெனவுமவை தக்கோரொன் றுஞ்சாரரால்.........*

(இ-ள்.) வெளியிலேவிளங்கும் விஷயங்களிலே விளைந்தசிற்

றின்பமெல்லா மறவிட்டு- உள்ளே நிறையப்பட்ட பேரின்பத்தையடைந்தவர்களுக்கு என்றைக்குமந்தப் பேரின்பமழியாது பண்டிப்புநூத அனுபவிக்கின்ற விஷயங்களிந்திரியங்களைப் பொருந்திச்சுகமாமென்றும், அனுபவத்துக்குத்தக்கதாகமேயிட்ட துக்கமாமென்றும். அவைகளை ஞானத்துக்குத் தக்கவர்களான பிரமஞானிகளென்றைக்குஞ் சேரார்களென்றவாறு. ஸ்ரீ பேரின்பமாவது ஆத்மசித்தி ஆகையால் ஆத்மலாபம்பெற்றவர்களுக்குப் பிரமநிஷ்டை தவிராதென்பது. ஆல்-அசை. சுகமாமென்ற சந்தோஷத்தையும், துக்கமாமென்ற க்லேசத்தையும் ஆத்மஞானிகளடையானென்வே யிதிவிளையாத நிருத்தியா யிதைமோகியாத அமோகியாயிருப்பானென்பது அருத்தாபத்தி. (௰௪)

(கலிவிருத்தம்.)

உடம்புடனேயுளனாகியிருந்தே .. ..... .... .... .... *
விடம்புரைகாமவெகுளியின்வேகாச் ... ........ ...*
சடம்பொறைநீர்மைதவிர்ந்தவனேநல ....... ...*
லிடம்புகுஞானியுமின்புறுவானும் ... ..... ........ *

(இ-ள்.) உடம்புடனே யுள்ளவனாகியிருந்தே விஷத்தையொப்பான காமத்தின்வேகம் கோபத்தின்வேகம் இந்தவேகங்களாலாகிற தேகம்பொறுமையைத் தீர்ந்தவனே நல்லிடமான மோட்சத்தைக் கூடுகின்றஞானியு மானந்தப்பெறுவா னென்றவாறு. ஸ்ரீ உடம்பு போனபின்பு அறிவுளராகிறேலே வுடம்புடனே இருக்கும் போது தானே ஞானம் பெறவேண்டு மாகையா லுடம்பிருக்கும் போது தானே காமக்-குரோதாதிகளின் வேகத்தைப் பொறுக்க அறிகிறவனேஞானிடஞ் சுகியமென்பது இதையறியாதவன் மூடனுந் துக்கியுமென்றதருத்தாபத்தி. (௰௫)

மெய்யறிவேவிளையின்பமதாகவு........................ *
மெய்யறிவேவிளையாடிடமாகவு ......... .... ......... ... ... *
மெய்யறிவேயொளியாகவுமேயா ... .......................... *
மெய்யறிவைப்பெறுமின்பம்விடாதார் ............ ...... ... *

(இ-ள்.) ஆத்மாவே விளைப்பட்ட சுகமாகவும், ஆத்மாவேவிளையாட்டிடமாகவும், ஆத்மாவேசோதியாகவும், இப்படியாகுமவர்கள் ஆத்மாவேபெறப்பட்ட மோட்சசுகத்தை விடாதவர்களென்றவாறு.

ஆ விளையாடுமிடமாவது-ஆத்மா-ராம மானந்தமானவ னிதைஆத்மா ராமனெனையார்கள். (௰௬)

காவல்செய்தஞ்சுபுலன்கணிரண்டு...............*
மேவவரும்பருவத்திடைவிட்டிட................*
டாவகைநின்றவபானபிராண ......................*
னேவலினன்றியியக்கமறுத்தே ................... *

(இ-ள்.) பஞ்சேந்திரியங்களை விஷயங்களிலோடாமற் காவல் செய்து கண்களிரண்டும் யோகத்தைக்கூட வருகிறபருவத்திலேயே விலேவிட்டு நிறுத்தியோகத்துக்கான விதமாகநின்ற அபான வாயுவையும்,பிராணவாயுவையுந் தன்னுடைய ஏவலின்றிமேலோடிமீறுவதல்லாமல் அவைகளின் சுபாவமாக ஓடுவதான அசைகின்றலதையறுத்து அடக்கியென்றவாறு. (௰எ)

அஞ்சுமொறித்திறனாசையடக்கா ..............................*
னெஞ்சுபயத்தொடுகோபமுமனீவா.......... ... .........*
வெஞ்சுதிறத்திலியோகிகளேசா ...................... *
ஞஞ்சுபிறப்பிட ரியாவுமுதிர்ந்தார்................ ...*

(இ-ள்.) பஞ்சேந்திரிய விதங்களின் ஆசையையடக்கி - மனசுபயத்துடனேகோபமும்நீக்கி ஒருநிமிஷமாகிலும் மிளைத்துவிடுவதில்லாமல் நிரந்தரமுமிப்படி யிருக்கிறயோகிகளே கண்டாய் கருமத்துக்குத்தப் பிழைத்துப் பிறவித்துக்கமுதலானதுக்கமெல்லாங் கிழேவிழ அடித்தவர்களென்றவாறு. ஆ காவல்செய் தென்றகவியும், அஞ்சுமொறியென்கவிடம், உமையொருதொடர் இந்திரியங்களைக் கட்டிக்கண்ணிரண்டையும் பருவநடுவே நிறுத்திப் பிராணபானமானவிரண்டும் அவைக ளிச்சையாக அசையாமற்றனக்கு வேண்டியபோதசையை அடக்கியிந்திரிய ஆசையையடக்கிமனப்பயத்தையுங்கோபத்தையுங் கைவிட்டுஇளையாமலெப்போதுமிப்படி யிருக்கிறயோகிகளெதப்பிப் பிழைத்துப்பிறவித் துக்கமுதலான துக்கமெல்லாம் விழத்தள்ளி னவர்களல்லாமல் இப்படியிராதவர்க ளல்லகண்டாயருச்சுனமென்று (இரண்டுகவிக்கு மிதுமொழிப்புரை) உதிர்ந்த லாவது அப்படி யிருக்கிறயோகிகள் மேலேலின்னவர்களாகையால் அங்கேகூடவிருந்தபிறவித் துக்கமுதலான வெல்லாங்கிழேயுதிர அடித்தவர்களென்பது இவர்களுக்குப்பிறவி முதலொருதுக்கமுமில்லாதென்றகருத்தாபத்தி. (௰அ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சாதிபுரியுந்தொழில்களுக்குந் தக்கோர்செய்யுந் தவங்களுக்குந்...*
தீதிலுலகமேழினுக்குஞ் சேருமிடமா யுள்ளவனை ... ..... .... ... ....*
யோதிமுடியம்பரிசேமெய் யுணர்ந்தார் பிறவாவெனவுரைத்தார்... *
னாதிமுடிவொன்றின்றியே யடையத்தானே யாய்நின்றான் ... ... ... *

(இ-ள்.) அந்தந்தச் சாதிகள் செய்யப்பட்ட கருமங்களுக்கும் பெரியோர்கள்செய்யப்பட்ட தவங்களுக்குங் குற்றமில்லாத வேழுலோகங்களுக்குஞ் சேரப்பட்ட இடமாயிருக்கிற வென்னையோதி முடியப்பட்ட முறைமைபோல மெய்யாக அறிந்தவர்கள் இனிப்பிறவா ரென்றுசொன்னார் அவர்யாரென்னில் ஆதியந்தமொன்றுமில்லாமலே யெல்லாந்தானே யாகின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்வாறு. (௰௩)

அஞ்சாவது சந்நியாசயோகவத்தியாயமுற்றும்.
ஆக அத்தியாயம்-ரு இ - கூடிய் செய்யுள் (௱௬௰௩.)





ஆறாவது.

# அப்பியாசயோக

## அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

யோகமனத் தவர் யோக மதற்கே ........ ........................*
யேகமுதற் பொரு ளாகி யிருந்தே.............................*
நாகணைத்திடை யேநட மாடு ................ ........... .....*
மேகமவாக்கிவை மீள விரிப்பான்........................ ........*

(இ-ள்.) யோகமன முடையவர்களின் யோகத்துக்கு ஒன்றுகிப் பொருளாகியிருந்தே காளிங்கனென்னு மொருபாம்பின் நடுவே கூத்தாடப்பட்ட மேகநிறமான திருமேனியையுடைய ஸ்ரீகிருஷ்ண சுவா

(இ-ள்.) தப்பிப்பிழைக்கிற விதமானயோகத்திலொருமைப்படுகி றவர்களுக்கு அத்வயோகங் கைவருகிறபடி செய்கிற கருமமே கார ணங்களையாயருச்சுனு அப்படிமெய்யான விதமாகியயோகம் விளை ந்தபின்பு செய்கிறதான அர்த்தக்கருமமானது மெய்யாகவே பொ ல்லாததுமென்றவாறு. ❊ ஏகாரம்-அசை. யோகமேஞானம் ஞான த்துக்குமப்படி யென்ப தருத்தாபத்தி. (ச)

புன்மையவாய பொறித்திற ஞேடும் .. ............ ❊
பன்மையவாய வினைப்பய ஞேடும்................ ❊
அன்மைய னனவனப்பொழு தைய்யா.............❊
தன்மையில்யோக மதித்தலை நின்ருன்................ ❊

(இ-ள்.) புல்லியதாகிய விந்திரிய விதங்களோடும் பதவித மாகிய் கருமபலத்தோடுங்கூடாதவன் அப்பொழுதே ஐயா தன் சுபாவமி ல்லாதயோகத்திலே தலைமையாக நின்றவ னென்றவாறு. ❊ கூடின வன்கீழாகி நாசமானவனென்ப தருத்தாபத்தி. அன்மைய னவது- அல்லாதவன்- அதாவது- விஷயங்களோடும் பலத்தோடுங் கூடின வனெல்லாதவன் ஆகையாலே கூடாதவனெனபது அப்பொழுதேயெ ன்றது- பின்னேவருமென்னுமல் அப்பொழுதே யென்றது சங்கை நிவர்த்தி.— (ரு)

தானலதியாவர்தன் மேன்மை செயத்தக்கோர் .. ❊
தானலதி யாவர்தன் கீழ்மை செய்ப்பார்............ ❊
தானலதியாவர்தன் மெய்ப்பகைய ராவார் ........❊
தானலதி யாவர்தனக்குறவ ராவார்...................❊

(இ-ள்.) இப்படிஞானசிரேட்டனுக நின்றவர்தானே தனக்குமே ன்மைசெய்யத்தக்கவ னல்லாமல் வேறேயார் தனக்கு மேன்மைசெ ய்யத்தக்கவர்களாருமில்லை இப்படி ஞானநிலையில் நில்லா தவன் தா னே தனக்குக் கீழ்மைசெய்கிறவ னல்லாமல் வேறேயார்தனக்குக்கீழ் மைசெய்கிறவர்களாருமில்லை இப்படிக்கொத்த அஞ்ஞானி தானே தனக்குமெய்யான பகையல்லாமல்வேறே யார்பகையாகிறவர்கள்ஆ ருமில்லை ஞானிக்குத்தானே தனக்கு உறவல்லாமல் வேறேயார் தன க்குஉறவாகிறவர்கள் யாருமில்லை யென்றவாறு. ❊இதனல்ஞானியா யிருந்தால்தானே தனக்கு மேன்மைசெய்கிறவனும் உறவாகிறவனு

ம் அஞ்ஞானியாயிருந்தால் தானே தனக்குத்தீமை செய்கிறவனும் பகையாகிறவனும் தன்னையல்லாமல் வேறேயாருமில்லையென்பது அஞ்ஞானியாலே வருகிறதேதென்னில் அதுவுந்தம் அஞ்ஞானங்களால் வந்ததாகையால் அன்னியராலே வந்ததல்ல தன்னாலேவந்ததேயாம் ஆகையால் தனக்குநன்மைவேண்டில் ஞானியாயிருக்கவென்றது இது அருத்தாபத்தி. (௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இறவாவகைதம் முள்ளத்தை யடக்குமவரோ தடக்கென்று...... *
முறவாயுள்ளரல்லாதார் தமக்கேபகையாய் நடப்பார்...... *
துறவாதொழுகுந் தவந்துவங்க டுறந்தான்றனையே தொடர்ந்தவ
னிப்பான் - மறவாதெழுந்தமெய்யறிவின்மாயைமறைக்கமறையாதால் -

(இ-ள்.) ஆத்மஞானத்தை நாசமாக்காதபடிக்குத்தங்களின் மனதையடக்கப்பட்டவர்களே என்றைக்குந்தங்களுக்கு உறவாயுள்ளவர்களிப்படியல்லாதவர்கள் தங்களுக்கே பகையாய் நடப்பார்கள் விடாமல்நடக்கப்பட்ட யாவத்தொடர்புகளைவிட்டு ஒன்றான ஆத்மாவையே தொடர்ந்தவர்களிடத்தில் மறவாத அனுசந்தானத்திலெழுந்தமெய்ஞ்ஞானமானது இந்தமாயைமறைக்க அதனாலே மறையாதென்றவாறு. ❀ இதனாற்றன்மனதைச் செயித்தவனுக்கு அந்தமனதேவுறவுசெயிக்காமலைவிட்டவனுக்கு அந்தமனதேசத்துரு துவந்துவமான மாயாசம்பந்தங்களைவிட்டு ஆத்மாவையே தொடர்ந்தவனுக்கு அனுசந்தானத்திலெழுந்தஞானத்தை இந்த மாயை மறையாதென்பது ஆகையாலாத்ம ஞானமிலாமல் மனதைச் செயிக்கமாட்டான் இவன்ஞானத்தை மாயை மறைக்குமென்ப தருத்தாபத்தி.— (௭)

பாடும்பனுவல்பலவோதி யவற்றாலறியும் பயனுணர்ந்து..... *
நீடும்புலன்களைவென்று நிலையிற்கலக்கற்கரியனா ... .... *
யோடும்பொன்னு மொருபொருள்போலொக்கப்பார்க்கு மவ
னேயிங் - காடும்பெரியமாய்க்கூத்தாடாத்துகளன் றடைந்திரு
ப்பான் ...... *

(இ-ள்.) பெரியோர்களாலே பாடப்பட்ட பலநூலுமோதி யந்த நூலாலே யறியப்பட்ட பலனையறிந்து வளரப்பட்ட விஷயங்களை

ச்செயித்துத் தான்நின்றநிலைமையில் நில்லாமல் கலங்கச்செய்கிறத ற்கு அரிதானவனாய் ஓடும்பொன்னும்மொரு பொருளைப்போலச் சரியாகப்பார்க்கப்பட்டவனே யிங்கேகோடப்பட்டபெரியமாயக்கூத்தாட்டத்தைக்கண்டு அமைந்திருப்பானென்றவாறு. ஜ நிலைகலங்காததும்மனசுசெயமானது-ஓடும்பொன்னுஞ் சரியாகப்பார்க்கிறதாவது-நிருவிகாரம்- இப்படிச்சித்தேந்திரியனாய் நிருவிகாரனாய்ச்சித்தசெயவானாயிருக்கிறவனே மாயக் கூத்தாட்டத்தைக் கண்டமைந்திருப்பவனிப்படி யிராதவன்மாயக்கூத்திலகப்பட்டாடுகிறவனென்றதருத்தாபத்தி-இங்கேஎன்றது இக்கிலிங்கேயென்றது பரம இகத்திலிந்திரியவியாபாரனாய் விகாரமுய்ச்சித்தசஞ்சலனாய் இருக்கிறவன்மாயக்கூத்தில் அகப்பட்டவன்- இவைகளில்லாதவன் பரத்தில்மாயக்கூத்தாட்டத்தைக்கண்டு முன்னேயிருக்கத்தக்கூடியதாடினமாயக்கூத்தொழிந்திருப்பானென்பது. (௮)

கைம்மாறில்லாதனசெய்வான் காதற்றோழன்கடும்பகைஞன் ..... *
விம்மாதெவற்றுமொத்திருப்பான் வேண்டப்படுவான் வேண்டாதா *
னம்மாமறைநானெறிபுரிவானாகாதனவாக்கிடுவானென .... .... .... *
மிம்மானிடவரனைவர்க்கு மொப்பான்யோகியெனப்படுவான் ..... *

(இ-ள்.) எதிருபகாரமில்லாதவுபகாரஞ் செய்கிறவன் அன்புள்ளசினேகிதன் கடுமையுள்ளபகைஞன் சிக்குணக்கம் வந்தபோது சந்தோஷமுங் கிலேசமும்படாமல் எல்லாவற்றிலுமொத் திருக்கிறவன்- வேண்டப்பட்ட வுறவினன் வேண்டாதபாவி தழுதுய்பெருமையுமுடைய வேதசாஸ்திரத்தில் சொன்ன மார்க்கத்தைச் செய்கிறவன் ஆகாதகாரியத்தை யாகப்பண்ணி எல்லாராலும் உதாசினிக்கப்பெற்றவனென்று சொல்லப்பட்ட இந்த மனிதரெல்லாருக்கும் ஆத்மா சமமென்றறிந்து சமமாயிருக்கிறவன் யோகியென்று பெரியோராலேசொல்லப்படுவனென்றவாறு. ஜ இவர்கள் முதலானவர்களெல்லாரும்தானாய்- இவர்கள் செய்வதெல்லாம் தான் செய்வதாய் இவர்களுக்குவருகிற பிரயோசனங்களெல்லாந் தனக்குவந்ததாய் இவர்கள் அநுபவமெல்லாந் தான் அநுபவிக்கிறதாக நிச்சயமாக அறிந்து சமமாயிருக்கிறவனே யோகியென்று பெயருண்டானவனென்பது.

தலைசாய்ந்தபோகத்தைத் தலைநின்றொழுகுந்தன்மைகே ........ *
ளுலையாவாஞ்சையறமாற்றி யொன்றுந் தனகமெக்கொழுகாதே ...... *

மலையார்முழைஞ்சேமுதலாக யோகங்களுக்குவகுத்துரைத்த...... *
நிலையாவையினுமொன்றினில்வந் தியாதுநவியா நிலத்தினிலே... *

(இ-ள்.) சிரேஷ்டமான இந்தயோகத்தைமோக்ஷத்துக்குமுதன்மையாகநின்று நடக்கப்பட்ட வியல்பைக்கேள் - அருச்சுனா; வருத்தஞ் செய்யப்பட்ட ஆசையைநன்றா யறவிலக்கிஒருவிஷயமாவது தனக்குவேணுமென்று அந்தவிஷயத்துடனேகூடிநடவாமல் யோகங்களுக்கு வகுத்துச்சொன்ன மலையிலிருக்கிற முழைஞ்சு முதலாக உள்ளவிடங்களெல்லாவற்றிலும் ஓரிடத்தில் மிருகபட்சி முதலானவைகளெல்லாம்வந்து வருத்தாதநிலத்திலென்றவாறு ※ இதனால் ரகசியதலத்தில் ஏகனாய் ஆத்மாவிஷயத்தில் நிறுத்தினவனாகா க்கிறசித்தனாய் ஆசையில்லாதவனாய் விஷயபதார்த்தங்களிலேகூடாதவனாய் சுசியானதலத்திலே மிருகபட்சியால் வருத்தமில்லாத நிலத்திலே யிருக்கவேணுமென்பது யாதுநவியாதாவது தழைநீர்விறகு தருப்பைமுதலானவை கிடையாமல்வருத்தாத கிடைக்கிறநிலத்திலென்றுஞ் சொல்லலாம். (௰)

ஒக்கும்வகையாற்குசைபரப்பி யதன்மேலுழைபின்றோல்படுத்துத்.
தக்கபுடைவையதன்மேலே விரித்துத்தானங்கதிலிருந்து ....... *
மிக்கமனனையறவொடுக்கி வேறுசெய்யும் வினைகளுடன்.... ..... *
னெருக்கபுலன்கடமையடக்கி புணர்வுதூய்தாவதன்பொருட்டால்... *

(இ-ள்.) உயரமும் தாழ்வுமில்லாமல் ஒத்தபடியாலே தருப்பையைப்பரப்பியதன்மேலே மானின்றோலைப்படுத்துச் சுத்தமாகத்தக்கபுடைவையை அந்தக்கிருஷ்ணாசனத்தின்மேலே விரித்து அந்தப்புடைவையின்மேலே தானங்கிருந்து சேட்டைமிகுந்த மனதைச்சேட்டையற ஒடுக்கித்திரமாக்கி ஞானத்தை வேறுபடுத்தப் பட்ட கருமங்களுடனே கூடின விஷயங்களை யடக்கி அறிவுசுத்தமாகிறநிமித்தமாகவென்றவாறு. ※ அறிவுசுத்தமாவது- சித்தசுத்தி ஒக்கும்வகையாவது- மேடுபள்ளமில்லாதபடி புடைவையென்ற படாதத்தைத் துகிலையென் றேதுவாருமுளர் (௰௧)

[illegible]த்துமுடம்புமிவை செவ்வேதளராதேயிருத்தி........ *
[illegible]ருந்துகண்களைத்தன் மூக்குநுனிமேலேநிறுத்தி ....... ... *

தலையுங்கடல்போற்காமமுமெய் பயமுந்தன்னைவிட்டகல............. *
உலையுமனமுள்ளடக்கியென்னை யுணர்ந்தேயிருக்குமதுயோகம்... *

(இ-ள்-) தலையுங் கழுத்தும்-உடம்பும் இவைகளைச் செவ்வையாக அசையாமல் நிறுத்திப்பத்மசனமுதலான ஆசனத்திலிருந்து தன் மூக்கு நுனியின்மேலே கண்களை நிறுத்தி-அலையாலலையப்பட்டகடலைப்போலான ஆசையுஞ் சரீரபயமும்விட்டுப் போகவிஷயங்களிலே திரியப்பட்ட மனதைத் திரியாமலுள்ளடக்கி என்னைமேலானபரமனென்றறிந்திருக்கப்பட்டதுவே யோகமென்றவாறு. ※ தலையாமென்றகவியும்,ஒக்குமென்றகவியும்- தலையுங்கழுத்துமென்றகவியும்-ஒருதொடர். (௰௨)

(கொச்சகக்கலிப்பா.)

என்னடிகழும்யோகத்தை யிப்பரிசாலெப்பொழுதுங்.... *
கொண்டுபயிலபவர்கடைக்காலென்னையேகூடுவா...... *
ருண்டியினின்மிகவாவருண்டுறப்பார்க்குறங்கிக்... *
கண்டுயிலையறத்துறப்பாரவர்க்குங்கைவாராதால்..... *

(இ-ள்.) உலகத்தார் மதித்துவிளங்கப்பட்ட யோகத்தை இந்தவிதத்திலெல்லாநாளும் என்னிடத்திலே மனதை நிறுத்திக்கொண்டு பழகுகிறவர்கள் முடிவுகாலத்திலென்னையேசேருவார்களல்லாமல் மாயையிலே கூடார்கள் போசிப்பில் மிகுந்தவர்கள் அந்தப்போசிப்பைவிட்டவர்கள் மிகுந்து நித்திரிக்கிறவர்கள் நித்திரையைச் சுத்தமாகவிட்டவர்கள் அந்தநாலுபேருக்கும் இந்தயோகங் கைவராதுபசித்தபோது அற்பபோசனமும், நித்திரைவந்தபோது அற்பநித்திரையுஞ்செய்து யோகத்தைச்செய்தாற் கைவருமென்றவாறு. ※ கைவருதலாவது பலித்தல்-என்னைக்கூடுவாரென்று பாடமோதிலிருவருக்குமிடம் வேறுபடும் அதேதெனில் - ஓரிடத்திலிருக்கிறவனை வேறொரு இடத்திலிருக்கிறவன்வந்து கூடுவதாகுமதனாலேஎன்னை வந்து கூடுவாரென்றபாடமாகாது அற்ப போசனமும் அற்பநித்திரையும் செய்கிறபோது யோகஞ் செய்யக்கூடாதில்லை அவ்விரண்டையும்விட்டு எந்நேரமும், யோகமொழியாமல் யோகஞ்செய்யலாமே அதனாலறவிட்டவர்களுக்குங் கூடயோகம் பலியாதென்றதின்னில். பிராரத்தமமூன்றுவிதம் அதாவது சுவிச்சையாபிராரத்தமென்றும் அநிச்சையாபிராரத்தமென்றும் பரவிச்சையாபிராரத்த

மென்றுமாம் இவற்றிலசு வேச்சையாபிராரத்தமாவது தானிச்சித்து வருகிறது- பரவிச்சையாபிராரத்தமாவது - அன்னியருடையவிச்சையினாலே வருவது அநிச்சையாபிராரத்தமாவது சுபாவமாகவந்து கொண்டேயிருக்கிறது. இவற்றில்சுவேச்சையான காமக்குரோதாதிகளைவிட்டுப் பரவிச்சையானபிருசபக்ஷிவருத்தாதவிடத்திலிருக்கச்சொன்னதினாலே சுவேச்சைபரவிச்சை இந்தஇரண்டுந்தள்ளலாகிறது இனித்தள்ளலாகாததான அநிச்சியாபிராரத்தமான பசி நித்திரைமுதலானவைகள் சுபாவமாகவேவந்து கொண்டிருக்கிற தாகையால் அவைகள் பிறவியற்றுவல்லாமல் விடா அவைகளைச் சத்துபரிசத்தடக்காவிட்டாலவை விடயொழியாத் தன்பமா வுபசரித்தடக்கிக்கொண்டே யோகஞ்சாதிக்கவேணுமென்றது இதனால் ஒருநாள் அறுபதுநாழிகையுங் கழிவதிலவைகளை யுபசரித் தடக்குகிறதொருநாழிகை கழிவது நன்று ஐம்பத்தொன்பது நாழிகையோகமே போதுமென்பது குறிப்பு இதனாலே கொஞ்சப்பழிப்பைச் செய்து பெருவத்தினை கீர்த்தியடைதல் நன்றெனவறிவது பழிப்பில்லாமற் கீர்த்திவாராது செலவில்லாமல் ஆதாயம்வாராது போலவென்றறிவது.— (௰௬)

துயிலுமுணவுஞ் செய்தொழிலுமிகாமேகுறைந்துதோ
ன்றுமே - பயிலுமவனே யோகத்தைத் தன்பாற் படுக்கு
ம்பான்மையா - னயிலும்பொறிவிட்ட டவ்வறிவு தன்பா
லடக்குமப்பொழுது - குயிலுமியோகந்தனினின்றானெ
ன்றுங்கவனைக்கூறலாம்.........................*

(இ-ள்.) நித்திரையும்போசனமுஞ் செய்கிறகாரியங்களும் அதிகமாகாமற் குறைந்துகாணமற் சமனாக தனக்குத் தக்க நித்திரையும் போசனமுங் காரியமுஞ் செய்யப்பட்டவனே தன்னிடத்தில் யோகத்தைவொழியாம விருத்தப்பட்ட சுபாவத்தையுடையவன் பொசிக்கிறவிந்திரியத்தைவிட்டு நியமமான அந்தச்சித்தத்தைத்தன்னிடமாகிய ஆத்மாவினிடத்தில் நிறுத்தியடக்கப்பட்ட அப்பொழுது சகல இச்சைகளினும் விடுபட்டுச்செய்யப்பட்ட யோகத்தில் முதன்மையாகநின்றானென்றவனைச் சொல்லலா மென்றவாறு. ※ அநிலைச்சித்தமென்பது அறிவுண்டாகிற இடமாகையால்சித்தமென்றது. அறிவையோ சொல்லலாகாதோவென்றால் அறிவையடக்கில்ஆத்மாதோ

ன்றது ஆகையாலலைகிற சித்தத்தையலையாம லடக்கியென்று சொன்னது ஆனால் அறிவினால் ஆத்மாவிளங்குகையால் அறிவென்றும் ஆத்மாவென்று மிரண்டாகிறதே அறிந்தபின்பு ஆத்மா வொன்றாகவே நிற்கையால் அப்போது அறிவுகாணுமே காணுகிறதே யடங்குமென்று சொல்லலாகாதோ வென்னி லறிவடங்குமாயில் ஆத்மாவை யொன்றெனக் காண்பதெது கொண்டு ஆகையால் அறிவே சொரூபமான ஆத்மாவைச் சைதன்னியனென்று சொல்லுவதல்லாமல் அசேதனமென்று சொல்லக்கூடாது ஆதலால் அறிவுபிறந்த சித்தத்தை அடக்கியென்றுரை யெழுதினது.— ஆங்கு-அசை. (௰௪)

(கொச்சகக்கலிப்பா)

இப்பரிசுபயில்கின்ற யோகிகாலில் விடத்து...... *
மெய்ப்பரிசுநடுங்காத விளக்குப்போல் விளங்குமா.... *
லெப்பொழுதங்கவனுணர்வு வுண்மையிலேசென்றிசையு
மப்பொழுதுபரமா னந்தத்தினையடையுமால்..... *

(இ-ள்.) இந்தப்படி பழகுகிற யோகியினுடைய சரீரசுபாவமானது காற்றில்லா விடத்து அசையாதவிளக்கைப்போல் விளங்குமாகையால் அவ்விடத்தி லவனுடைய ஞானம் அந்த ஆத்மாவிலெப்போது கூடிப்பொருந்துமோ அப்போது அந்தஞானமானது பரமானந்தத்தைப் அடையமல்லாமல் விஷயானந்தத்தை யடையாதென்றவாறு. ஸ்ரீ யோகி மெய்ப்பரிசு காலில் விடத்தி தெனவும் உண்மையிலெப்பொழுதெனமாறுக எப்பொழுதப்பொழு தென்றநின்றுலே யிச்சையுமொன்றுகாரம் உருவிக்களகாரத்தேதற்றுகாரம் ஆல் அசை ஆனந்தமாவது-சுகம்-தேசவிசையையாலே தேகியை யுண்மையென்றது.— (௰௫)

யாதொன்றிந்தப் புலனறியா வளவினின்பமாயிருக்கும்..... *
யாதொன்றினைச்சென் றடைந்தார்கள் பின்னையதனினிரண்டா
கா-ரியாதொன் றினைப்பெற்றவரிதனின் மிக்க தொப்பதுன்
டென்று - ரியாதொன்றறிந்த வழியிற்கேயறிவாய் நிற்கு மறி
னின்றார்.......................................................... *

(இ-ள்.) யாதொன்று இந்தவிஷயங்களறியாத அனேகான புத்தியிலே சுகமாயிருக்குமோ யாதொன்றைச்சென்று கூடினவர்கள்பி

போக்கென்றது அதை விஷயபோகங்க ளிருக்கிறதிச்கை இந்திரியங்கள் நாடிப்போகிற போக்கை யென்றுஞ் சொல்லலாம் ஒன்றை யொன்று கெண்டதாகையால் ஆத்மா மெய்யறி வென்றார் ஆத்மாவை மெய்யாதமாவென்ப தேதென்னில் நித்தியமா யிருக்கையால் ஆனால் பொய்யாதமாவு முண்டோவென்னில் அஞ்ஞானிகளுக்குத் தேகமிந்திரியங்கரண முதலானவைகள் ஆத்மாவாக மயக் குகையாலும் அவைகள் அநாதமாவாய் அழிகையாலும் பொய்யாத்மாவுமுண்டென்பது ஆகலாதென்ற பாடத்தையிகழ தென்று பாடமோதில் வெறுக்காதென் றுணாசொல்வதுபகைத்தாலும் வெறுத்தாலும் மனசுவேறுபடுந் தன்வசப்பட் டடங்காது. (௰அ)

வாங்கியைம்பொறி நின்று மனத்தினை…………… ……*
நீங்கிடாவகை நெஞ்சு ளிருத்தியே…… ……… … ……… *
நீங்கியாவையுஞ் சிந்தைசெய் யாமையாற்………… … *
பாங்கியாதது வேபயில் வாயரோ…………………… ……*

(இ-ள்.) பஞ்சேந்திரியங்களில் நின்றும் மனதையிப்பால்வாங்கி ஆத்மாவை விடாதபடி நின்று ஆத்மாவில் மனதை யிருத்தி மற்றப் பொல்லாங் கெல்லாவற்றையும், நிலையாதது சுபாவமாகையால் வேறு சுபாவப்படாமல் அதுவேபழகுவா யருச்சுனு வென்றவாறு. ※ மனத்தினை வாங்கியெனமாறுக. அரோ-அசை. அதுவேயென்றதனால் வேறுபாவனைபண்ணமல் அதுவேபாவிப்பாயென்ற தேற்றேகாரம் -போகமாயவென்றகவியும் - வாங்கியைம் பொறியென்றகவியும்- ஒருதொடர். (௰௯)

தேறுநெஞ்சினனாய்த் தன்செயலல்லால்………*
வேறுகண்டறியாமெய் யறிவினு …… … … …. *
லூறியிந்தவுடம்புடன் வீடுபெற் … ………… *
றேறுகின்றவனேயின்ப மெய்துவான் … ……… *

(இ-ள்.) இப்படியெந்தெந்த விசாரத்தினாலே தெளியவேணுமோ அந்தந்தவிதத்தினாலே தெளியப்பட்ட மனதுடையவனாய் ஆத்மாவினுடைய செயலல்லாமல் வேறுசெயல் கண்டறியாத சதரூய ஞானத்தினாலே ஆனந்தவெள்ளமூறி யிந்தவுடம்புடனே மோக்ஷத்தைப்பெற்று ஏறுகிறவனே சுகத்தைத அடைவானென்றவாறு. ※
(௰௫)

உளறுதலாவது- முன்னே ஆற்றூரலாசவூறி வரவரப்பெருகிநிறைந்துதேங்கி வெள்ளமேற்கொண்டு முழுதுவதற்குஆரம்பம்- உளறுவது-உடம்புடனேமோக்ஷம்- பெறுதலாவது-சீவன்முத்தி-உடம்புவிட்டமோக்ஷமாவது-விதேகமுத்தி- விதேகமுத்தியென்பதாவது-சிரேஷ்ட்டம் பெறுதல். (உ௰)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இழிபாவிந்தயோகத்தை யென்றுந்தலைநின்றவனென்று.....*
மழிபாயின்பத்தினையின்பத் தாலேயடையுமதுநிற்க..... ....*
ஒழியாமெல்லாவுயிருந்தன் னுள்ளேகாணுமவற்றுள்ளே. ...*
கழியாதெங்குந்தானின்றபரிசுந்தெரியக்காணுமால்........ .*

(இ-ள்.) இழிவில்லாத இந்தயோகத்தை யென்றைக்கு முதன்மையாகநின்றவன் என்றைக்குமழியாத சுக சொரூபமான பிரமத்தையானந்தத்தாலேயடைவன். அதுநிற்கஒழிவில்லாத சகலஆத்மாவையும் தன்னுக்குள்ளே காண்பான் சகலஆத்மாவுக்குள்ளும்நீங்காமலெங்கும் பரிபூரணமாகத்தான் நின்றபடியுந் தெரியக்காண்பனென்றவாறு. ※ தலைநிற்றலாவது - யோகமேசிரேஷ்ட்டமாக மற்றெல்லாமிழிவாக நிற்றலென்பது- இழியாதெனவே வுயர்ந்தயோகமென்பதுசகல ஆத்மாவினுக்குள்ளே தானுந்தனக்குள்ளே சகலஆத்மாவுங்கண்டு எங்கும்பரிபூரணமாகச் சமமாகவிருப்பனென்பது.(உக)

யாவனொருவனென்னையெல்லா வுயிர்களிடையுமென்னிடையே......*
மேவவெல்லாவுயிர்களையும் வேறுகாமைமெய்காண்பான்.........*
தேவர்பகைமுன்செகுத்தோனே யெவன்யாதேனுஞ்செய்திடினு..*
மாவவனுகின்றேனு னதுநீயேதுமையுறேல்.........................*

(இ-ள்.) எவனாகிலுமொருவன் என்னையெல்லா வுயிர்களிடத்திலும்-என்னிடத்திலெல்லாவுயிர்களையுங் கூடாதபடி காணாமல்கூடும்படிமெய்யாகக் காண்பவன் எவனோ அவனேதானானுஞ் செய்தாலுமந்தச்செயலாவதாகச் செய்தவனே தானாகிறவன் அதைமுன்னே தேவர்களுடைய பகையானஅசுரராட்சதர்களைக்கொன்ற அர்ச்சுனநீயொன்றுஞ் சந்தேகப்படாதே யென்றவாறு. ※ வேறுகாமையாவது-சகலவுயிர்களும் வெவ்வேறு என்னை வேறுகக்காணாமல் எல்லாவுயிர் களிலும் என்னையும் - என்னி லெல்லாவுயிர்களையுங்கூட மெய்

யாகக்காண்கிறவனெவனோ அவனென்னசெய்தாலும்; நான்செய்த தேஅதெப்படியென்னில். அவனாகிறவன் நானாகையால் அவன் செ செய்ததும் நான்செய்ததே அதை நீ சற்றாகிலுஞ் சந்தேகப் படா தேயென்பது தேவர்பகைமுன் செகுத்தோமே யென்றதனாலிப் போதுன்பகையான மனிதர்களைக் கொல்பவனே யென்ற தருத்தா பத்திவருவிக்க முன்செய்தவனேயென்றதனாற்பின்செய்பவனேயெ ன்றது குறிப்பு. (உஉ)

இடரானதுதானின்பந்தா னியாரோனுக்குமாயிடுக் ........*
படராநின்றவதுதானு முறுவான்யோகியெனப் படுவான்........*
சுடராநின்றவடிவேலோய் தெளிநீயென் றுதுழாயலங்க ... ........*
லடராநின்றநெடுமுடியோ னருளிச்செய்யவவனுரைப்பான்......*

(இ-ள்,) யாருக்கானாலுந் துக்கந்தான் சுகந்தான்வந்தாலவ்-வராநின்றஅந்த துக்க சுகங்களைத் தானு மடைகிறவன் யோகியென் றுலகஞ்சொல்லப்படுவன. பிரகாசித்து நிற்கிற நீண்டவேலாயுதத்தை யுடைய அருச்சுனா இந்தப்படிதெளியென் று திருத்துழாய் மாலைய சைந்துநின்ற நீண்டகிரீடந்தரித்த ஸ்ரீகிருஷ்ணசுவாமி யருளிச்செய் யக்கேட்டு அருச்சுனன் சொல்லுவா னென்றவாறு. ✿ சகலஆத்மா க்களிலுந் தானுந் தன்னிற் சகலாத்மாவுமாய் சமமா யெங்கு நிறைந் துநின்றயோகிக்கு எந்தஆத்மாவுக்குத் துக்கசுகம் வந்தாலும் தானு ம்அதைச் சமமாகஅடைகிறவனே யோகியென் றுலகஞ்சொல்லுமா கையால் இந்தப்படி சீக்கிரமாக அனுசந்தானம்பண்ணியுன்னுடை யகலக்கத்தைத் தெளியென்றுசொன்னது. (உரு)

எல்லாவுயிருமொன்றாகப் பார்ப்பதியோகமெனவுரைத்தாய்...!...*
மல்லார்தோளாயிதற்குநிலை காணேன்மனமாகின்றவிது.... .... .....*
நில்லாவியற்கைத்தாயபுலன் கலக்குமினை நிலைநிறுத்த............*
ஒல்லாதெனவுங்காற்றடக்கற் கொக்குமெனவுமுணர்கின்றேன்.... *

(இ-ள்.) மற்போர்செய்யுந் தோளையுடைய சுவாமி யெல்லாவு யிரையுமொன்றாகப்பார்ப்பதுயோகமென்றுசொன்னீர் இதற்குமன சுசஞ்சல சுபாவமானதினாலே கல்லையொத்தநிலைகாணேன் இப்படிக் கொத்தமனசாகிறஇது அசையாதநிலையில் நில்லாதச்சஞ்சல சுபாவத் தையுடையதாய் விஷயத்தைக்கலக்கும் இதையசையாத நிலைநிறு

த்தக்கூடாதென்றும் இதைநிறுத்துகிறேமென்கிற காற்றைப்பிடித்தடக்கிறதற்கு ஒப்பாகுமென்றும் அறிகிறேனென்றவாறு. ✿காற்றுவமானம் காற்றலைவதேசுபாவமாகையால் அதைப் பிடித்து அலையாமலடக்கிறதற்குக் கூடாதுபோல அலைகிறமனதை அலையாமலடக்குவது கூடாதென்பது. (உச)

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

இவ்வகைவிசையன்கூற மாயவனியம்பல்செய்வா.... *
ஐவகைப்புலனுநெஞ்சு மடக்குகையரிதானாலும்.......*
மெய்வகையுரைத்தயோக முஞற்றலிதானுமோவா...... *
வைவகைப்புலன்செயின்ப மனத்தையும்வெறுத்தலானும் *

(இ-ள்.) என்றிப்படி யருச்சுனன்சொல்ல ஸ்ரீகிருஷ்ண சுவாமி சொல்லுவார் அஞ்சுவிதமான விஷயங்களையும் மனதையடக்குதலரிதானாலும் பிழைக்கும்படிசொன்ன யோகாப்பியாசத்தினாலும் விடாதபஞ்சவிஷயங்கள் செய்கிறவெல்லாச்சுகத்தையும்வெறுக்கிறவயிராக்கியத்தினாலுமென்றவாறு. (உரு)

(கலிவிருத்தம்.)

வெய்யநெஞ்சமடங்கிடுவேறிதற் ..................... *
கையமில்லையென்றேயறியாதலாற் ........................*
பையவேகரணம்பதினொன்கையுங்................ *
கைகடந்தவர்யோகமுங்கைகண்டார் ............*

(இ-ள்) இந்த அப்பியாசத்தினாலும்,வயிராக்கியத்தினாலும்,கொடுமையுள்ள மனசுஅலையாமலடங்கும்இதற்கு அடங்காதென்கிறசந்தேகமில்லை இதுநிச்சயமென்றேயறி அருச்சுனா ஆகையால்சீக்கிரப்படாமையால் மெள்ளமெள்ள பதினொருகரணத்தையடங் கைகடந்தவர்களே-யோகமும்-ஞானமுங்கைகண்டவர்களென்றவாறு. ✿ அடங்குதலுக்குவேறுவது- அடங்காதது பதினொரு கரணமாவது ஞானேந்திரியமஞ்சும், கன்மேந்திரியமஞ்சும், அந்தக்கரணம் நாலுயகூடியதுபதினொருகரணம். (உசா)

என்றகூறவிசையனியம்புவா ........................ *
னின்றியோகத்திலேநெறிநாளெலாம் .. ........ *
பொன்றுங்காலத்தயாந்துயிர்போயினாற்....... *
சென்றநற்கதியேயன்றிச்சேருமோ ...............*

(இ-ள்.) இப்படியென்று ஸ்ரீகிருஷ்ண சுவாமிசொல்ல அருச்சுனன்சொல்லுவான் யோகத்திலே அனேகநாளெல்லாம் நின்றுசாகிறகாலத்தில் மறந்து சென்போனால் நல்ல மோட்சத்திலே போய்ச்சேருமோ அல்லாமல்பொல்லாத நரகத்திலே போய்ச் சேருமோவென்றவாறு. (உஎ)

யோகமேவவினைகளொருவினன் ........................ *
மோகமேவலின்யோகமுடிந்தில ........................ *
னேகமோவிருபாலும்விட்டானிற்ற... ... .... *
மேகமேயெனவீழ்ந்துகழியுமோ..... ..... .... ......*

(இ-ள்.) யோகத்தையடைய வேண்டிக்கருமங்களை விட்டவன் மோகத்தினை தேவலான் இச்சையினாலே மனசுசஞ்சலப்பட்டுயோகமுடியவில்லாதவனுக்குக் கெதி மோட்சமோ நரகமோ மூடனும் ஞானியுமல்லாமல் இந்தஇரண்டும்விட உபையபிரஷ்டனாயொன்றிலுங் கூடாதவன் ஆகாசகமன மற்ற மேகத்தைப்போலக் கீழேவிழுந்தழிவானோ மேலெழும்பியிருப்பானென்றவாறு. (உஅ)

(கலிவிருத்தம்.)

மையலிதுவென் மனத்தினின் மற்றிந்த... ..................... *
வையமறுக்கவல் லாரில்லை நீயன்றி ..... ..................... .... *
யுய்யவிதனை யுரையென்ன யோகத்தின்... ..................... *
மெய்யனிதனை விரிய வுரைக்கின்றான் ........................ *

(இ-ள்.)என்மனதிலிதுசந்தேகம்இந்தச்சந்தேகத்தைத்தீர்க்கச் சர்வக்கியனான நீயல்லாமல் வேறுவல்லவர்களில்லை நான் பிழைக்க இந்தச்சந்தேகத்தை விளங்கச்சொல்லுமென்று சொல்லஇந்த யோகத்தினில் சத்தியனான ஸ்ரீகிருஷ்ணசுவாமி விளங்கச் சொல்லுவானென்றவாறு. ※ மற்று—அசை. (உகூ)

பொய்மையடையாப் புலனுடைமாந்தர்க ................ *
ளிம்மையிடையு மறுமை யுலகத்தும் ... .... ... .... ...*
வெம்மையடைகிலா மெய்ம்மை விடாவொன்னுஞ்......... *
செம்மைதெளிய வின்ஞ்செப் பிடுவன்கேள் ......... ...*

(இ-ள்.) மாயையடையாத அறிவுடையயோகசஞ்சலமானமனிதர் களிந்த ஜென்மத்தினிடத்தி லிச்சையானதை யடையார் மறுஜென்

மமான மரணநிலையிலே கொடுமையான நரகத்தையடையார் சத்தியமானமோக்ஷத்தை விடாரென்று சொல்லப்பட்ட செவ்வையானது தெளிய இன்னஞ்சொல்லுவேன்கேள் அருச்சுனவென்றவாறு. ஃ செம்மையாவது இம்மைக்கு விருப்பமும் மறுமைக்கு மரணமுமாகவிரண்டு பொருள்கொண்டது. (௬௰)

போகமுடியா திடையே யிறந்தவனி ........ ........ *
யாகவினைபலசெய் தாங்கிவைந் திம்ஞ் ........ ........ *
சோகமிறுடெய்தித் துன்பம் தொடராத ........ ........ *
போகநுகர்ந்துபல காலங்கள் போயபின் ........ ........ *

(இ-ள்.) யோகமுடியாத நடுவிலே போகத்திலிச்சித்து யாககர்மங்கள்பலவாகச்செய்துசெத்தவன் அந்தப்போகம்பொருந்தி யிருக்கப்பட்டவெலியில்லாதலோகத்தையடைந்து துக்கந்தொடராதபோகத்தையனுபவித்துவெகுகாலங்கள்போனபிறகுஎன்றவாறு. ஃயோகமுடியாதிடையே யாகவினைபல செய்திறந்தானுங்கெளமாறுக (௬௧)

சிறந்தவரசா திருக்குலத் தாத ........ ........ *
லறந்தருமியோகி கடங்குலத் தாதல் ........ ........ *
பிறந்துபெறுவ தெலாம்பெற்றும் பின்னு ........ ........ *
மறந்தவியோக மகிழ்வுடனே யதுமால் ........ ........ *

(இ-ள்.) சிறந்தராசாக்களுடைய அழகியகுலத்திலாகுகல்தருமத்தைத்தரப்பட்ட யோகிகளின் குலத்திலாகுதல பிறந்து பெறவேண்டிய யோகமெல்லாம் பெற்றுப்பின்னையும் முன்செனமத்திலே மறந்தயோகத்தைப் பின்செனமத்திலே மகிழ்ச்சியுடனே யடைவனென்றவாறு. ஃ யோகமுடியாதென்றகவியுஞ் சிறந்தவரசவென்றகவியுமொருதொடர்.— (௬௨)

கொண்டுபயிலுங் குணமில னாயினு ........ ........ *
மூண்டு தெளிவென் றுணர்ந்த வியோகந்தான் ........ *
பண்டுபயின்ற பயிற்சியன் னோர்களைத் ........ ........ *
தண்டுதலின்றி யூன்றுனேதலைப்படும் ........ ........ *

(இ-ள்.) யத்தினம் பண்ணிக்கொண்டு அப்பியாசம்பண்ணப்பட்ட குணமில்லாதவனானாலுந்தெளிவுண்டென்றறிந்த யோகமானது பூ

வம் அப்பியாசம்பண்ணின அப்பியாசிகளை நீங்குதலில்லாமல்அவர்கள் முன்னேதானே வந்து தலைப்படுமென்றவாறு. ※ வேறொரு பத்தினத்திலும் வேறொருவராலும் வரவேணுமென்கிற பிரயாசனமில்லாமல் எளிதாகத்தானே வந்து முன்னிற்குமென்றது. (கக)

அனையவியோகத்தை யாற்றுவனென்று ...... *
நினையுமவனுநெறிபிறழாமே ...... *
வினைகள்பலசெய்து வேழ்வி முடித்தாற் ...... *
கனையுங்கதிர்மேற் கதியை யவன்பெறும் ...... *

(இ-ள்.) அப்படிக்கொத்தயோகத்தைச் செய்வனென்று நினைக்கப்பட்டவனுஞ் சாஸ்திர மார்க்கந் தப்பாமற் கருமங்களைபலவாகச் செய்து யாகத்தை முடித்தாற்சத்திக்கப்பட்ட சூரியனுக்கு மேலானகதியை யவன்பெறுவனென்றவாறு. ※ நினையுமவனுமென்றவும்மைசிறப்பும்மை அதாவது நினைக்கிறவனுக்கு மேற்கதி பெற்றார். செய்கிறவனுக்குஞ் செய்து நடுவிலே விட்டவனுக்கும் பெறுவதுசந்தேகமில்லையென்ற சிறப்பும்மைகளையுங் கதிராவது நித்திரையாயடங்கின சீவன்களை யெழுப்பிப்பேசுவிக்கிற சத்தத்தைக் கொடுக்கையாலே சத்திக்கப்பட்ட சூரியனென்றது. (கச)

நீடுமதனிலே நின்றில னாயினு ...... *
மோடுமவகையின் விடாதே யுழன்றவன் ...... *
பாடுப்பவங்கள் பலகடந் தாயினும் ...... *
வீடும்பெறு மின்னம் வேறுஞ்சில கேளாய் ...... *

(இ-ள்.) பெரிய அந்தயோகத்தி லசையாதநிலையாக நிற்கவில்லாதவனானலு மிச்சைகளினாலே சஞ்சலப்பட்டோடப்பட்ட விதத்தினாலும் விடாமலந்தயோகத்திலே யுழன்றவன் சொல்லப்பட்டபிறவிகளனேகங்கடந்தாலு மந்தந்தப்பிறவி முடிவிலே மேலோகங்களைப் பெற்று முடிவுபிறப்பிலே மோக்ஷத்தையும் பெறுவன இன்னம்வேறுவிதமுஞ் சில சொல்லுகிறேன் கேட்பா யென்றவாறு. ※ ஆயினுமென்ற வும்மையுஞ் சிறப்பும்மை. (கரு)

எல்லாத்தவமு மியற்றிநின் றோனினும் ...... *
மெல்லாக்கலைகளுங் கற்றுணர்ந்தோனினுஞ் ...... *
செல்லாக்கரும மெல்லாஞ் செய்தவனினு ...... *
நல்லானியோகியே நீயவை நண்ணுவாய் ...... *

(இ-ள்.) எல்லாத்தவங்களுஞ்செய்து நின்றவனிலும் வேதமுதலா னநூல்களுங்கற்றுத் தெளிந்தவனிலும் நல்லவனயோகியேயலலாம ல்வேறொருவனல்ல ஆகையால் நீயு மந்த யோகத்தைச் செய்வாமெ ன்றவாறு.— (௩௪)

(கொச்சகக்கலிப்பா.)

இருவகையவினையறுக்கும் யோகியெல்லார்களினு- *
மருவிரியமனத்தினையு மன்னைப்புமென் பால்வைக்கு- *
மொருவனுமேயானு வக்கப் படுகின்றானெனவுணா *
த்தா - னுருவெனவு முருவெனமுன் பாராலு மறி வரி
யோன்...... ......................................................... *

(இ-ள்.) நல்வினை தீவினை யென் றிரண்டுவிதமான கருமங்களை ...க்கப்பட்ட யோகிகளெல்லார்களிலுங்கூட அரிதானமன தையும் அன்பையுமென்னிடத்தில் வைக்கப்பட்ட ஒருயோகியுமே நான் ச... தோஷிப் பட்டத்தக்கவனல்லாமல் மனதையு மன் பையும் என் னிட த்தில் வைக்காதமற்றயோகிகள் நான்சந்தோஷிப்பதற் குரியரல்ல வென் றுசொன்னார் அருவமென்றும் அல்லவுருவ மென்று முன்பு ...ள்த்தை ஆராலுமறிய அரிதான ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்றவாறு. (௩௫)

ஆறுவாது-அப்பியாசயோக - அத்தியாயம்-முற்றும்-
ஆ௳ அத்தியாயம் ௬ - இ கூடிய செய்யுள். (உ௱௬-)



ஏழாவது.

# மாயாரூப - அத்தியாயம்.



(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

உய்யவன்பிறொடு மென்னையேயடைய யோகமேபயிலும்யோ கித்தா-னையமின் றியென்னை யேயடைந்திடுமதையநீயுமறிவாயெ னு-வையமுண்டுமெறை நீர்மையுண்டிடையர் மாதருண்டிடும

லர்ந்திடுஞ் - செய்யதன்பவள வாய்திறந்துதிரு மாது கேள்வ
னிவைசெப்புவான். ........................................ *

(இ-ள்.) ஸ்ரீமகா லட்சுமிக்கு நாயகனான ஸ்ரீகிருஷ்ணசுவாமிமுன் பூமியையுண்டும் வேசகுணத்தையுண்டு இப்போதுஇடையருடைய பெண்களுண்ணத்தக்கதாக மலரப்பட்ட சிவந்த குளிர்ந்த பவளத்தையொப்பான திருவாயைத்திறந்து ஐயா பிழைக்கவேண்டியபத்தியோடும் மெய்ஞ்ஞானத்தோடும் என்னையே சேரத்தக்கதாகயோகத்தைச்செய்யப்பட்ட யோகிதான சந்தேகமில்லாமல் வேறொருவனையடையாமல் என்னையடைவான் அதைநான் உனக்குச்சொல்ல நீயுமறிவாயெனவே மேலறியவேண்டுவதில்லையென்றது குறிப்பு.

மாயுமாயைமறையாதநெஞ்சினிடை மற்றெனுண்மையினை
வாய்மையா - லேயுமாறறிவதிந்துளோர்களறி யாததொன்று
மிலையெனினு - மாயுமானிடரனேகர் பாலொருவனென்னை
யாயமனம்வைத்துளா - ருமானுடரனேகர்பாலொருவனே
யறிந்துமுடிவர்னையா. ........................................ *

(இ-ள்.) அழியப்பட்ட மாயையால் மறையாதமனதினிடத்தில் மற்றஎன்னுடைய உண்மையைஞானத்திலேயிசையும்படி ஞானத்திலறிந்திருக்கிறபேர்களறியாத தொன்றுமில்லை யென்றாலும்நாசமாகப்பட்ட மனிதரனேகரிடத்தி லொருவனென்னை ஆராயமனம் வைத்திருக்கிறவன் இப்படியாராயப்பட்டமனிதரனேகரிடத்திலொருவனே என்னையறிந்துகவலையொழிவானல்லாமல் எல்லாரும் ஆராயவுமறியமாட்டார்களையாவென்றவாறு. ❋ ஆராய்தலாவது ஞானத்தால்விசாரித்தல். (௨)

மண்ணுநீருமெரிதீயும்வாய்வுமவ வானினோடு மனம்புத்
தியு; மொண்ணு நீர்மைகளின் யானெனும்பதமுமென்
றவெட்டுமிவை யன்றியே, பண்ணு நீர்மைகளின் மேல
தாயுலகில் யாவையுங்கொடு பரித்துடற், கண்ணு நீடுயிரு
மாகியென்னுடைய மாயைநிற்பதுகை வேலினோய் *

(இ-ள்.) பிருதிவியும்-அப்பும்-எரிகிறதேய்வும்-வாய்வும்- அந்தஆகாசமும்- அதனுடனேமனசும் புத்தியுமறிக்கப்பட்டகுணங்களிலே தானென்றுசொல்லப்பட்ட ஆங்காரமும்= இந்தவெட்டும் உண்டா

கிறகாரணமான பிரகிருதிஇது அபராப்பிரகிருதி இல்லாமற் பண்ணப்பட்ட குணங்களிலே மேலானதாய்ச் சகலசெகத்தையுந் தாங்கிக்கொண்டுசுமந்து அபராப்பிரகிருதியான உடலிடமுந் தானதிலிருக்கிறஉயிரும் போலவாகி-என்னுடைய பரப்பிரகிருதியான மாயை நிற்பது கையில்வேலையுடைய அருச்சுனனேவென்றவாறு. (௩)

கண்ணினிற்றெரிப ஞற்றுணர்ந்தவிவ் விரண்டி னாலும்
வருகாரியம், பண்ணினிற்பன நடப்ப வென்றபொருள்
யாவுமற்றிவ்விரு பான்மையே, நண்ணிநிற்பதுலகாதலா
னுலகி னுசவுற்பவமு தானல, தெண்ணின்மற்றறிவதில்
லையெட்பெருகு மென்னிலன்னியம தல்லவால......*

(இ-ள்.) கண்ணிலே தெரிபப்பட்டறிந்த இந்தப்பராபரப்பிரகிருதி இரண்டினாலும், பிறக்கப்பட்ட காரியத்தைப் பண்ணி நிற்பன நடப்பனவென்றபொருள்கள் சகலமுமுன்சொன்ன இந்த இரண்டு பிரகிருதிகளினுடைய சுபாவமேபெற்று நிற்கிறது உலகம்ஆகலால் உலகத்திலே செனனமரணமும் இவைகளைச் செய்கிறகாரணமும் நானேயென்னை யல்லாமல் வேறேயுண்டோ வென்று விசாரிக்கில் வேறில்லாதிருமேலு மென்னைநீங்கி இல்லை ஆகைபாற் பிரகிருதியுமதனாலுண்டாகிறசெகத்துமுதலானதும் எந்தப்பொருளுமென்னிலன்னியமல்லாமல் எல்லாம் நானேயென்றவாறு. அபராப்பிரகிருதியாவது-சடமானவுடம்பும்- பராபிரகிருதியாவது - அசேடமான சீவன் இல்லையென்றதனாலே பிரமமே நான் இதற்கு மேலானது நிச்சயமாகவில்லையென்பது. (௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வேதமாகிநிகழ் யானலாதுலகி லென்னில்வேறெனவிளங்
கிடும், பூதமானவை பொறுக்க வேறுபொறையாளரில்
லையெனு போலெனி, லோதுமாமணி யனேகமுடுருவு
கோவைநூலினுரு பான்மைபோர்; பேதமாயபொரு
டோறுநான்மருவி நின்றவாறுதனி பேசுவாம்......*

(இ-ள்.) சொல்லும் பொருளுமொன்றுபோலவும்-பொருள்சொல்லுமன்ற சொல்வேறுபொருள்வேறான விரண்டு போலவும் இப்படி இரண்டாகப் பிரிக்கக்கூடாதானொன்றாகவும் இப்படிஇருக்கிறவேதத்தையொப்பாகி உலகமென்றும் நாமென்றுமிரண்டாய் உற்றறி

யும்போதொன்றாய் விளங்கப்பட்ட நானல்லாமல் என்னில் வேறென்று சொல்லாத தக்கதாக உலகத்தில் விளங்கப்பட்ட பஞ்சபூதங்களையுந் தாங்க வேறே தாங்குவாரில்லை நானே தாங்குகிறவன் அதைப்படிப்போலவென்னில்சொல்லப்பட்ட அழகுள்ள ரத்தினங்களனேகம் ஊடுருவும்படி கோக்கைப்பட்ட நூலிலிருக்கிறபடி போலநானேசெகத்துக்கு ஆதாரம் இப்படி அளவற்றபேதமாகியபதார்த்தங்கள்தோறும் நான் கலந்து நின்றபடியைய மிகுதியாகச்சொல்லுவேனென்றவாறு (௬)

(கொச்சகக்கலிப்பா.)

திரியுமிருசுடரினிடை திகழொளிநான் திருமறையி.... *
னரியமுதலெழுத்துநா னாடவர்பாலாண்மையுநான்.. *
விரிபுனலிற்சுவையுநான் மேதினியில்வாசமுநா ...... *
னெரியில்வருவெம்மையுநா னாகாயத்தெழு மொலிநான்.

(இ-ள்.) ஆகாசத்திலே சஞ்சரிக்கப்பட்ட சூரியசந்திராளிடத்தில் விளங்கப்பட்ட பிரகாசம்நான் ஓத அரிய அழகியவேதத்தில்-முதலெழுத்தான பிரணவம்நான் புருஷர்களிடத்தில் ஆண்மையும் நான் விரிவானசெலத்தி லருசியும் நான் பிருதிவியிற் கெந்தமும் நான் அக்கினியில்வரப்பட்டஊஷ்ணமும்நான ஆகாசத்திலெழும்புகிறசத்தமுநான் என்றவாறு. (௬)

ஆன்றவறிவுடையோர்பா லறிவுநானடங்கினர்பால்.... *
வான்றவநான்வளநன்மை பூண்டவர்பால்வான்புகழ்நான்
தோன்றுமிகுதிறலோர்பாற் காமமுறுத்தோள்வலிநா *
னூன்றுபொருளனைத்தினுக்குமுயிராகியுள்ளேனான் *

(இ-ள்.) அமைந்த அறிவுடையோரிடத்தில் அறிவுநான் - துறவிகளிடத்திற் பெருமைபொருந்திய தவசுநான் - வளமையானநன்மையைத் தரித்தவர்களிடத்தில்வளமையுள்ள கீர்த்திநான்மிகுந்துகாணப்பட்ட பெலமுள் ளவர்களிடத்தி லசையப்படா புசபெலம் நான் இப்படிப்பிரபஞ்சத்தில் நிறுத்தப்பட்டசகலபதார்த்தங்களுக்கும்சீவனாயிருக்கின்றவன் நானென்றவாறு. (எ)

மூன்றுகுணவகையாகி முடிகின்றபொருண்முழுதுந் *
தோன்றுவதுமென்னிடையே யனைத்தொடர்ந்தேதிற்

பதுவு, மானறவவற்றவற்றினிடை யான்றேன்றேனவற்
றிருக்குஞ், சான்றென நிற்குவனல்லா லவைசார்ந்து
வாழேனால் ........... ...... ....., ........... ....... ... ........ *

(இ-ள்.) மூன்றுகுணபேதமாகி யறியப்பட்டபதார்த்தங்களெல்லாம் உண்டாவதும் என்னிடத்திலே நிற்பதுவும் என்னைத்தொடர்ந்தே அல்லாமல் வேறிடத்துண்டாகவும் வேறொன்றினைத்தொடரவும் என்னையல்லாமல் வேறொன்றுமில்லாநிலையிலே கூடாது இப்படி என்னிடத்தி லுண்டாய் நிறைந்த அந்தந்தப் பதார்த்தங்களிடத்தில் நான்பிறவேன் அவைகளுக்குச சாட்சியென்று நிற்பேனல்லாமல் அவைகள்என்னைத்தொடர்ந்து வாழ்வது போலநான் அவைகளைக்கூடியிரேனென்றவாறு. ※ சகலமும்-என்னிடத்திலுண்டாகி என்னைக்கூடியிருக்கும் நான் அவைகளிற்பிறவேன் அவைகளிற்கூடேன் எல்லாவற்றுக்கும்நானே சாட்சியாய் நிற்பேனென்றவாறு. (அ)

மைக்குணங்களெனுமவற்றின் மயமாகிமெமத்துவமா *
யிக்குணங்கண்மூன்று மயக்கப்பட்டறிவிழந்து... *
தொக்குணங்குன்றவுயிரிவையெல்லாஞ்சுடர்வேலோ *
யக்குணங்கள்கடந்தவென்னை யறியுமோவறியாவால் ...... *

(இ-ள்.) முக்குணங்களென்று சொல்லப்பட்ட அந்த அஞ்ஞானகுணமயமாய் அஞ்ஞானமனசுடையதுமாகி இந்ததாமசராசத-சாத்விகமென்றகுணங்கள்-மூன்றிலு-மயக்கப்பட்டு-அறிவுகெட்டுக்கூடி சரீரமறந்து கிடக்கிறசீவன் இந்தச் சீவனெல்லாம்-அந்தக்குணங்களைக்கடந்த என்னையறியுமோ பிரகாசமுள்ள வேலையுடைய அருச்சுனா அறியா வென்றவாறு. ※ குணங் கடந் தவனு வது. குணாதீதன் — (௯)

இவ்வகையகுணமூன்றி னியற்கைத்தாமாராலுஞ் .....*
செய்வகையதல்லாவென் மாயைப்பிணிற்றிகைப்பொழிந்திங்
குய்வகையதறிவெதவர்க்கு மென்னையேயெப்பொழுது *
மெய்வகையோடடைகின்ற மனமிலரேல்வேல்வேந்தே*

(இ-ள்.) வேலையுடையராசாவே என்னைத்தானே எந்தநாளும்மெய்யன்போடு சரணமடைகிற மனதில்லாதவர்களாகில் - இந்த விதமான முக்குணத்தினுடைய சுபாவமானதால் ஆராலுஞ்செய்ய

த்தக்கதல்லாத வென்மாயையினுடைய மயக்க மொழிந்து இப்படித்தப்பிப்பிழைக்கின்றவிதம் எவர்களுக்குமரிதென்றவாறு. என்னையடைந்தவர்கள் மாயையைக் கடப்பரென்ப தருத்தாபத்தி எப்பொழுதுமென்றதனால் ஒருநாள் வேறுசெய்யினும் யோகப் பிரஷ்டனாவனெனறவாறு. (ய)

ஊழாலேவருமந்த மாயையினாலேயுள்ளம் ............. *
பாழாகவுழிவங்கே பறியுண்டுநெறிநின்றோர்.......... *
வீழ தநிவினையே வினையாகவிளைகின்ற .............. *
கிழாரேரென்னையடையா ரடைவாருஞ்சிலருளர்கேள்...*

(இ-ள்.) பூருவ வினையாலே தொடர்ந்து வரப்பட்ட அந்த மாயையினாலே மனதுழுமடமாக அங்கேஞானமானது மாயையாலே பறியுண்டு அஞ்ஞானமார்க்கத்தில் நின்றபேர்கள் தொலையாதேபாபமேகர்ம்மமாகவினையப்பட்டஷேரனபேர்கள் என்னையடையார் என்னையடைகின்றபேருஞ் சிலருண்டு சொல்லுகிறேன்கேள்.எ-று.(யக)

(கலிவிருத்தம்.)

செல்ல விரும்பினர் செல்ல லடைந்தோ............. *
நல்லவிகழந்தென யன்புசெய் வோர்க............ *
ணல்லதறிந்தமெய்ஞ் ஞானியினால் வரும்......... *
வல்லதிதென்னை வணங்குத வத்தோர்............ *

(இ-ள்.) செல்ல இச்சித்தவர்கள் பிர்ம்மத்தைக் கூடுதலாக ஆத்மசொரூபமறியவேணுமென்று ஆரம்பித்தவர்கள்மாயையைவிட்டுப்பிரிந்து என்னை யன்புசெய்கிற பத்தர்கள் நல்லதானசொரூபத்தையறிந்தசத்தியஞானி யிந்தநாலுபேருந் தங்களாலேசெய்யவல்லமட்டும் என்னைவணங்கின தவத்தினொன்றவாறு. (யஉ)

இன்னவர் தங்களி லென்னொடுவேறு.................*
யுன்னலிலாமையின் ஞானி யுயர்ந்தோ............. *
னன்னவனல்ல னெனக்கவனுக்கே.............. *
தன்னலம்வைப்பது நானுநலத்தோய்............*

(இ-ள்.) இந்தநாலுபேர்களி லென்னோடு கூடின சித்த முண்டானவனாகித் தான்வேறு நான்வேறென்கிற நினைப்பு நில்லாததினாலே ஞானியானவன் அந்தஞானி யெனக்குநல்லவன் நானும் அவனுக்கே நல்

லெசுகத்தை வைப்பதல்லாமல் வேறுள்ளவர்களுக்கு வைப்பதில்லை ண்டாய் நன்மையுள்ள அருச்சுனா! வென்றவாறு. (௰௫)

ஓதருமஞானியென னுண்மையி னுள்ளே.... ....... *
ஏதகிலா மையினயானென லேயா .... ....... *
மாதவி முலைவ ரேசில வாய .... ...... *
காதலினுய பவங்களி லெய்தா.... ...... *

(இ-ள்.) சொல்ல அரிதான ஞானியானவன் என்னுடைய வுண்மையி னுள்ளே கூடினவனாதலாலவனே நாமென்றுசொல்லலாம் அல்லாமல் நான்வேறு அவன்வேறல்ல ஆதலாலவனே கொஞ்சமான ஆசையிலுண்டாகிய பிறவியைக்கடந்தெனென்றவாறு. (௰சு)

விரியவுணர்ந்த விழுப்பொரு ளெல்லா ........ *
முரியவெ னன்றியிலாத வொழுக்கந் ........ *
தெரியவறிந்தெனை யேசெறி கிற்பா........ *
னரியனவன்பெறு தற்கயில்வேலோய்...... *

(இ-ள்.) விஸ்தாரமாக அறிந்த சிறப்புள்ளபொருள்களெல்லா முரிமை யுள்ள வென்னையல்லாமலில்லாதசெய்தியைத்தெரிய அறிந்து எல்லாம் நானே யென்று என்னையே கூடுகிறவன் ஆகையாற்கூர்மையுள்ள வேலையுடைய அருச்சுனா! அப்படிக்கொத்தஞானி கிடைக்கிறதற்கு அரிதானவனென்றவாறு. ஓதருஞானியென்ற கவியும், விரியவுணர்ந்தவென்றகவியுமொருதொடர்.— அரியனென்றதனால் இப்படிக்கொத்த ஞானமெல்லாருக்கும்வாராது எவனுகிலுமொருவனுக்கு வருகிறதினாலே யவனைக்காண்கிறது அரிதென்றறிவது.

மற்றவருந் தம் மனங்களிலவைத்த........ *
பற்றதிலே பறியுண் டறிவெல்லா........ *
முற்றவை தத்திடு தெய்வவொழுக்கா...... *
னற்றவநின்றவை நண்ணுவர் நல்லோய்...... *

(இ-ள்.) இந்தஞானியையல்லாத மற்றவர்களுந் தங்களுடைய மனதுகளில்வைத்த இச்சையிலே ஞானமெல்லாம் பறிகொடுத்துத் தங்களுடையமனதுகளிலிச்சித்தபோகங்களைக்கொடுக்கிற அந்தந்தத்தேவதைகளுடையவொழுக்கத்தாலே நல்லதவசுகளில்நின்றுசெய்து அந்தயி

ச்சைகளை அந்தந்தத்தேவதைகளாலே அடைவார்கள் நல்லவனான அருச்சுனனென்றவாறு. ※ தெய்வவெழுக்கமாவது எந்தெந்தவிச்சைகளையெந்தெந்தத்தெய்வங்கொடுக்குமோ அந்தந்தத்தெய்வங்களுக்குப்பூசைவிதியெந்தெந்தப்படியோ அந்தந்தப் பூசாவிதிமுறைறியவது.— (௰௬)

யாவனொருத்தனி யாதொரு தெய்வ……※
மேவவர்ச்சனை யன்பின் விளைப்பா……※
னவல்சலிப்பறு மன்னவ னுக்கே……※
நாவலமுற்ற நளித்திடு வேனான்……※

(இ-ள்.) எவனாகிலுமொருத்தன் எதாகிலுமோர் தெய்வத்தையிச்சித்ததைக்கூடி வேண்டியபத்தியிலேயாராதனைபண்ணுவானோ அவனுக்கு ஆவதான சலிப் பற்று இச் சித்தது பெறுவனை அவனுக்குநாக்கினுடையபெலமும் அதிகமாகத்தோத்திரம் பண்ணப்பட்டபத்தியைநிறைவேற்றநான்கொடுப்பேனென்றவாறு.※பத்தியைநான்கொடுப்பேனென்றதனால் அந்தந்தத்தேவதைகள் தங்களாலேகொடுக்கத்தக்க பலனைக்கொடுப்பதல்லாமல் தங்கள்மேலே பத்தியுங்கொடுக்கமாட்டாது அந்தத்தெய்வங்கள்மேலே பத்தியுங்கொடுத்து அந்தத்தெய்வரூபமாகப் பலனையுங்கொடுக்கிறவன் நானேயென்றது.— (௰௭)

அளித்தனனன்பொடுமத்தெய்வநானுந்……※
களித்துவணங்கினர் காதல் வெல்லாம்……※
வெளிப்பட முற்ற விளைத்திடுவேனே……※
ஒளிப்பரி தாமுரு மஞ்சவுடன்றேய்……※

(இ-ள்.) ஒளிக்கஅரிதானே இடியானது பயபடச் சண்டைசெய்த அருச்சுனா கேள் இப்படிநான் கொடுத்ததான் அந்தப்பத்தியுடனும் இச்சையுனுங்கூட அந்தந்தத் தெய்வத்தைத்நினைந்தினமும் மனது சந்தோஷித்து வணங்கினவர்களினிச்சையை யெல்லாம் அந்தந்த தெய்வங்களுக்குள்ளே யிருந்து பெறும்படிகுறையாமல் வெளியாகவுண்டாக்குவேன் நானென்றவாறு.※இச்சைகளை வெளியாகவுண்டாக்குவனென்றதினாலே அந்தந்த தெய்வங்களுக் குள்ளே யிருந்துஉண்டாக்குவனென்ற தருத்தாபத்தி. (௰௮)

சிந்தையிலத்தெய்வமெய்த்தெய்வமென்றே ... *
முந்தவரிச்சனை யன்பின முடிக்கு ......... ... ...... *
மந்தமனத்தர் பெறும்பயன் வாறு ......... ... ...*
எந்தமுடைத்த தனிற்றமு மையா ........................ *

(இ-ள்.) ஐயாகேள் மனதிலே யிச்சைகளைக் கொடுக்கிற தெய்வத்தை யழியாத மெய்த்தெய்வமென்று நிச்சயித்து முதன்மை யான பூசையை பத்தியினாலே முடிக்கப்பட்ட அந்தமன துடையவர்கள் பெறப்பட்டபலனும்ஆயுசும்நாசத்தையடைகிறது அந்தத்தெய்வமும் நாசமுடையதென்றவாறு. ❀ இதனாலே யென்னைப் பூசிக்கிறவர்கள்பெறும் பலனும் ஆயுசும் நாளும் நாசமில்லாததென் றருத்தாபத்தி.— (௨கூ)

(கலிவிருத்தம்.)

தானந்தமிலியுவமை தலைநின்று தரவரிய...... ...... *
வானந்தவுருவமென வென்னையென் றமறிவதிலா . .... *
கோனந்த மகனரசா குலமைந்த னிவணிபலா.........*
வானந்த மிலியொருவ னிவனென்பாரறிவிலிகள் ..... .... *

(இ-ள்.) என்னை ஆதிதான் அந்தந்தான உவமைதான் இல்லாதவனிவன் அழியாமல்நின்று ஆராலுங்கொடுக்க அரிதான ஆனந்தசொரூபமென்று ஒன்றுமறிவதில்லாதவர்கள் இவன் இடையருக்குராசனான நந்த கோபன்மகன் ராசாவங்கிஷத்திற்பிறந்த ராச குமாரன் இந்தப்பூமியிலிருக்கிற மனிதவியற்கையானவன் நம்மிலொருவனென்பார் அறிவில்லாத மூடர்களென்றவாறு. ❀ தாவரியவாவது தன்னைத்தானே யாருக்காகிலுங் கொடுப்பதல்லாமல் வேறொருவ ராலே தன்னையாருக்குங் கொடுக்க அரிதானவனென்றது ஆனந்த மாவது பரமசுகம் அறி வுள்ளவர்கள் என்னை ஆதியும் அந்தமும் உவமையுமல்லாத சுகசொரூபமென்றறிவார்களென்ப தருத்தாபத்தி. (௨௰)

மருவுற்றபிரகிருதி யதிலுற்று மறைவன்மிக .......... *
மொருவற்கு மறியும்வகைவெளிநிற்பதிலையுலகில் .... *
வெருவுற்ற பெருமயமின் மன்றமுற்று விழிமறைய .... *
வருவுற்றவெனையுலக மறிகிற்றதிலையடைய ... ......... *

(இ-ள்.) நான் என்னுடனே கூடின பிரகிருதியிலே கூடிக்கா

படாமல் மிகவுமறைவேன் ஒருவருக்காகிலு மறியும்படி வெளியா கிறதில்லை யுலகத்திலே பயமுள்ள பெரியமாயையினது மயக்கத் தில்மனது கூடி அதினாலேகண்மறைப அதினாலே அருவமான வென்னை யுலகமெல்லாம் அறியமாட்டாதில்லையென்றவாறு. ❋ பிரகிரு தியாவது —போகமாயை. (உ௧)

(எழுசீரடி யாசிரிய விருத்தம்.)

போனவையினிமேற் புருகநின் றனவிப்பொழுதுபோ
கின்றனவனைத்தும் - யானறிந்திருப்பன் யானவையு மூலகி
லெலவைமற் றியாவருமறியார் - மானவெஞ் சிலையாய்
வேண்டல்வேண்டாமை தன்னிலே வருங்குணமயக்காற்
றுணையர்ந்துருவாய்ச் சனித்திடும்பொழுதே தத்தமெய்
யறிவுசார்ந்திடலால்................................ ❋

(இ-ள்.) கொல்லுந்தொழிலாலே கொடுமையைஞ் செய்ததினாலே பெருமையுள்ள வில்லையுடைய அருச்சுனா! போன காரியத்தையும் இனிமேல்வருகிறதாக நின்றகாரியத்தையும் இப்பொழுது நடக்கிறகாரியத்தையும் எல்லாவற்றையும்நானறிந்து நாசமில்லாம லிருப்பேன் உலகத்திலுள்ள யாவரு மென்றசரசீவன்களும்மவையுமே ற அசரசீவன்களும் விருப்பு வெறுப்பான ராகத்து வேஷங்களினாலே வரப்பட்ட திரிகுண மயக்கத்தினாலே தானே மறந்து ரூபமாய்செற்பிக்கிறபோதே தங்கள்தங்களுடையசரீர அறிவான அஞ்ஞானம் அடைந் ததினாலே திரிகாலங் களிலும் என்னை யறியார்களென்றவாறு. ❋ இதனைப்பொருளுக்கேற்ப மாறுக மற்றவென்றது என்னைநான் அறிவதல்லாமல் மற்றயாவரும் யாவையும் அறியமாட்டாரென்பது. மெய்யறிவாவது-சரீரத்தையே தானென்றறிகிற அஞ்ஞானம்.— (உஉ)

வியக்கமே முயன்ற நல்வினைமாந்தர் விரும்பலராகிமுன்
செய்து - பயக்கமேவிய தீவினையெலாமறவே பற் றறப்
பரிந்தமுன் போனற்-றுயக்கமேபரியுஞ் சோகமே மு
தலாந் துவந்துவக் குணங்களிற்றொடர்ந்த - மயக்கமே
வலாவொழுக்கமே நிலை நின் றென்னையே மனத்தி
டைவைப்பார்...................................... ❋

( இ-ள். ) எல்லாருமதிசயிக்க மேலாகச்செய்த புண்ணியத்தை மனிதர்கள் இச்சியாத வர்களாகிப் பூருவத்திலேசெய்த அந்தப் புண்ணியம் பலனைக்கொடுக்க அவைகளாலே பூருவமேதொடர்ந்து வந்தபாவமெல்லாம் நாசமாகவே கருமபந்த மறப்பரிபக்குவமாகிப்போனாற் றுன்பத்தையேசெய்யப்பட்ட சோகமுதலான தொந்தக்குணங்களினாலே தொடர்ந்தமோகத்தைக் கூடாதவர்களாகின்றதிடபத்தியான வொழுக்கமே நிலைமையாகநின்று என்னையே மனதில் வைப்பார்களென்றவாறு. ☙ நல்வினையாலே தீவினையற்று ஒன்றுக்கொன்றீடாக இருவினைக்கட்டுமற்றுப் பரிபக்குவமாகிப்பேறாற்றுன்பகாரணமான சோகமுதலாகத் தொந்தமாக அநாதியிலே தொடர்ந்தருண மோகத்தைவிட்டு நிச்சயஞானபத்தியை யொழியாமல் நின்றென்னையே தங்கள்மனதில்வைப்பார்களென்பது. (உரு)

எறிவரும்பிணிமூப்பிறப்பொடு பிறப்பென்றிவைகெடுத்
திடற்பொருட்டாகக், குறிவரும்பரிசு நினைந்துமற்றெ
னையே கூடுதன்மேவிநின்றவர்க, ளறிவரும்பிரமந் தன்
னையுமதனை யறியுமெய்யறிவையு மறிவி, னெறிவருங்கரு
மமனைத்தையுமறிவா ரறிந்தபின்னிகழ்வதுங்கேளாய்.. *

(இ-ள்.) விலகிப்போய்விட அரிதான வியாதிமூப்பிறப்புக் கழிந்தவுடனே பிறப்புமென்றறிந்த நாலையுங் கெடுக்கிற நிமித்தமாக ஆத்மஞான சொரூபமான குறிவரும்படி நினைந்து என்னையே கூடுகிற முயற்சியையடைந்துநின்றவர்கள் அறியஅரிதான பிரமத்தையும் அந்தப் பிரமத்தை யறியப்பட்ட சத்திய ஞானத்தையும் அந்தஞான மார்க்கத்தினாலே வரப்பட்டசகல கருமத்தையும் அறிவார் அப்படியறிந்தபிறகு நடப்பதுங்கேட்பாய் அருச்சுனாவென்றவாறு.

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

தேடும்பழையவதிபூத மதிதெய்வத்தோடதியெச்சங் *
கூடும்பரிசுநின்றவெனை யறிவாரிந்தப்புழுக்கூடு ...... *
வீடும்பொழுதுமென்னைமெய்யேயறிவாரென்றாரியாய்வெ
றோடும்பலமாயக்கூத் தாட்டுகின்றவம்மாயன். [வ்வே

(இ-ள்.) எல்லாரும் விசாரிக்கப்பட்ட பழையதான அதிபூதத்துடனும் - அதிதெய்வத்துடனும் - அதியெஞ்ஞத்துடனும் - கூடு

ம்படிநின்றவென்னை யறிகிறவர்கள் அவர்களுடைய இந்தப்பூவிருக்கிற கூடாரமானதேகம் அழியும்போதும்-என்னையேமெய்யாக அறிவார்களென்று சொன்னார். நாம்வேறுவேறாக ஆடப்பட்ட பழையதான மாயக் கூத்தையாட்டுகின்ற அந்தப்பரமாசுத்தவனென்றவாறு. ✲ தேகமிருக்கையில் தானேசகலபூதங்களிலும் சகலதெய்வங்களிலும் சகலகருமங்களிலும் பரிபூரணமாக நின்றவென்னை இந்தப்படியறிகிறவர்கள் தேகம்போகின்றபோதும் என்னைமெய்த்தியமாக அறிவார்களென்றது இப்படி அறியாதவர்கள் சாகிறபோதும் மறந்துபிறவித்தொந்தப்படுவாரென்றகருத்தாயத்து. (உ௫)



ஏழாவது-மாயாரூப-அத்தியாயம்-முற்றும்.
ஆ அத்தியாயம்-எ-ரு- கூடியசெய்யுள். (உஉஅ)



எட்டாவது.

# அட்சரயோக

# அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

அடையஞாலத்தை யார்த்ததிலார்ப்புறு ......... ✲
மிடையதாம்பிடை யார்ப்பவிருப்பவர் ......... ✲
குடையனுசமுன்னோதினவேகொடங் ......... ✲
கடையனுணவன் மீளவியம்புவான் ......... ✲

(இ-ள்.) ஜகத்தையெல்லாந்தனக்குள்ளேகட்டி அந்தச்செகத்திலே தான்கட்டுண்ணாமல் இந்த அவதாரத்தில்-இடையருடையகயிறானது-தன்னிடையைக்கட்ட அதனாலேகட்டுண்டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்குத் தன்னைச்சீஷித்துவமுடையவனாக முன்புசொன்னதையே சங்கையாகக் கொண்டு அப்போது பாண்டவர்களுடையமத்திமனான அருச்சுனன் திரும்பச்சொல்லுவானென்றவாறு. (௧)

ஆயபிரமத்தோடாதி யாவமமைகரும ........ ........ *
மேயவதிபூதமதிதெய்வமதிமெச்சசங் ........ .......... *
காயமதிலுள்ளபரி சுங்கெழுமுகாயம்.............. *
வீயுனுறுபோதிலுனை மெய்தெளியுமாறும்... ...... *

(இ-ள்.) நீர் சொன்னதாகிய பிரமத்துடனே ஆதியாக அமைந்த கருமம் இவைகளுடனே கூடின அதிபூதம்- அதிதெய்வம்- அதியென்னுமென்று சொல்லப்பட்ட இந்த ஆறும் - தேகத்திலிருக்கின்றவிதமும்- இந்தஆறுடனுஞ் சினேகமானதேகம் நாசமடைகிறபோதில் உம்மையுண்மையாகத் தெளியப்பட்ட வழியும், இந்தவேழுமென்றவாறு. ❁ இந்தவேழையுங் கிரமமாகச் சொல்வது- பிரமம்-அதியாகம்-கருமம்-அதிபூதம்-அதிதெய்வம்-அதியென்னும்- உண்மைதெளிவித்தல். ஆகவேழு இவைகட்கு எழுவகையினுமென்று பெயர் மெய்யென்றும், உண்மையென்றும், சத்தியமென்றும், நித்தியமென்றும், பிரமத்தைச்சொல்லுவார்கள். இதனாலே- பொய்யென்றும், இன்மையென்றும், அசத்தியமென்றும்- அநித்தியமென்றும்; மாயையைச்சொல்லுவார்கள். உனைமெய் தெளியுமாறு-சது உன்னையுண்மையாகத் தெளியும்படியென்றது. இதனாலே இப்பொழுது உன்னை மாயாதேகியாய் மயங்கியதினாலே அநந்தியகாலத்தில் உன்னைப்பிரமமாகத் தெளியும்படியென்றது. (உ)

விரியவுரைசெய்தருள வேண்டுமெனமீண்டே ... .*
வரியரவிலேதுயிலு மாயவனுரைப்பா...........*
னரியதழியாமையதனைத்தினுமுரைக்கிற் .. . .. *
பெரியதுமொழிந்தபிர மம்பிறவையுங்கேள்.... .*

(இ-ள்,) தெரியும்படி விரிவாகத் திருவாய்மலர்ந் தருளிச்செய்யவேண்டுமென்று அருச்சுனன் சொல்லப் பொறியுள்ள ஆதிசேஷின் மேலே யோகநித்திரைசெய்தருளுகிற ஸ்ரீகிருஷ்ணசுவாமி திரும்பச் சொல்லுவார் சொல்லுமிடத்தில் வாக்குமனங்களுக் கெட்டாதது அழியாதது நித்தியமானது பெரியதுக்கும் பெரியதாய் எத்தனை சொல்லப்படுமோ அவைகளுக்கெல்லாம்பெரிது அது முன்னுக்குச்சொன்னபிரமம் இனிப்பின்னுக்குச்சொன்ன மற்றஆறையுங்கேள் அருச்சுனாவென்றவாறு. ❁ ஆயபிரமத்தென்றகவிடம், விரிய வுரையென்றகவியும், ஒருதொடர். உரைக்கிலரியதனமாலுக:மொழிந்தபிரமமபி

றவையுமென்றதனால் மூன்றாக இனிப்பின்னாகவெனவந்தது இன்னு
மும் மொழிந்த பிரமமென்றதனாற் பிரணவஅட்சரமாகச் சொன்
னபிரமமென்றுஞ் சொல்லலாம். (௩)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அந்தக்கரணங்களினின்ற வறிவத்தியாகமாகின்ற......*
திந்தப்பிறவிதனையாக்கு மியாகங்கருமமெயென்பதுதா..*
னந்தற்கமைந்தவுடம்புதனை நானென்கின்றததிபூதம்.*
பந்தப்படுமிவ்வுடற்கமைந்தபுருடன்றெய்வமெனப்படுவான்.

(இ-ள்.) அத்தியாகமாகின்றது-அந்தக்கரணங்களிலேநின்ற அறிவு-கருமமென்பது-இந்தப்பிறவியை யுண்டாக்குகின்ற யாகமான சிருட்டி-அதிபூதமாகின்றது- அழிகிறதற்கு அமைந்த உடம்பைநானென்கின்ற ஆங்காரம்-அதிதெய்வமாகின்றது - கட்டுப்பட்டவிந்தவுடம்புக் கமைந்தபுருடனென்றவாறு. ※ அத்தியாகமாகிறது-அத்தியாத்மகமென்னப்படும், (௪)

எஞ்சுதலையிலதியெச்ச மாகின்றதுதானிறக்குங்கா.............*
லஞ்சுகவருநெறிகளெல்லா மடைத்துநினையப்படுவதுதா......*
னஞ்சுபுலனும்பொறியைந்து மடக்கியறிவென்பாலதாயத்......*
துஞ்சுமவர்களெனையடைவ தெவ்வாறென்னிற்சொல்லக்கேள்....*

(இ-ள்.) குறைவில்லாத அதியெஞ்ஞமாகின்றது-மனசைக்கிரிகிக்கிற விந்திரியவிஷயாதி வழிகளையெல்லாம் அடைத்துத் தான் சாகின்றபோது என்னுண்மையை நினைக்கப்படுவது பஞ்சேந்திரியத்தையும் பஞ்சவிஷயத்தையும், அடக்கி அறிவை என்னிடத்தில் வைத்துச் சாகின்றவர்கள் என்னை யடைவதெப்படியென்றால்சொல்லக்கேள் அருச்சுனா;வென்றவாறு. (௫)

இந்தவுடலம்விடும்பொழுதி லிபாவனியாதொன்றினைநினைந்தா....*
னந்தவகனையந்தப்பாவனையாலடையுமாதலினால்.................*
ரந்தமில்லையெப்பொழுது மிதயத்திடைகொண்டென்பாலுஞ் *
சிந்தையொடுவாளமர்தொடங்கி லதனாலெனையேசேருதியால்.....*

(இ-ள்.) எவனாகிலுமொருத்தனிந்தத் தேகம் விடுகிற போது எதை யாகிலும் ஒன்றையெந்தப் பாவனையாக நினைத்தானோ அவன் அதை அந்தப்பாவனையா லடைவான் ஆகையாலே யென்னுடைய

யான சுபாவத்தையெய்தாரு முன்னிருதயத்தினிடத்தில் வைத்துக் கொண்டு என்னிடமாக வைக்கப்பட்ட மனதுடனே கீர்த்திப்பிரகாசமுள்ள சண்டையைத் தொடங்கிச் செய்தல் நானுனக்குள்ளும் நீயெனக்குள்ளு மானதினாலே யென்னையே நிச்சயமாகச் சேருவா யென்றவாறு. என்னையே யென்றதனால் சந்தேக மில்லையென்றது. (௬)

நல்லகருமயோகத்து ஞானயோகமதனினுஞ் ...... ...... *
செல்லுமனனை மிகச்செலுத்திப் பிறிதொன் றினையுஞ்சேராதான். *
சொல்லவரியகதிரவன்மண் டலம்போற் றோன்றுந்தொல்லோனை .... *
யல்லதடையா னவனியற்கை யடையும்பரிசையறையக்கேள் ...... *

(இ-ள்.) நல்லகருமயோகத்திலும்- ஞானயோகத்திலும் - என்னைச்சேரத்தக்கதாக மனதை மிகவுஞ்சேர்த்து வேறொன்றையுஞ் சேராதவன் இவ்வளவென்றுசொல்ல அரிதான அளவற்றசூரியமண்டலம்போல விளங்கப்பட்ட பழையவனை என்னையடையானல்லாமல்வேறொன்றையுஞ்சேரான் அவன்சுபாவத்தை யடையும்படியைச்சொல்லக்கேளருச்சுன வென்றவாறு. (௭)

எல்லாப்பொருளுமறிவானை யெல்லாப்பொருட்கும்பழையானை *
எல்லாரையுந் தன்னிலை நிறுத்துவானை யிறப்பச்செறிவானை .... .... *
எல்லாப்பயனுமீவானை யார்க்கு நினைத்தற் கரியானை... ...... ......*
எல்லாவிடத்தும் பொய்யிருடீர்த் திலங்குகதிர்போலெழுவானை -*

(இ-ள்.) எல்லாப்பொருளையு மறிந்த சருவக்கியனை யெல்லாப்பொருளையு முண்டாக்குகிற சிருஷ்டியினாலே யெல்லாப் பொருளுக்கும்பழையவனை யெல்லாரையுந் தன்னிலையில் நிறுத்துவதான திதிசெய்கிறவனை யெல்லாரையுஞ் சாகச்செய்து தான் சாகாமற் சங்காரஞ்செய்தகனவானை யெல்லாப்பிரயோசனத்தையுங் கொடுக்கிற திரோபாவஞ்செய்கிறவனை யாருக்கும் நினைக்கிறதற்கெட்டாதவனை யெல்லாவிடத்திலு மிருக்கிறபொய்யான யிருளைப்போக்கிப்பிரகாசிக்கிறஞானசொரூபமாக வெழுந்து அனுக்கிரகஞ்செய்கிறவனை யென்றவாறு. ※ இதனாற்பிரமந்த விரமற்றப் பொருள்களெல்லாம் அறிவில்லாததென்றும் புதிதென்றும் அநாதரரென்றும் அநித்தியரென்றும்அசுவதந்திரரென்றும் அடங்கினவரென்றும் மாயாமயமென்றும் அறிவது இதனுள் சிருஷ்டிதிதிசங்காரதிரோபவம் அனுக்கிரகமென்ற பஞ்சகிருத்தியமுங்காண்க. (அ)

மருவுதற்குரிய வன்புடையான் மயங்காவியோகமனத்தாலே …….. *
புருவத்திடையே தன்னுடைய புனர்திருயிரைப் புகநிறுத்தி…… *
யுருவத்தினைவிட்டொழிவிந்த யோகத்தாலே யவ்வேறும் … … [லோர்.
பொருவப்படியிப் பொருண்மேல் யின்னம் புகல்வன் பொருவே

(இ-ள்.) இப்படிக்கொத்த வென்னைச் சேருகிறதற்குரித்தான பத்தியையுடையவன் வேறொன்றிலும் மயங்காதயோகந்திட சித்தத்தினாலே சத்திசெய்து குற்றந்தீர்ந்த தன்பிராணவாயுவைப் புருவநடுவே சேரநிறுத்தித் தேகத்தைவிட்டால் இந்தயோகத்தாலே அந்தப் பிரமமான வென்னோடுங் கூடப்படுவான் இந்தப் பொருளின் மேலே இன்னமொன்று சொல்வேன்கேள் சண்டைபண்ணுகிற வேலையுடைய அருச்சுனா வென்றவாறு. ஃ எல்லாப்பொருளு மென்ற கவியும் மருவுதற்குரிய வென்றகவியு மொருதொடர். (௯)

(சொச்சகக்கலிப்பா.)

யாதொன்றைமறைதெரிந்தோரழியாதென்றெடுத்துரைப்பா … …*
ரியாதொன்றை யவாவறுத்த யோகியர்தா மெய்திடுவா …………*
ரியாதொன்றையுற வுணர்ந்தோர் காமமுதலிய வீழ்ப்பா ……*
ரியாதொன்றைப் பரம்பொருளைச் சுருக்கமா யியம்புவன்கேள் -*

(இ-ள்.) வேதந்தெரிந்தவர்கள் எதையழியாதென்று தூக்கிச் சொல்வார்களோ ஆசையைக்கெடுத்த யோகிகளெதை அடைவார்களோ காமக்குரோத லோப மோக மதமாற்சரியங்களை யழித்தவர்கள் எதையடைய வேண்டுமென்று தெரிந்தார்களோ அந்த வொன்றான பரம்பொருளைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்கேள் அருச்சுனா வென்றவாறு. ஃ எதையென்றது யெந்தச் சொரூபத்தை. (௰)

(கலிவிருத்தம்.)

அஞ்சுபுலன்வழி யடைத்தய லுறாமே ………*
நெஞ்சுதனை யிதயகமலத்தினி றுத்தி … *
யெஞ்சலி லுயிர்வளியை யுச்சியினிலேற்றி ……*
யுஞ்சுபுது நெறியெனவி யோகமொடிருந்தே……*

(இ-ள்.)பஞ்சவிஷயங்களையும் அன்னியமானவைகளிலே சேராமல் அந்தந்தவிஷயங்களை அந்தந்த விடமான விந்திரியங்களிலே தானேயடைத்து மனதை யிருதயகமலத்தில் நிறுத்தியிளைப் பில்லாத பிராண வாயுவை பிரமமந்திரமான வுச்சியிலேற்றிக் கருமானுபவ

கு நூறுவருஷமென்றகாலஞ் சரியானாற் பிரமாதிலோகங்க ளெல்லா
ம்நாசமடையும் அதனாலே பிரமலோகத்தைச் சேர்ந்தபேருந்திரு
ம்புவாரென்றது. (௰௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

நெறியில்வருவியத்தமோ டவ்வியத்தங் கூடாத நிலைமையென்
றும்-பொறியழியும் யாக்கையினி லழியாதபுலனென்றும் புனி
தமென்று - மறிவரியவுருவென்று மழியாதபொருளென்று ம
டைந்தோர்பின்னைப் - பிறிவரியநெறியென்று பெரியோர்கள்
பேசுவதென்பெற்றிகண்டாய் ........................................ *

(இ-ள்.) பிரமாதிலோகங்கள் அநித்தியமென்று அதற்குள்ளசுபாவத்தைச்சொன்னீரே வும்முடைய நித்தியசுபாவ மெப்படியென்றால் சொல்லுகிறேன்கேள் அருச்சுனா! பிரகிருதிவழியில் வரப்பட்டவியத்தத்துடனே அவ்வியத்தம் இந்தவிரண்டுங் கூடாதநிலைமையென்றும் இந்திரியங்கள் நாசமாகப்பட்டதேகத்திலிருக்கிற கெடாத ஞானமென்றும் சுத்தமென்றும் யாருமறியவரிதானசொரூபமென்றும் கெடாதவஸ்துவென்றும் அதனை யடைந்தவர்கள்பிறகுபிரியவரிதானகெதி யென்றும் பெரியோர்கள் சொல்லுவதும் என்னுடைய சுபாவமே கண்டாய் அருச்சுனா வென்றவாறு. ✻ இதனாலேயென்னை யடைந்தவர்கள் திரும்பார்களென்றவாறு. (௰௫)

எப்பொருளும்யாதொருவனுள்ளடங்கிற் றெங்குமாய்நி
ற்கின்றான்யா, வப்பரமப்பொருளாகியுள்ளவென்னையன்பி
னாலடைவதையா, விப்பரிசுவருங்காலத் திறந்தார்கள்பிற
வாதார் பிறப்பரொன்னி, லப்பரிசுவருங்காலத் தினையறிய
வுரைக்கின்றேனதனைக்கேளாய் ................................ *

(இ-ள்.) எவனொருவனுள்ளே எந்தப்பூதங்களுமடங்கினவோ எங்குந்தானாகநிற்கிறவனும் அந்தப்பரம்பொருளாகவிருக்கிறவென்னை பத்தியினாலே யடையத்தக்கது ஐயா இந்தச்சுபாவம் வருங்காலத்தில்மரணமானவர்கள் திரும்பிப்பிறவார்கள் பிறப்பாரொன்னில். அந்தச்சுபாவம்வருகிறகாலத்தை யுனக்கு அறியச்சொல்லுகிறேன் அதைக்கேட்பாய் அருச்சுனா! வென்றவாறு. (௰௬)

அங்கியொளிபகல்வெண்மை யாங்காலந் தேவதையா ம
வைகளோடு, தங்கியறு திங்களுடை யுத்தராயனஞ்சார்

வார் மறித்துஞ்சாரார், கங்குல்புகை கறுப்பென்னுங்கா
லத்தேவதையடைந்து பிறக்குங்கண்டா, யெங்கமறுதிங்
களுடைத் தெட்சணாயனத்திறந்த யோகியென்பான். *

(இ-ள்.) அக்கினிப் பிரகாசம் பகல்சுக்குலபக்ஷம் இவைகள் அதிதேவதையாகப்பட்ட அவைகளுடனேகூடித் தைமாதமுதல்ஆனிமாதமட்டும், ஆறுமாதத்தை யுடைய உத்தராயணத்தை யடைந்தயோகிகள் பிரமத்தையடைவார் திரும்பவுமிந்தச் சகத்திலேவாரார்கள். இராத்திரிபுகை அமரபக்ஷமிந்த அதிதேவதையை யடைந்து எங்கும்- ஆடிமாதம்முதல் மார்கழி மாதமட்டும், ஆறுமாதத்தையுடையதெக்ஷணாயனத்திலே மரணமான யோகியென்னும் பேருடையவன் திரும்பவுமிந்தச் சகத்திலே பிறப்பான் கண்டாய் அருச்சுனா; இவ்வன்றவாறு. (௰எ)

ஏதமானதின்றியிவ்விரண்டுமோயும்யோகிதான் ......... *
வேதமோதிவேள்விதான மெய்தவங்கள்செய்துள ... *
னேதுவாயநற்பந்தங்க ளெய்திவீடுமெய்துவா ... ... *
னாதலானீயோகமேசெய் யென்றுமாயனோதினான்... *

(இ-ள்.) குற்றமான தில்லாமல் இந்தவுத்தராயணம் தெக்ஷணாயனமென்கின்ற விரண்டும் விசாரிக்கப்பட்ட யோகியானவன் வேதங்களை யோதி யாகங்களைப்பண்ணித் தானங்களைக் கொடுத்துச்சத்தியமான தவசுகளைச் செய்திருக்கின்றவன் அடைகின்றபடிக்கு நல்லபதவிகளையடைந்து பிறகு மோக்ஷத்தையு மடைவான் ஆகையால் அருச்சுனா; நீயோகத்தையே செய்யென்று ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொன்னாரென்றவாறு. (௰அ)

எட்டாவது-அக்ஷரப்பிரமயோக-அத்தியாயம்-முற்றும்.

இந்த அத்தியாயத்துக்குக்கிரந்தத்திலே அக்ஷரப்
பிரமயோகமென்றும்- சத்தப்பிரஞ்ஞாதா
ரயோகமென்றும்- போதமிழில் - ஏழு
வகை வினாவென்றும் பெயர்.

ஆ அத்தியாயம் அ இ - கூடியசெய்யுள். (உசகு)



லென்னேயென்றனியற்கைபெனப் பாராயிந்தச்சகமெல்லா.....*
மன்னேயென்றன்மாயைபெறு மாங்காரமுநான்றருவன்காண்...*

(இ-ள்.) எல்லாவற்றிற்கு முன்னேநான் ஒன்றுங்கலவாமல்நிற்பேன் நான்சகல்முமாய் நின்ற அந்தநுண்மையிருலே என்னுடையுலகமெல்லாஞ் சொரூபங்களாவது-ஆதலால் என்சுபாவத்தைப்பாராய் அருச்சுனு; எப்போதும் என்மாயை யுண்டோ அப்போதேயிந்தவுலகத்தையெல்லாம் மாயையுண்டாக்கும் இப்படியென்னிலுண்டானது மாயையாகையால் ஆங்காரமும்நானுண்டாக்கினதுகண்டாயென்றவாறு. (ரு)

(கலிவிருத்தம்.)

என்னுருவிற்புணராதே யென்னைவிடத்தோன்றாதே.. *
மன்னுயிர்களெனையெங்குஞ் சார்ந்துவரும்வகைகேட்கி
னுன்னுமிடனெங்குநிறைந்தொளிர்கின்றவானெங்குந்*
துன்னுமியற்செறிகாற்றின்றோற்றம்போல்சுடர்வேலாய்.

(இ-ள்.) என்னுடையசொரூபத்திலேபொருந்தாமலும் என்னைவிடவுண்டாகாமலும் நிலைமையானசகலசீவன்களும் எங்கும்என்னையே சார்ந்துவரும் அதுவரப்பட்ட வகையைக்கேட்கிற் பிரகாசிக்கின்றவேலாயுதத்தையுடைய அருச்சுனு! சொல்லுகின்றேன் கேள் நினைக்கப்பட்ட விடமெங்கும் நிறைந்து பிரகாசிக்கின்ற ஆகாயமெங்கும்நெருங்கின சுபாவமுங்கனமுமுள்ள காற்றினுடைய தோற்றம்போலவென்றவாறு. ✽ வாயுவானது ஆகாசத்திலுண்டாய் அதிலே கூடாமல் அதுள்ளமட்டுந் தானுள்ளதாய் அதினுடைய விஸ்தாரமட்டும்நிறைந்ததாய் அதைவிடவேறிடமில்லாததாயிருக்கிறதுபோலச்சகலசீவனும் என்னிலுண்டாய் என்னிலேகூடாமல் நானுள்ளமட்டும்தானுமுள்ளதாய் என்னுடையவிஸ்தார மட்டும்நிறைந்ததாய்அதைவிடவேறிடமில்லாததாயிருக்கின்றதுபோலச் சகலசீவனும் என்னிலுண்டாயென்னிலே கூடாமல் நானுள்ளமட்டும் தானுமுள்ளதாய் என்னுடையவிஸ்தாரமட்டும் நிறைந்ததாய் என்னைவிடவேறிடமில்லாததாய் இருக்குமென்றதுவிரிவு. (சு)

கண்டபொருளிவையனைத்து மிறக்குநாளென்னிடையே.........*
மாண்டுபுகும் பிறக்குநான் மற்றவைதன்வான்முறையே...........*

மீண்டுபுறப்படு மெல்லாமாதலினான் மெய்ப்பார்க்கில்..................*
யாண்டுமுயிர்படைத்துக் காத்தழிக்கின்றேனியானேகாண்.........*

(இ-ள்.) இவ்விடத்திற்சொல்லப்பட்ட பூதங்களிவை சகலமும் நாசமாகிறநாளில் நாசமாகி யென்னிடத்திலே புகுந்தடங்கும் இவை தவிரப்பிறக்கிறநாளில் அவைகளொடுங்கின வரன்முறைப்படியேயெல்லாந் திரும்பிப்புறப்படும் ஆகையாலே சத்தியமாகவிசாரிக்கில் எந்தவிடங்களிலும் சகலசீவனையும் சிருஷ்டித்து ரக்ஷித்துச் சங்கரிக்கிறவன் நானே யல்லாமல் வேறில்லைகா ணென்றவாறு. ※ வரன்முறையாவது பிருதிவு அப்புவிலடங்கி அப்பு தேயுவி லடங்கி தேயுவாயுவிலடங்கி வாயு ஆகாயத்தி லடங்கி ஆகாய மாயை யிலடங்கி மாயை யென்னிலடங்கின வரன்முறைப்படியே என்னில் மாயை யுண்டாய் மாயையிலாகாசாதி பஞ்சபூதமு மொன்றி லொன்றுண்டாவது (எ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

விலங்கலனையாய் பலங்களுடன் வேண்டல் வேண்டாமையைவி
ட்டுச் - சலங்கொள்வினைக ளவைசெய்வே னதனா லென்னையவை
சாரா-வுலண்டுதானே நூறந்த நூலாற்கண்டுண்டுலந்தாற்போ
ல்-பலங்கணினைவாரவற்றாலே கட்டுண்டாங்கேபட்டுழப்பார்*

(இ-ள்.) மலையையொப்பான அருச்சுனா ! பிரயோசனங்களுடனே விருப்பு வெறுப்பைவிட்டு அழிக்கப்படாத வைரங்கொண்ட சிருஷ்டியாதி கருமங்களைச்செய்யவேண்டிப் பிரயோசனத்தில் விருப்பு வெறுப்பில்லாததினாலே அந்தச்சிருஷ்டியாதிகருமங்கள் என்னைச்சேராவாம் உலண்டு என்று பெயரையுடைய கொம்புப்புழுவானது தானே நூலையுண்டாக்கி யந்த நூலாலே எந்தக்காலத்திலும் எந்தவுபாதிக்கும் அழியாத கூடுகட்டவேண்டுமென்று தன்னையுள்ளாக்கிக் கட்டித் தான் அந்தக்கூட்டுக்குள்ளே கட்டுண்டுவெளியிலேவர வழியில்லாமல் அந்தக்கூட்டுக்குள்ளே செத்தாற்போலப் பிரயோசனத்தை யிச்சையாக நினைத்துக்கருமங்களைச் செய்தவர்கள் அந்தக் கருமபலத்தாலே கட்டுண்டு அந்தக் கருமத்திலேதானே துக்கப் பட்டுழலுவார்க ளென்றவாறு. (அ)

(கலிவிருத்தம்.)

உளர்வனநிற்பவர்க வுலகையுண்டாக்கு மென்னை.................*
யோர்வுறவறியாதேயோர் மகனென விகழாநிற்பா...............*

வேரொனெஞ்சத்தாசை வினைகளை யிடையச்செய்வா... ...*
ராரெனிலவர்கடாமு மரக்கரோ டசுரரானார் .................. . *

(இ-ள்.) ஊர்வதாகிய சரமும் நிற்பனவாகிய அசரமும் இந்தச் சராசரரூபமாகச் சகத்தையுண்டாக்கப்பட்ட வென்னையனாதிற்கினையும்படியாகச் சகலத்துக்குஞ் சர்த்தனென்றறியாமலே ஒருமனிதனென்று அவமானம்பண்ணுவார்கள் மனசிலே வேர்விழுந்ததுபோல எழும்பின ஆசையினாலே கருமங்களையிருந்து செய் வார்கள் அவர்களாரொன்னில் ராக்ஷதருடனே அசுரரும்ஒப்பானவர்களென்றவாறு.

அறிவினாலென்னையேயாக வறிந்துகொண் டமைதியாலே ...... *
பொறிவழியடைத்தெப்போது மென்னையே போற்றிசெய்து,
நெறியினால்வழுத்திவாயா லென்னையே நினைந்துநெஞ்சாற்.*
செறிதருமவர்கண்டாய் தேவரிற்றெரியப்பட்டார் .... ......*

(இ-ள்.) அறிவினாலே யென்னையேகாத்தனாக அறிந்துகொண் டு அடங்கின் சுபாவத்தினாலேயிந்திரியங்கள் போகிறவிஷயவழியை யடைத்து எப்போது என்னையே ஆசைபண்ணிப் பத்தி மார்க்கத்தினாலே வாயினாலே கீர்த்தனம்பண்ணி வேறொருவரையும் வேறொன்றையும் நினையாதமனதினாலே யென்னையே நினைந்துகொண் டிருக்கிறகனமானவர்களே கண்டா யருச்சுனா தேவர்களைப்போலே தெரியப்பட்டவர்க ளென்றவாறு. ※ மனதொன்றை நினைந்துவாக்குவே றொன்றைச்சொல்லித் தேகம்முன்னிரண்டு மல்லாததைச் செய்கின்றது தேகசுபாவமாகையால் என்னையேயறிந்து என்னையே போற்றிசெய்து என்னையேவழுத்தி யென்னையேநினைந்து என்றுந் திடப்படுத்தற்காக என்னையே யென்றுந் திரிகரணத்துக்கும் புத்திதிடப்படச்சொன்னார் தேவரிற் றெரியப்பட்டாரென்றதனால் தேவர்களைப்போலத் தெரியப்பட்டார்களென்பது இதனால் முன்பாட்டில் அரக்கரோ டசுரரானாரென்றதற்கும் அவர்களைப்போலானவர்க ளென்பதுதேவாசுரர்களைச்சொன்ன தேதுக்கென்னில் தன்னை அறிந்த தற்கும் அறியாததற்குந் திஷ்டாந்திரஞ்சொன்னது இந்தத்திஷ்டாந் திரஞ் சகலசீவனுக்குஞ் சரியாகக்காட்டினது செறிதரு மவர்க ளாவது கனமானவர்கள் கனமானவர்களாவது மகாத்மாக்கள்செறிவுகனமாகையால் செறி தருமவைகளை மகாத்மாக்க ளென்றது மகாத்மாக்களென்பது வடசொல் கனவான்களென்பது தமிழ். (௰)

காலத்தானும்பொருளிடங்க ளானுங்கணித்தற் கரியவெனை... .... *
ஞாலத்தார்கள்புகலரிய ஞானயோகங் களினாலே ... ... ... ... ...*
கோலத்தால்வே றாகவுமெய்க் குறியாலொன்றா கவுங்கொண்டு...*
சாலத்தாழ்வாரவருடைய தன்மையியான் சாற்றுவன்கேள்...*

(இ-ள்.) காலத்தினாலும்பஞ்சபூதவிடங்களினாலும் அள விடுதற்கரிதான என்னையுலகத்தி லுள்ளவர்களினால் மாயாபதார்த்தபேரூபவுடையாளங்களினாலே வேறுவேறான அனேகமாகவுஞ் சத்தியமான அடையாளத்தினாலே யொன்றாகவுந் திடம்பண்ணிக்கொண்டுமெத்தவும் பூசைபண்ணிவணங்குவார்கள். அவர்கள் சுபாவத்தை நான் சொல்லுகிறேன் கேள் அருச்சுனா வென்றவாறு. ※ என்னை யனேகமாகவு மொன்றாகவுந்திடம்பண்ணிக்கொண்டு ஞான யாகத்தாலே பூசைபண்ணுகிறவர்களுடைய சுபாவத்தைச் சொல்லுகிறனென்றுபொழிப்புரை சொல்வது. (௰௧)

(கலிவிருத்தம்.)

வேதமொழிவேள்விதி வேள்விபிதிரர்க்கே...... ......*
ஈதலுறுவேள்வியெரி நெய்சரு விவற்றாற்... .........*
காதல்புரிவோர்கள்புரி காரியம தெல்லா......... .. ...*
நாதமுதலாயபொரு ளாயவையு நானே...... .........*

(இ-ள்.) வேதவாக்கியப்படி செய்கிறயாகம் தினந்தினஞ் செய்யவிதித்த ஓமம்பிதிர்களுக்குக் கொடுக்கிறபிண்டதருப்பணயாகம் அக்கினிநெய்பிண்டம் இவைகளாலே ஆசையுடையவர்கள் செய்கிற காரியங்களெல்லாம் நானே சத்தமுதலாகிய விஷயப்பொருளாகியதும் நானே யென்றவாறு. ※ சத்தமுதலாவது சத்த பரிச ரூப ரச கெந்தம்.— (௰௨)

ஆயினுலகங்களை யளித்தொளி வளர்க்குந்... ....... ... *
தாயுமெருடுதந்தையவர் தந்தை தலைகண்ணோன் .. ... ...*
போயினவினைப்பய னளித்தல்புரி வோனு ... .. ... .... *
னேயுமறைநான்கனுட னோமெனு மெழுத்தியான்...*

(இ-ள்.) விசாரிக்கில் உலகங்களைப்பெற்றுப் பிரகாசிக்க வளர்க்கப்பட்டதாயும் அவனுடனேதகப்பனும் அவர்களிருவருடைய தகப்

பழகிய பாட்டன்மாரும் அந்த இரண்டுபாட்டன் பாட்டன் மாரு டைய தகப்பன்மாராகியமுப்பாட்டன்மாருமிப்படிப்பரம்பரையா கப்போகப்பட்ட முதல்களும் நானேமுன்செய்து மறந்து போன கருமபலனை மறவாமற் கொடுக் கிறதைச் செய்கிற வனும் நானே இசையப்பட்ட நாலுவேதங்களும்நானே அந்தவேதங்களுடனே ஓ மென்றபிரணவ வெழுத்தும் நானேயென்றவாறு. (௰௩)

(கலிவிருத்தம்.)

எல்லார்க்குங்கதியுநா னிருவினைப்பா ரகனுநா......*
னெல்லார்க்குந்தலைவனு னெப்பொருட்குஞ்சான்றுநா*
னெல்லார்க்குமுறைவிடநா னியார்க்குமிடர்தீர்ப்போனு
னெல்லார்க்குநல்லோனு மெப்பொருட்கும்வித்துநான்.

(இ-ள்.) எல்லாருக்குமடைகிற கதியம்நானே புண்ணிய பாவத்தை நடத்துகிறவனும் நானே எல்லாருக்கும் கர்த்தனும்நானே எல்லார்க்குந் துக்கந்தீர்க்கிறவனும் நானே யெல்லாருக்கும் நல்லவனும்நானே எல்லாப்பொருளுக்கும் விதையும்நானே யென்றவாறு.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தாங்கியநீரையெல்லா மிரவியின் றலத்தி னின்று..... ......*
வாங்குகின்றேனுமீண்டு மழைகளாய்க் கொடுக்கின்றேனு...*
மீங்குமெய்யுணரினே யாதலாலியா னொன்றேனு ...... ...*
மாங்கருச்சனை செய்கின்றா ரென்னையே யரிச்சிக்கின்றார்......*

(இ-ள்.) பூமிதாங்கியநீரையெல்லாஞ் சூரியனிடத்தில் நின்று வாங்குகிறவனும் திரும்பிமழைகளாய்க் கொடுக்கிறவனுமிப்போது மெய்யாகவிசாரிக்கில் யானேயெல்லா மாகையால் என்ன வாகிலு மொன்றுகிலும் அங்கேபூசை பண்ணுகிறவர்கள் என்னையே அருச்சனைபண்ணுகிறார்களென்றவாறு. (௰௫)

ஞானமாயொன்றாய்நின்ற வென்னையே நானுவாகப்.... .... .... ...*
போனதீவினையின் மாந்தர் வேள்வியாற் பூசித்தத்தால்.......... *
வானமா முலகமேறி வாழ்ந்துபுண் ணிடையேவீழ்ந்திட்.... ...... *
டீனமாமாசையாலே பிறப்பது பிறப்பதாவார்...... ............... ...*

(இ-ள்.) ஞானமாகியொன்றாகிச் சலியாமல் நின்றவென்னைத்

தானே யீனமான ஆசையினாலே அஞ்ஞானசொரூபமாய்ப் பலவாக்கச்சலனமுள்ள தேவர்களாகப் பாவித்து அந்தந்தத்தேவ போகத்துக்கு இச்சைப்பட்டு அந்தந்தத்தேவதாப்ரீதியாகச்செய்த யாகங்களினாலும் பூசைகளினாலும்- பாவங்களைப்போக்கின மனிதர்தேவலோகத்திலேயிப் புண்ணியந்தீருமட்டும் திவ்வியபோகத்தை யனுபவித்துப் பிறகுமண்ணிடமாக விழுந்துசாகிறதும் பிறக்கிறதுமாகித் தேவலோகத்துக்கும், பூலோகத்துக்கும், போக்குவருத்தாய்த் திரிவார்கள் என்றவாறு. ஞானமாயொன்றாய் நின்றவென்னையே யீனமாயிச்சையாலே நானாவாகவேவற்றியாற் பூசித்தாற் பேரான தில்லையின்மாந்தர் வானமா முலகமேறி வாழ்ந்து மண்ணிடையே வீழ்ந்திடப்பிறப்பது பிறப்பதாவானமாறுக. நானாவாகவென்றவிடத்திற்சைத்தவன் வருவிக்க. (௰௬)

பின்னையே யனையவேலா மேவுவார் வேண்டிற்றெல்லாம் ............... *
பின்னையே யென்றுசொல்லாதே யளித்தவர்க்காப்பன்வானோர் .... ...... *
மன்னையே முதலாந்தெய்வம் வணங்குகின்றாருமற்றென் ............ *
றன்னையே வணங்குகின்றார் தாமறியாததேகாண் ......................*

(இ-ள்.) மின்னையொப்பாகப் பிரகாசிக்கும் வேலையுடைய அருச்சுனா! அன்னியசிந்தையில்லாமல் என்னைக் கூடுகின்றவர்களுக்கு வேண்டியவெல்லாம் பிறகுகொடுக்கிறேனென்னாமல் அப்போதேகொடுத்து அவர்களைக்காத்துக்கொள்ளுவேன் தேவர்களுக்கிராசாவான இந்திரனை முதலானதெய்வங்களை வணங்குகின்றவர்களுக்கும் நான் அந்தந்தத்தேவதாரூபமாயிருந்தாலென்னையே வணங்குகின்றார்கள். அது அவர்கள் என்னை அறியாமற்செய்ததல்லால் அறிந்துசெய்ததில்ல கண்டாயென்றவாறு. (௰௭)

தேவரையடைந்தார்தேவ ராவர்கள்பிதிரர்தம்மை..... .*
மேவரவடைந்தாரந்தப் பிதிரராய்விளங்காநிற்பர் .......*
ரியாவர்களியாவர்பாலா ரவர்களேயாவரொன்று ... ..... *
லாவவென்னையடைந்தாரியானே யாவதற்கையமுண்டோ.

(இ-ள்,) தேவர்களையடைந்தவர்கள் தேவர்களாவார்கள்-பிதிர்களை மனசுபொருந்தி விரும்படியடைந்தவர்கள் - அந்தப்பிதிர்களாய் விளங்கிநிற்பார்கள் யாராயினும் யாரிடமாக அடைந்தார்களோ அவர்களேயாவரென்றால்- என்னையடைந்தவர்கள் நானேயாவ

றதற்கு ஆ! ஆ! சந்தேகமுண்டோ இல்லையென்றவாறு. ஆ ஆவென்றது இழிவானவர்களை யடைந்தவர்களு மவர்களே யாவராகில்மேலானவென்னை யடைந்தவர்கள் நானுகூறுதற்குச்சந்தேக முண்டோ ஆஆ-இது வென்ன ஆச்சரியம் நாமத்தேவர்களிலு மின்னேறு மென்று காட்டின ஆச்சரியக்குறிப்பு. (௰அ)

பேரிலைகனிகாய்நீரோ டெற்றவை கொண்டுபோற்றிக்..*
காதலாற்றாவெண்பாற் றந்தகளித்துக்கொள்வே...*
லாதலால்வழேற்ப வுண்பமற்றவைகளை கொண் ...*
டுதலாமமனக்காய்தந்தா லென்னையேயெய்தலாமால்..*

(இ-ள்.) பக்தியினாலே சுத்தமான அன்புடையவர்கள் பூ இலை பழங்காய் சலம் இவைகளிலே கிடைத்தவைக் கொண்டு என்னைப்பூசைபண்ணிக் கொடுத்தவையே மிகுந்த சந்தோஷமாக அங்கிகரிப்பேன் ஆகையால்கொடுக்கின்றது விரதம் நோறகிறது பொசிக்கிறது மற்று முள்ளவைகளைக்கொண்டு இவையெல்லாம் எனக்காகக்கொடுத்தா லென்னையே யடையலாம் அன்னியகெதிவாராது.—(எ-று.)

எப்பொருட்கனக்குமியாசேனைத் திருத்தலாலெனக்கியாரு*
மொப்பவரின்னியரின்று தாமெனவொருவரில்லை ..........*
இப்படியறியுமன்பர் பக்கலேயானுநிற்ப ..................*
னப்படியவருமென்பாலங்ஙனேயமர்ந்துநிற்பார் .....*

(இ-ள்.) எந்தப்பொருள்களுக்கும்; நான் சமமாயிருக்கிறதினாலே எனக்கு ஒப்பானவர்களும் பிரியமானவர்களும் விரோதமானவர்களும் யாமொருவருமில்லை இப்படியறியப்பட்ட அன்பரிடத்திலே நானும் நிற்பேன் அந்த அன்பர்களும் அப்படியேஎன்னிடத்தில்அமர்ந்து அங்கேநிற்பார்கள் வேறுபடார்க ளென்றவாறு. (௨௰)

ஊணையேமுதலாவென்பா லூக்கியணர்வோர்நாளு.*
நாணையேவிட்டுச்சீரை புரியினுமவர்கணல்லோ . . *
ரேணையேபுயத்தாயென்றுங் கேடிலாவின்பமல்லா... *
தாணையேபொருகேடில்லை யவர்களுக்கென்றும்.

( இ-ள். ) உண்பதுவேமுதல உள்ளவெல்லா மென்னிடமாகச்செலுத்தின வறிவுடையவர்கள் தினந்தினமும் லச்சையைவிட்டுப் பொல்லாங்குசெய்தாலும் அவர்கள் நல்லவர்களே யெக்காலு

னுங் கெடாதநிலையுடைய மகிமையும் அழகுமுள்ள சோலையுடை அருச்சுனா; அவர்களுக்கு என்றைக்குங் கேடில்லாத சுகமேயல்லாமல் ஆணைப்படிக்கு எங்கேயாகிலும் என்றைக்காகிலும் ஒருகேடுமில்லையென்றவாறு. * எனக்குச்செலுத்தாத மூடருக்கு என்றைக்கும் எங்கும் ஆணைப்படிக்குச்கேடுண்டென்பது அருத்தாபத்தி. (௨௧)

வணிகருமற்றைவேளாண் மாந்தருமகளிர்தாமும்......*
பணிவொடுமென்னைப்பேணிற் பற்றறுத்திடுவரென்றா*
லணிமுடியரசர்மேன்மை யந்தணரடைவராகிற்......*
றணிவரும்பிறவிதீரச் சாற்றவேண்டுவதுமுண்டோ..*

(இ-ள்.) மற்றவைசியருஞ் சூத்திரரும் பெண்டுகளுமிவர்களிவணக்கத்துடனும், அன்புடனும்; என்னையாசரித்தாற் கருமபந்தத்தையறுத்து மேலானகதியையடைவார்களென்றால் அழகியகிரீடந்தரித்த ராசாக்கள் எல்லாருக்கு மேலானசாதியுடைய பிராமணர்கள் இவர்கள் என்னையடைவாராகில் அவர்களுக்குயாகாதி மகாதானதிவிரதாதிமுதலான புண்ணியங்களினாலே அரிதானபிறவிதீருமென்பதற்குச் சொல்லவேண்டுவதுமுண்டோ இல்லை நிச்சயமாகப் பிறவிதீருமென்றவாறு. (௨௨)

மின்னையேயனையவாழ்வி னின்றனீவிருப்பினோடு....*
மென்னையேவணங்கியென்றுமென்னையேயிசைதியாகி*
லென்னையேயடைதியீதென் றியம்பினனிலங்குவாட்கட்
பின்னையோமுறுவலோடும் பேய்முலையுண்டவெம்மான்....*

(இ-ள்.) ஆகையாலருச்சுனா! மின்னையொப்பான அநித்தியவாழ்விலேயது நிலையென்று நின்ற நீயிதைமறந்து என்னிடத்திலாசையுடனும், பத்தியுடனும்; என்றைக்குமென்னையே பூசைபண்ணிவணங்கி என்னையேபரமகதியென்று உன்மனசுக்கு இசைந்திருந்தாயானால் என்னையேயடைவாய் இது நிச்சயமென்று சொன்னார். பிரகாசிக்கின்ற வாளையொப்பான கண்களையுள்ள மகாலட்சுமிதேவியின் நாயகன் அழகியபுன்சிரிப்புடனுங் கூடப்பூதனையென்னும், பெயராயுடைய பேயினுடைய முலையையுண்ட கருத்தனான ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்றவாறு. (௨௩)

ஒன்பதாவது-மாயாவிசார-அத்தியாயம்-முற்றும்.

ஆக அத்தியாயம் - ௯ - இ - கூடியசெய்யுள். (௨௱௪)



பத்தாவது.

# விபூதிவிஸ்தாரயோக அத்தியாயம்.

---

( அறுசீரடியாசிரியவிருத்தம். )

அரியவெனது நிலைமையை முன் பலவே சொன்னேனது கேட்டே *
பூரியமனனித்தளிகூர வொவ்வாநின்றவுனக்கதனை ........................ *
விரியமொழிவன் கேளென்று வேதத்தலைக்கேவிற்றிருக்குங் .......... *
கரியமுகிறன் செவ்வாயாற் காதல்கூறக்கட்டுரைப்பான் .............. *

(இ-ள்.) யாராகிலும் அறிய அரிதான என்னுடைய சத்தியமான உண்மையை முன் பிரமாணமாய்ச் சொன்னேன் அந்தப் பிரமாணத்தைக் கேட்டே யுனக்குச் சித்தானமனதிலே களிப்புச் சிறப்பாகச் சந்தோஷிப்பாநின்ற உனக்கு அந்தப் பிரமாணத்தைப் பிரத்தியட்சமாக விஸ்தாரமாகச் சொல்லுகிறேன் கேள் அருச்சுனனே யென்று; வேதச்சிரசிலே பிரமாந்திருக்கப்பட்ட கரியமேகத்தை யொப்பான திருமேனியையுடைய கிருஷ்ணசுவாமி தம்முடைய சிவந்த திருவாயினாலே அருச்சுனனுக்கு அன்புமிகுதியாகச் சொல்லுவார்.—எ-று. (க)

தேவரொடு முனிவரர்கள் சித்தர் வித்தியா தரர்கள் .......... *
யாவர்களுமறியாரென் பெருமையை முன் பழமையிருத் .... *
சாவதுவும் பிறப்புமில்லா வென்னையறியத் தகுவாரோ .......... *
பாவவினையறவிட்டுப் பரகதி யடைகிற்பார் ................ *

(இ-ள்.) தேவர்கள் அவர்களுடனே மகாமுனிகள் சித்தர் வித்தியாதரர் இவர்கள் முதல் எல்லாரும் என்னுடைய பெருமையை யறியார்கள். அது அவர்களுக்கெல்லாம் நான் ஆதியாய் அநாதியானதினாலே யாருமறியார்கள் ஜெனனமரணமுமில்லாத வென்னை யின்னதென்றறியத்தக்கவர்களாகிலவர்கள் பாவகருமங்களை யறுத்தக்கதாகவிட்டுப் பரகதியையடைய மாட்டுவார்களென்றவாறு. (௨)

புத்திபொறை தவஞானம் புகழ்பழிதீர்கொலைதெளிவு......*
சத்தியநற்சமைமைதவறி தவிர்தானஞ்சாவுபிறப்... ... ... ...*
பத்திகொடு நிறைவின்ப மிடரஞ்சலஞ்சாமை.................. *
யித்தனையுநீதோன்றுவதென் னிடைநின்றேயெனத்தெளிவாய்

(இ-ள்.) புத்தி பொறுமை தவசு ஞானம் கீர்த்தி அபகீர்த்தி சொல்லுகிறதற்கரியதெளிவு சத்தியம் நல்லசமைமைத யிந்திரிய நிக்கிரகமுதலான விரதம் தானஞ் சாவு பிறப்பு ஆசை கொடுமை நிறைவு சுகதுக்கம் பயப்படுதல் பயப்படாமை இத்தனையு மென்னிடத்தில் நின்றேயுண்டானவென்று தெளிவாயென்றவாறு. ❋ வேறொருவிடமுண்டென்று மயங்காதேயென்றருத்தாபத்தி. (௩)

(கலிவிருத்தம்.)

இனைத்துவிதித்த தவத்தெழு வோரும்............ ...*
அனைத்தையுநிற்ப நடப்பன வாக ...........................*
அனைத்துமனுக்கள் பன்னால்வருமற்றென் .... ........... *
னினைப்பிலுதித்தன ரென்பது நேர்வாய்...............*

(இ-ள்.) அநேகவிரச் சகலத்தையும் நிற்கிறது நடக்கிறதாகிய சராசரங்களைமனதிலே கூட்டங்கூட்டமாகச் சிருஷ்டித்த தவசையுடைய சத்தரிஷிகளும் இவைகளையரசாண்ட பதினாலு மனுக்களும் என்னுடைய நினைப்பிலே பிறந்தார்களென்று உன் மனதிலே திடமாகச்சம்மதிப்பா யருச்சுநா வென்றவாறு. (௪)

இப்பரிசென்னை யறிந்தவ ரென்பால்.........................*
வைப்பர்கள் சித்தமை மன்னுயிரோடு......... .........*
மப்பரிசேயறி வாரையு மங்கே ........................... *
யுய்ப்பருரைப்பர்க ளிப்பரு வப்பார்.................*

(இ-ள்.) இந்தப்படி சகலத்துக்குங்காரணமாகச்சகலமுமென்னிடத்திலே நானேவர்த்திக்கிறதாக என்னை நன்றாக அறிந்தவர்கள் தங்களுடைய சீவனோடுங்கூட மனதை என்னிடத்தில் வைப்பார்கள் அந்தப்படியே முன்னே அறிந்தபேரையும் அங்கே வைப்பார்கள் என்னையேபேசுவார்கள் ஆனந்த மடைவார்கள் சந்தோஷிப் பார்களென்றவாறு. (௫)

நிரந்தரமிப்பரி சென்னை நினைப்பார்க்... ... ... *
காந்ததைகெடுத்தெனை யாயு மனத்தைப்... ... ... *
புரந்துகொடுத்தவர் தேர்பொரு ளாயே... ... *
வரங்களுமுற்ற வளித்தவ ரத்தால்... ... *

(இ-ள்.) இந்தப்படி நிரந்தரம் என்னை நினைக்கிறவர்களுக்கு தீதுன்பத்தைப்போக்கிக் காத்து என்னை விசாரிக்கிற மனதைக்கொடுத்து அந்தமனதாலே விசாரிக்கிற வஸ்துவாகியே பிரசன்னமாகவந்து முன்கொடுத்தது மல்லாமற் பின்புவரங்களும் குறையாமற்கொடுத்து அந்தவரத்தினாலே யென்றவாறு. (௬)

மற்றவர்நெஞ்சின் மயக்கிரு ளெல்லா... ... *
முற்றறிஞான விளக்கொளி யாலே ... ... *
பற்றறவிப்ப னெனப்பழ மொன்றான் ... ... *
கொற்றவன்மற்றிவை கூற வலித்தான்... ... *

(இ-ள்.) அந்தவரத்தினாலே யுற்றறியப்பட்ட ஞான மாகிய விளக்கொளியாலே அவர்களுடைய மனதிலிருந்து மயக்கப்பட்ட அஞ்ஞானமாகியவிருளெல்லாம் பற்றறச்செய்வே னென்று சொல்லி அந்த அநாதியான கிருஷ்ணசுவாமி முன்னே அருச்சுனனுக்கியராசன் இந்தவசனஞ்சொல்ல உத்தியோகப்பட்டானென்றவாறு. ❊ மற்றவர்களென்றது என்னைத்தவிர அவர்களென்பது மற்றிவை யென்றது முன்சொன்னதைத்தவிரவென்றேயிதுவென்பது. (௭)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பேதமுடைய பிறப்பிறப்புப் பிறழாநின்ற பெருஞ்செல்வ... ... *
ஆதித்தேவன் பரப்பிரம மழிவிலாதா ரணங்க ... ... ... *
ளோதவரியவுத்தமனின் செல்லாமுயிர்ப்பா லெனவுன்னை ... ... *
நீதிமுனிவருரைத்ததெலா நீயேயருளிச் செய்தனையால்... ... *

(இ-ள்.) எண்பத்துநாலு நூறாயிரம் அச்சுப் பேதமுடைய பிறப்புச்சாவு இவைகளாலே தவறுதபூரணம் பெரியசெல்வம் ஆதி தேவன் பரப்பிரமம் அநித்தியமில்லாத நித்தியன வேதங்க ளோதவரிதான உத்தமன் இந்தப்பிரவஞ்சமெல்லாம் பெற்றவன் என்று உன்னை நீதியுள்ள மகாரிஷிகள் முன் எனக்குச் சொன்னதெல்லாம் அப்படிக்

கொத்த நீதியேயிப்போது எனக்கு அருளிச்செய்தாயென்றவாறு.
எல்லாப்பொருட்குந் தன்வித்தே யெல்லாப்பொருட்குமீ
சனே - நல்லலார்புகழ்ந்தேவருக்கு மூலகங்களுக்கு நா
யகனே - யல்லாவறிவாரியாரொன்னை யானேயறிவனென
வருளாற்-சொல்லாடினவப் பொருளெல்லா மெய்யே
யானுந்துணிந்தொறுத்தேன்..............................*

(இ-ள்.) அளவற்றபேதங்களுள்ள சகலவஸ்த்துக்களும் அந்தந்தப் பேதங்களாக முளைக்கிறதான ஒருவிதையே சகல வஸ்துக்களுக்கும் சுவாமியே பெரியோர்கள் புகழப்பட்டவனே தேவர் களுக்கும் லோகங்களுக்கும் கர்த்தனே உன்னையல்லாமலுன்னை யறிகிறவர்களாரியாருமில்லை என்னை நானேயறிவனென்று கிருபையினாலேசொல்லிக்கொண்டு வந்த அந்த அருத்தமெல்லாஞ் சத்தியமே அல்லாமற்சந்தேகமில்லை ஒன்று மறியாதநானும் நீயேயெல்லா மென்றுநிச்சயமாகத் தெளிந்து உன்னை யல்லாத மற்ற விகற்பமெல்லாம் விட்டேனென்றவாறு. * தணிவித்தாவது எந்த வஸ்து விதையானாலும் அந்தவிதை அந்தவஸ்துவாக முளைக்கிறதல்லாமல் ஒருவஸ்த்துவினுடையவிதை வேறொருவஸ்துவாகமுளையாது ஒருவஸ்துவிதைஅனேகம்வஸ்துவாகமுளையாது அந்தந்தவிதை யந்தந்த வஸ்துவாக வருகிறதாகையால் நீ அனேகபேதவஸ்துவாக முளைக்கிற ஒரேவிதை யென்றது எல்லாப்பொருளுக்கு மீசனாவது சகலதத்துவங்களுக்குச்சாமி யென்றது.— (௯)

(கொச்சகக்கலிப்பா.)

மெய்வகையிவ்வுலகிடை நீவேறு வேறாய்நிற்ப.........*
தெவ்வகையெவ்வுருச் சார்ந்தெனவேது மறிகிலே...*
னவ்வகையேயொரு பொருளுமொழியாம லடியேனுக்*
குய்வகைநெறியாக வுரைதருளென்றேயுரைப்பான்... *

(இ-ள்.) இந்தப்பிரவஞ்சத்தி னிடத்தில்மெய்யாகவேறுவேறானபேதமாக நீ நிற்கிறதெந்தவிதம் எந்தரூபமடைந் தது என்று நான் ஒன்றுமறியேன் நீ யெந்தரூபமானாயோ எந்தெந்தப் பேதவஸ்துவாக நின்றாயோ அந்தப்படியேஒருவஸ்துவும்விடாமல் அடியேனுக்குப்பிழைக்கிறவிதமான மார்க்கமாகத் திருவாய் மலர்ந் தருள வேண்டுமென்று சொல்லுவானென்றவாறு. (௰)

பேறித்திடுமிப்பொருட்கெல்லாம் பிறப்புநிலைகேடாவேனு...... *
னாதித்தியரில்விஷ்ணுநான் மருத்தேவரில்மரீசுநான்.............. *
சோதிக்கதிரில்சவியன்சு வென்றுசொல்லப்படுவேனான்........... *

(இ-ள்.) என்னுடைய ஐசுவரியத்தைச்சொல்லில் அளவற்ற அநேகபேதங்களாகப் பெருக்கப்பட்ட சகலபூதசீவராசிகளுக்கெல்லாம் இருதயத்திலிருக்கின்றவன் நான் அநேகபேதமாகப்பட்ட இத்தச் சீவன்களுக்கெல்லாம்- பிறப்பும், நிலைமையும், நாசமுமாகின்றவனு மாதித்தரில் விஷ்ணுதான்-வாய்வு தேவரில்மரீசுதான்- பிரகாசமுள்ள சோதிகளிற் சூரியனென்று சொல்லப்பட்டவனுமென்றவாறு. ௨௧

(கலிவிருத்தம்.)

சந்திரனுநாண்மீனிற் சாமநானன்மறையி ...... *
னிந்திரனுந்தேவர்களிற் றிரியங்களின்மனநா ... *
னுந்திரமாமுருவுகளிற்சேதனநானுருத்திரரின் *
மந்திரமாஞ்சங்கரனு னியக்கரில்வைச்சிரவனான் *

(இ-ள்.) நக்ஷத்திரங்களிற் சந்திரனை நாலுவேதங்களிற்சாமவேதநான்தேவர்களிலிந்திரனை இந்திரியங்களில் மனநான்பிறந்திருந்து சுழலப்பட்டரூபங்களில் அறிவுநான் ருத்திரரில்மந்திரமான சங்கரனும் இயக்கரிற் குபேரனுமென்றவாறு. (௨௨)

மலைகளின்மாமேருநான்வசுக்களிற்பாவகனான்போர்த் *
தலைவர்களிலறுமுகனான் சலநிலையிற்சாகரனு.......... *
னிலையிலாயாகத்திற்செய்யாகமாவேனு ............ *
னிலையுடையவெனுமவற்றி லிமவானுநிற்பேனான்... *

(இ-ள்.) மலைகளில் மகாமேருநான் வசுக்களிலே பாவகனுநான் சேனாபதிகளிற் சுப்பிரமணியனுன் தண்ணீர் நிற்கிறவிடங்களிற் சமுத்திரநான் அழிவில்லாத யாகத்திற்செய் யாகமாகின்றவனுன் நிலையாய் நிற்கிற தாபரங்களிலும் வந்தமாகநிற்கின்றவனான்.—எ-று.

பெருமுனியிற்பிருகுநான் புரோகிதரிற்பிரகதனான்..... *
மருவியவக்காந்தோம்நான் மரங்களிலச்சுவத்தநான். *
பொருவரியநாரதனுன் புத்தேவனமாமுனிவரிற்.... *
திருவியல்கந்திருவர்களிற் சித்திரத்தேரவனுநான்.... *

(இ-ள்.) மகாரிஷிகளிற் பிருகுமுனிதான் புரோகிதரிற்பிரகஸ்பதிதான் சகலத்திலுங்கலந்த வசனங்களில்- ஓம்- நான் மரங்களில் அரசுதான் தேவமகாரிஷிகளில் ஒப்பில்லாதநாரதமுனிதான் அழகிசைசந்தகந்தருவர்களிற் சித்திரரதனுன் என்றவாறு. (௰௬)

சித்தர்களிற்கபிலமுனி திரைகடலிலேசெனித்த........ *
யுத்தமமாங்குதிரையினை யானென்றேயுணர்கண்டா .*
யத்தமுடைவிலங்குகளின் யானையிராவதமாவேன்......*
வித்தகமானிடப்பிறப்பில் வேல்வேந்தராவேனுன், ... *

(இ-ள்.) சித்தர்களில்கபிலமுனிநான் குதிரைகளில்- அலையுடைய திருப்பாற்கடலிலேபிறந்த உத்தமமான உச்சை சிறவமென்றுபேய்ரையுடைய குதிரைநானென்றேயறி கண்டாயருச்சுனகையையுடைய மிருகமானயானைகளில் அயிராவத மாகின்றவனென்றுமையுள்ள மனிதப்பிறப்பிலே வேலையுடைய ராசாவாகிறவனுனென்றவாறு.— (௰௭)

(கலிவிருத்தம்,)

படைகளில்வச்சிரம் பாம்பில்வாசுகி................. *
நடைதருமனந்த ஞகர்தங்களிற் ................. ....... *
கொடைபயில்சுரபிகோ குலத்திற்கூறிய.........*
வடைவொடுமிவையெலாம் யானென்றேயறி ... .*

(இ-ள்.)ஆயுதங்களில் வச்சிரம்நான் பாம்பில் வாசுகிநான் நாகங்களிலே நடக்கப்பட்ட ஆதிசேஷன்நான் பசுக்களிற் கொடுக்கன்றகொடைபொருந்திய காமதேனுநான் என்றேயறியருச்சுனு. எ-று கூறிய வடை வோடும் இவையெல்லாம் யானென்ற வற்றிறகுவாயேயுள்ளேகாண்க. (௰௮)

வருணனுமியமனு மலைவிலாளியும்...................... *
பெருமைசெய்யசுரரிற் பிரகலாதனு... ....... .......,*
மிருமையிலெண்ணுவா ரெண்ணும்யானெனச்...... ... *
செருமவித்தோளிஞய் தெளியத்தேறுவாய் ......... ....... *

(இ-ள்.) சலவாசிகளில் வருணனும், தெண்டிக்கிற வர்களில் யமனும், சொல்லுகின்றவர்களில் மகாமமருலை வில்லாகவுடையவனும், உலகத்தார் பெருமைசெய்யப்பட்ட அசுரர்களில்பிரகலா

னும் இம்மைமறுமையிரண்டினும் எண்ணுகின்றவர்களுடைய இல்ச்சமும் நாமென்று தெளியத்தக்கதாக நன்றாகத் தேறுவாய் சண்டையிருந்து செய்யப்பட்ட தோளையுடைய அருச்சுனனே யென்றவாறு.

போராவருகருடன் யான் புள்ளினமாக்களில்.... ........*
கிராவருமடங்கலுன் வாயுவேகநா .... ... ............ .....*
ஙிராமனுனெறிபடை வீரர்தங்களிற்.... ......... .....*
காராமுநான் மீனகளியாற்றிற் கங்கைநான் ..... ..... ... ...*

(இ-ள்.) பட்சிகளிலொப்பிலாத கருடனான மிருகங்களிற் கிட்டப்போசக்கூடாத சிங்கம்தான் வேகத்தில் வாயுவேகம்தான் விசேப்பட்ட ஆயுதவீரர்களில் ரகுராமனுன் மீன்களில் முதலை நான் நதிகளிலே கங்காநதிநானென்றவாறு. (௨௰)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மிக்கசொற்றொகையனைத்து நானரியவித்தையிற்பிரமவித்தைநா..*
னக்கரங்களிலகாரநானழிவில்காலநானதுவுமன்றியே.... ... .......*
தக்கதொத்துவசபாசநானிருவினைப்பயன்கடருவோனுநா... ..... *
னுக்கமன்னுயிர்களைக்கொல்வோனுமவையுற்பவஞ்செய்திடுவோனு
நான் .............. ........... .............. ........................*

(இ-ள்.) மிகுந்தசொல்லுடைய தொகையெல்லாநான் வித்தையிற்பிரமவித்தைநான் அட்சரங்களில் அகாரம்நான் காலங்களில் அழிவில்லாதகாலமான அட்சயகாலம்நான் அதுவுமல்லாமல் மயக்கங்களில் தகுமான தொந்தமுள்ள வசப்பட்டபாசம்நான் புண்ணியபாவத்தினுடைய பலன்களை தருகின்றவனும் நான் நிலைமையானசீவன்களை நிலைமைகெடக் கொல்லுகிறவனும் அந்தச் சீவர்களைப் பிறக்கச் செய்கின்றவனும் நானென்றவாறு. (௨௧)

பெண்களிற்புகழ் திருச்சொன்மேதைபொறை திண்மைபேசு
மறமென்னவே, யெண்பகுத்தவெழு வோருநாளிருதுவாயில்
வந்தவிளவேனிலியா, னணபநற்பெரிய சாம்பநானுரிய சாம
மேழினுநலத்தினுன, மணகளிற்பெரிய திங்களிற்புகழ நின்ற
மார்கழியுமற்றுநான்..............................*

(இ-ள்.) பெண்களிலே கீர்த்தி லட்சுமி வாக்கு தெளிவுபொறுமை திட்சித்தம் எல்லாருஞ்சொல்லப்பட்ட தருமம் இப்படியென்றனன்

(இ-ள்.) அருச்சுனன் சொல்லுவது சுழிகைக் கொண்டையிலமர்ந்திருந்த திருத்துழாய்மாலைமுடியை யுடையவரே சொல்லுமனத்துந்தொடர எட்டாதவரே உருளமைந்த சகடாசுரனைச்சாகவுதைத்தவரே சகலஜீவன்களுக்கெல்லாம் முள்ளாக விருக்கிற ஜீவனே அஞ்ஞானமென்னு மிருளையுடைய பிறவியிலேகிடந்துழைத்துக்கொள்ளப்பட்ட என்னிடத்திற் கிருபைசெய் தருளி நீர் உபதேசித்தகிருபைநிறைந்த அமிர்தத்தை என்னுடைய காதுகளாகியவாய்நிறையக்குடித்துக்கிலேசந்தீர்ந்தே னென்றவாறு. (க)

தெரியாவகைநீ யேயெங்கு மாகிநின்றதிருக்கோல...... ...*
மரியாயெய்யே யடியேற்குக் காணலாமோவென்வன்பாற் *
பரியாநின்றசிந்தையொடு பார்த்தன்வினவப்பழமறைதேர்- *
கரியானவனுக் கப்பரிசே காட்டவேண்டிக்கட்டுரைப்பான் *

(இ-ள்.) கிடைத்தற்கரிதான சுவாமியாருக்குந் தெரியாதபடி யெங்கும்பரிபூரணமாகி நீயேநின்றதிருக்கோலத்தை மெய்யாக அடியேனுக்குப்பார்க்கலாமோவென்று அன்பினாலே யுருகப்பட்ட மனதுடனே அருச்சுனன் கேட்க அவனுக்கு அந்தப்படியே காட்டவேண்டி பழையவேதங்கள் தேடப்பட்ட பிறவஞ்சசாக்ஷியானகிருஷ்ணசுவாமிசொல்லுவா ரென்றவாறு. (உ)

(கலிவிருத்தம்.)

எண்ணினியற்கைய தெண்ணி னிறைந்தது...... ...... *
பண்ணியொருத்தர் படைத்தறி யாதது...... *
விண்ணினியற்கை சுருங்க விரிந்தது...... ...... *
கண்ணினளப்பரி தாயது காணாய்...... *

(இ-ள்.) இலக்கத்தினுடைய சுபாவத்தினாலே எண்ணிலக்கை மிறந்து அப்பாற்பட்டதுஒருத்தர்பண்ணிப்படைத்தறியாததுபிருதிவி யப்புத்தேயு வாய்வுவென்ற நாலுபூதங்களையடக்கின ஆகாயத்தினுடைய சுபாவமான விஸ்தாரமானது கொஞ்சமாய்ச்சுருங்கத்தகதாகவிஸ்தாரமானது கண்ணாலேபார்த்து அளவிட அரிதானதுப்படிக்கொத்த திவ்வியசொரூபத்தைப் பார்ப்பாயென்றவாறு. (ங)

மருத்துவர் சூரிய ரட்டவசுக்க...... *
ளுருத்திரரொன்னிடை யேயுள ரியாரு...... ...... *

மருத்திசெய்யற்புத மாயவ னேகங் .......................... *
கருத்திறவென்னிடை யேயுள் காணாய் .......................... *

(இ-ள்.) அசுவனி தேவர்கள் சூரியரஷ்ட வசுக்களுருத்திர ரிவர்கள் முதலான சரசீவன்கள் என்னிடத்தி லிருக்கிறார்கள் எல்லாரும் மன தபொருந்த அன்புசெய்யப்பட்ட ஆச்சரியமான அனேக மாகிய அசரசீவன்கள் என்னிடத்திலே யிருக்கின்றனகண்டாயருச்சுனா வெ ன்றவாறு. (௪)

என்றருளிச்செய் தவன்க ணிரண்டு .......................... *
நன்றறிகிற்கென ஞான மளித்திட் .......................... *
டன்றவனுக்கருள் செய்வகை யாயே .......................... *
நின்றவருக்கறி யாவகை நின்றான் .......................... *

(இ-ள்.) இப்படிச்சராசரங்களு மென்னிடத்திலேயிருக்கின் றனயான் அருளிச்செய்த அந்த அருச்சுனனுடைய கண்க ளிரண்டும் நன்றாகப்பார்த்தறிய மாட்டா னென்றும் ஞானக்கண்களைக்கொடுத் து அப்போது அந்த அருச்சுனனுக்கு அருளிச்செய்த படியே சொ ரூபமாகி அருச்சுனனல்லாமல் நின்ற பாண்டவர்களெவராயிருக்கி றவர்களுக்கு மறியாத படிக்குநின்றானென்றவாறு. ❋ அன்றருளிச் செய்வகையென்றதனாலே சாஸ்திரபுராணங்களினால் முன் சொன்ன திவ்வியமங்களரூபமல்லாமல் அப்போதுசொன்ன பிரம சொரூப மாகநின்றானெனபது இன்னமும் அனேகவிதங்களில் அன் றருளி ச்செய்தவிதப்படி என்றுமாம். (௫)

(கலிவிருத்தம்.)

பருந்தினிதுரைப்பதென வனப்படிவ மேலாய் .......................... *
விரிந்துலகமெங்கணும் விளங்கொளியி னாலே .......................... *
யெரிந்தனதிசைப்புறம தின்னவென வேதுந் .......................... *
தெரிந்திலர்கள்வானவர்க டானவர் திகைத்தார் .......................... *

(இ-ள்.) கேளுந் திருதராஷ்டித மகாராசாவே அந்தவிசுவரூப த்தைப்பரிந்து நன்றாகச் சொல்லுவதென்ன உலகமெங்கு மவனு டைய சொரூபமேயாய்ப் பரந்தது அந்தச்சொரூபம் விளங்கப் பட் டசோதியினாலேபத்துத்திக்குமிருந்து பிரகாசித்தது அந்தப்பிரகா சத்தைப் பார்க்கமாட்டாமற் றேவர்களானவர்கள் திகைத்து அந்த

ச்சோதியது இன்னதென்று ஒன்றுந்தெரியாமல் வெளிச்சப் பட்டு நின்றார்களென்றவாறு. ✲ தேவர்கள் திகைத்துந்திக்குகளைச் சோதிக்கக் கொண்டதுஞ் சஞ்செயனுக்குத்தெரிந்தது வியாசமகாமுனி வரத்தினாலேயும் அருச்சுனனுக்குத்தெரிந்தது கிருஷ்ணசுவாமி கொடுத்ததிவ்விய திஷ்டியினாலுமென்றது அருத்தாபத்தி வந்தது (௬)

(கலிவிருத்தம்.)

அங்குமால்கொள்கோலமிங் களர்த்துகூற வாகுமோ…… …. ✲
கொங்குண்மாலை யாண்டசாந்து கொண்டகோலமேவியே … ✲
யெங்குமாகியெல்லையின்றி யெண்ணில்கோடி பலகதிர்… … ✲
மங்குல்வானில்வந்துதித்த தொக்குமற்றதன்கணே……. …. ✲

(இ-ள்.) கேளுந்திருதராட்டிரமகாராசாவே அந்தக்குருபூமியிலே கிருஷ்ணசுவாமி கொண்ட விசுவரூபத்தை யிங்கேயளவிட்டுச் சொல்லலாகுமோ ஆகாது பூந்தாதுக்கள் நிறைந்ததிவ்வியமாலை பீதாம்பரம திவ்வியசந்தனமிவைகள் தரித்துக் கொண்டசொரூபத்தைக் கூடியெங்குந்தானாகி யிப்படியென்று மட்டில்லாமல் அளவில்லாதகோடி அனேகசூரியர்கள் மேகங்கள் சஞ்சரிக்கப்பட்ட ஆகாயத்தில்வந்து உதயமானதையொப்பான சோதியுள்ளதாகும் அந்தச்சொரூபத்தினிடத்தில் என்றவாறு. (௭)

(கலிவிருத்தம்.)

எயவகைதாள்களோடு தோள்களு மனேகரு……… ✲
சாய்பெறவணிந்தவணி தானுமனேகம் ……. …. ✲
வாய்களுமனேகமொளிர்வாண்முக மனேக …. ……. ✲
மாயுதமனேகமெழு மற்புத மனேகம்……. …. …. ✲

(இ-ள்.) அந்தவிசுவரூபத்தினிடத்தி லிசைந்தபடி அனேகந் திருவடிகள் அதனுடனே தோள்களுமனேகம் சாயைபெறமுன்னே தரித்ததிவ்வியாபரணங்களுமனேகந் திருவாய்களுமனேகம் பிரகாசிக்கப்பட்ட திருமுக மனேகம் ஆயுதமனேகம் எழும்புகிற ஆச்சரியமனேகமென்றவாறு. (௮)

அவ்வகையமாயனமர் கோலமதனுள்ளே …. … … …. ✲
யெவ்வகையவாயபொருள் யாவுமெதிர்காணு ………. ✲
வுய்வகையறியினனுவகைகூரச் … …. ……… ✲
செய்வதறியாவிசைய னிவ்வகைசெய் தானல் …. ….. ✲

(இ-ள்.) கிருஷ்ணசுவாமி யமர்ந்த சொரூபமப்படிக்கொத்தது கேளுந் திருதராட்டிர மகாராசாவே அந்தச் சொரூபத்துக்குள்ளே எந் தவிதங்களாகிய சகலபொருள்களும் தெரிரக்கண்டு தப்பிப்பிழைக்கின்ற விதத்தையுடையவனுமென்று சந்தோஷ மிகுதியாக அதனாலே செய்வதொன்று மறியாத அருச்சுனனிந்தப் படிசெய்தானென் றவாறு.— (௯)

தொழும்புகழுமெய்ம்மயிர் துளங்குமுயிர்சோரு...... *
மெழும்புவனமெழுவனன்றியெதிர்காணுன் ...... ... *
விழுங்குபலுவானென்ன விருப்புமெய்ம்மயங்கா..... .... ... *
அழும்பரியுமென்செய்தன னென்றறியலாமால்...... *

(இ-ள்,) தெண்டனிடுவான் தோத்திரம்பண்ணுவான் சரீரத் துமயிர்புளகிதமாகி நடுங்குவான் ஜீவன் சோருவான் எழும்புவான் சகலபிரபஞ்சமும் அந்தக்கருஷ்ணசுவாமியையல்லாமல் வேறொன் றையுமெதிராகக்காணான் அந்தச் சொரூபத்தை விழுங்கப்படுகின்ற வனென்னத்தக்கதாக ஆசைப்படுவான் சரீரந்தெரியாமல் மயங்கி அழுவான் இரங்குவான் இவைகளிலென்ன செய்தானென்றறியாமல் எல்லாஞ்செய்தானென் றவாறு. (௰)

அஞ்சிமெய்நடுங்கமிக வன்புறுமனத்தே............. *
நெஞ்சுமறிவுங்குழைய நின்றுதொழுநேரோ ............ *
யுஞ்சுகனோகண்டனனெனவுவகைகூரும்............... *
வெஞ்சுடர்கொலென்றனனெவயர்க்கும்வெயரெய்தான்.

(இ-ள்.) பயந்து வெயர்வையடைந்த அருச்சுனன் இந்தச் சொரூபத்துக்குப் பயந்துசரீரம் நடுங்கியிருந்த அன்பையமனநிலை யடைவான் இருதயமும் அறிவுங்குழைந்துருக எதிரேநின்று கைகூப்புவான் பிறவிக்கடலுக்குத் தப்பிப்பிழைத்துச் சுகங்கண்டேனென் றுசந்தோஷமிகுதியாவான். உஷ்ணமுள்ள சோதியோ வென்றுஞ் சரீரம் வியர்வை யுண்டாகுமென் றவாறு. (௰௧)

மண்ணுறவணங்குமுயிர் சுச்செனநினைக்குங் ...*
கண்ணுமனமுங்களைய நின்றுகைமுழத்தே... *
யெண்ணுமுலகங்களையு மியாவரையுமணுட்...*
பண்ணுமவன்முன்புசில நின்றுபகர்வுற்றான்.... *

(இ-ள்.) தன்னுடையசரீரம் பூமியிலேபடத் தெண்டனிடுவான் மயிர்க்குச்செறிந்து நிரையகிறக்கப் புளகிப்பான்களாயாதகண்ணுங்களைந்து ஆனந்தக்கண்ணீரோடக் களையாதமனசுங் களைந்துருக்நின்று கைகூப்பியெண்ணப்பட்ட சகலபிராணிசத்தையுஞ் சகலசிராசிகளையும் பூர்வகாலத்திலே சிருஷ்டிக்கப்பட்ட அந்தக்கிருஷ்ணசுவாமி முன்னேநின்றுசிலவசனஞ்சொல்லுவானென்றவாறு.௰௨

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தேவரும்வணங்குந்தேவ னின்றிருக்கோலத்துள்ளே ....;....*
யாவருமெல்லைகாணாப் பொருளெல்லாமிசையக்கண்டேன் *
மூவரின்முதற்புத்தேளை முனிவரரோடுங்கண்டேன்.........*
மேவருநாகங்கண்டேன் விண்ணவர்குழாமுங்கண்டேன்.. .*

(இ-ள்.) மனிதர் வணங்கப்பட்ட தேவர்களும் உம்முடைய அழகியசொரூபத்துக்குள்ளேஎல்லாரும்எல்லைகாணாதபொருள்களெல்லாம் இசையக்கண்டேன் திரிமூர்த்திகளில் முதலானதெய்வத்தை மகாமுனிகளுடனுங்கண்டேன் சேர அரிதான பாதாளத்துப்பாம்புகளைக்கண்டேன் தேவலோகத்துத் தேவர்களுடைய கூட்டங்களையுங்கண்டேனென்றவாறு. (௰௩)

கண்களும்வயிறுந்தோளு முகங்களுங்கருதிநோக்கி...*
லெண்பலவுடையவாய வுருவுகளனேகங்கண்டேன்....*
றண்கதிர்முடியுந்தண்டுஞ் சக்கரப்படையுமேந்தி... *
யொண்கதிரனலோடொன்றாயனைய நின்னுருவினுள்ளே.

(இ-ள்.) குளிர்ந்த பிரகாசமுடைய கிரீடமுந்தெண்டாயுதமுஞ் சக்கராயுதமுந்தாங்கி அழகியசூரியர் அக்கினிகளுடனே யொன்றாய்க் கலந்ததையொப்பான உம்முடைய சொரூபத்தினுள்ளே கண்களும் வயிறுகளுந் தோள்களும் முகங்களும் விசாரித்துப்பார்க்கிலிலக்கம் அனேகமுண்டானதாகிய ரூபங்களனேகங்கண்டேனென்றவாறு.— (௰௪)

(கலிவிருத்தம்.)

இந்தவுருவெந்தவுரு வென்றறிகிலேனு........... *
னந்தமறியேனடிவு மாதியுமனைத்து...............*

நந்தலறியாததனை நான்மறையுநாடித் ……. *
தந்தபொருளாயதனை மாயைதருசார்வை…… *

(இ-ள்.) இந்தச்சொரூபத்தை யெந்தச் சொரூபமென் றறிய மாட்டேன் ஆதியும் நடுவு மந்தமு மெல்லாமறியேன் நாசத்தையறி யாததை நாலுவேதமுந்தேடி தரப்பட்ட வேதாந்தப்பொருளாகிய தை மாயையைத்தரப்பட்ட சார்வானதையென்றவாறு. (௰௫)

என்றுமுனதாயதை யியற்றருமமெல்லா……*
நின்றபிறழாவகை நிறுத்துநெறிவாழ்வைச்…*
சென்றுகுறையாததனை யென்பழையசேர்வை…*
கன்றுதொடராபரிசு நின்றனெதிர்கண்டேன்… *

(இ-ள்.) என்றைக்குமிருக்கிறதாகியதையியல்பானதருமமெல் லாந்தப்பாதபடிக்கு நின்றுநிறுத்தப்பட்ட தருமமார்க்கமானசெ ல்வத்தைக்காலஞ்சென்றுகுறையாதநிறைவை இப்படிக்கொத்தசொ ரூபத்தை நான்சேவிக்கப்பட்ட வென்னுடையபழைய சேர்வை யைக் கன்றைத்தொடர்ந்த பசுவைப்போல நீ யென்னைத்தொடருகி ன்றதையுமுடைய முன்னேகண்டேனென்றவாறு. ❀ இந்தவுரு வென்றபாட்டு- மென்றுமுளதென்றபாட்டும், ஒருதொடர்பு. (௰௬)

வலந்தருநிறத்தொடு வருங்கதிரிரண்டே……* 
யலர்ந்தெழவிழிப்பதையடுங்கனநெருப்பை……*
மலர்ந்தெழுமுகத்ததை மயங்கவுலகெங்கும் ……*
கலந்துசுடருற்றதை வியந்தனெதிர்கண்டேன் ……*

(இ-ள்.) பாராக்கிரமத்தையுடைய திருமார்புடன் உலகத்தில் வரப்பட்ட சூரியர்சந்திரர் பரந்தெழும்ப விழிக்கின்ற கண்களாற்சு டப்பட்ட உஷ்ணத்தையுடைய அக்கினியைப் பரந்தெழும்புகிறதிரு முகத்தையுடையதை வெளிச்சப்பட்டுப் பிரவஞ்சமெங்குந்தெரியா மல்மயக்கந்தந்து சோதியெரிகிறதை யிப்படிக்கொத்த சொரூபத் தையெதிரேகண்டேன் அதிசெயித்தே யென்றவாறு. ❀ திருமார்பு டனே திருக்கண்ணைத் திருமுகத்துச்சோதியைக்கண்டேனென்பது.

நிலத்தினொடுவானுறநிமிர்ந்துதிசைநேர்போய்.*
விலக்கமறநீயுனது மேனியைவிரித்தா……… *

லலக்கணடையாதவர்களாரடையவையா...... *
கலக்கமுறுகின்றவுலகங்களிவைகாணாய்...... .. *

(இ-ள்.) பூமியினுடனே ஆகாயமெங்கும்நிறைந்து திக்குகளி லேசெல்லவடாய்ப்போய் விலக்கப்பட்ட இடமில்லாமல் உம்முடை ய திருமேனியை நீவிரித்தால் துன்பமடையாதவர்களார் ஐயா எல்லா ருந்துன்ப படைந்தவர்களே அதினாலேதிரிலோகங்களும் கலக்கபடு கின்றது இதைப்பாருமென்றவாறு. (௰௯)

வணங்கியிமையோர்களொடு மாதவர்வழுத்திக்.... .... *
கணங்கொளவியந்துபுகழ் சித்தரதுகண்டே... ..... .. *
ணங்கவுயிர்தானவர்கள் கந்திருவருள்ளோ.............*
ரிணங்கியினதென்றறிகிலாமையெதிர்கண்டேன் .... .... *

(இ-ள்.) தேவர்க்களுடனே பெரியசமுனிகள் உம்மைவண ங்கவேண்டித்தோத்திரம் பண்ணிக்கொண்டு கூட்டங்கூட ஆதிசெயி த்துத்தோத்திரம்பண்ணுகிறசித்தர்கள் ஒன்றுந்தெரியாமல் மயங்கி ப்பெருமூச்சுவிடுகிற அசுரர்கள் கந்தருவர்கள் முதலாயுள்ளவர்கள் கூடி யின்னதென்றறியமாட்டாதவர்களை யெதிரேகண்டேன்; எ-று.

வாணடையவிம்மிவருணம்பலவுடைத்தாய்... *
பேயநடையவாய்பிறைபோலெயிறுபேழ்வாய் *
தானுடையவாய்மனமுகம்பலதழைக்கும் ...... *
யானடையலாம்வகையதன்றியுருவெந்தாய் ....*

(இ-ள்.) ஆகாயமெல்லாம் நெருங்கிநிறைந்து அனேகம்வர்ண ங்களையுடையதாய்ப் பேயினுடையசுபாவம் போலவாகிய பிறையி ன்றொத்த கோரைப்பல்லுகளும் பெரியஆழமுள்ள வாய்களும்தன க்குடையதான அனேகம்வாய்களு மனேகமனசுகளும் அனேகமுக ங்களும் கோரமையாகவளருகின்ற அந்தச்சொரூபம்நான் சேரலா ம்படியான தல்லசுவாமியென்றவாறு, (௨௰)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தஞ்சமிவ்வுலகுக்கெல்லா மாயநின் றன்மைகண்டே........ ... *
ஞ்சனனென் றமாய வுருவுறக்காணக்காண...... .........*

நெஞ்சமு நடுங்கிநிற்க நிலையிலென் நினைசயுங் காணே........*
னஞ்சலென் றருள்வேண்டு மகிலமுமாய வெந்தாய்.........*

(இ-ள்.) சகலமுநீயாகிய சுவாமி இந்தப்பிரபஞ்சத்துக்கெல்லாமாதாரமாய் நின்ற சுபாவத்தைக்கண்டேன் பிழைத்தேனென்றுமாயாதேகத்திலுள்ள மனதிலே தங்கத்தக்கதாகப் பார்க்கப்பார்க்க மனது நடுங்குகின்றது நிற்கநிலையில்லை ஓட ஒருதிக்கையுங்காணேன் ஆகையாலே பயப்படாதே யென்றருளிச்செய்ய வேண்டுமென்றவாறு. — (௨௧)

நூற்றுவர்தாமு நீதங்கள் சேனையுமவர்கட் காகி .........*
யேற்றெதிராசர்தாமுமென்படைதானுமுந்தன்.........*
கூற்றுறழெயிற்றிற்பட்டுக் குறையுடலாக நின்றன் .......*
காற்றுறு தீயினன்ன முகங்களில்விழக் கண்டேன்.........*

(இ-ள்.) கௌரவர்கள் நூறுபேரும் அவர்கள்சேனையும் அவர்கள் நடத்தி யெதிராகநின்று எதிர்த்தராசாக்களும் எங்கள் சேனையுமும்முடைய யமனையொப்பான தந்தங்களிலே பட்டு நறுக்குண்டு குறையுடலாகிற தற்குக் காற்றிலிருக்கிற அக்கினியை யொப்பானவுமும்முடைய முகங்களிலே விழக்கண்டேனென்றவாறு. ❁ அவர் கட்காவேற்றெதிராசரென்று பாடமோதில் அவர்களுக்காக வெதிராக வெதிராகவெதிர்த்த அரசரொன்பதும் என்படையென்றதனாலெங்களைத்தவிரவென்றகருத்தாபத்தி. (௨௨)

ஓதருநதிகளெல்லா மொண்கட லடைந்தாற்போலப்..........*
போதரும்பொருள்களெல்லா முன்னுளேபுகுதக்கண்டேன்.........*
தீதனில்விட்டிற்பாய்ந்தாற் போற்றிரு முகங்களுள்ளே..........*
மாதவவுயிர்களெல்லாம் வீழ்ந்துமாய் குதலுங்கண்டேன்.......*

(இ-ள்.) இத்தனையென்றுசொல்ல அரிதான நதிகளெல்லாம் அழகிய கடலைக்கூடினாற்போலப் போகப்பட்ட பொருள்களெல்லாம் உமக்குள்ளே புகுதக்கண்டேன் நெருப்பில் விட்டிற்பூச்சி பாய்ந்தாற்போல உம்முடைய திருமுகங்களுக் குள்ளே சகல சீவன்களும் விழுந்துசாகிறதுங் கண்டேன் மாதவா சுவாமியென்றவாறு. (௨௩)

ஒளியினிலுலகமெல்லா மொழித்தனை யூண்போதாமல்......*
வெளியிரு ணீட்டி நீட்டி வெருஞ்சுவைகொள்ளாநின்றாய்...*

தெளிகிலேனுன்னையுந்தன் செய்கையுந்தெரிக்கமாட்டேன்..... *
னளியினாலடியேற்குன்னை யுள்ளவாறருளிச்செய்வாய்...... *

(இ ள்.) சோதியிலேசகலப்பிரபஞ்சத்தையும் விழுங்கிபந்தப்போசிப்புப்போதாமல் வெளியிலே நாக்குகளை நீட்டி நீட்டி வெறுஞ்சுவையை நக்கிக்கொண்டிருக்கிற புன்னை யின்னானென்று தெளிடமாட்டேன் உன்செய்கையையு மின்னதென்று தெரிந்துகொள்ளமாட்டேன் இப்படிக்கொத்த அடியேனுக்குக் கிருபையினாலே யுன்னை யுள்ளபடி யருளிச்செய்வா யென்றவாறு. (உச)

என்றடிவணங்கிக்கேட்ப யாவுமா யெல்லையின்றி ............ *
நின்றவனுரைப்பானும்மை யொழியநின் றவரையெல்லாங் *
கொன்றுயிர்பருகலுற்றேன் கடையுகங் குறுக லுற்ற ..... ... *
வன்றுலகடையமாய்க்கு மவனியா னறிநீயையா..... .... ..... *

(இ-ள்.) என்று திருவடிகளில் வணங்கிக்கேட்க எல்லாமாகி எல்லையில்லாமல்நின்றகிருஷ்ணசுவாமி சொல்லுவார்ஐயாவுங்களைத்தவிர நின்றவர்களையெல்லாங் கொன்று சீவனைக்குடிக்கிறகாரியத்தையிப்போது செய்கிறேன் இது நான்பண்ணுகிறகாரியம் உகாந்தமுடிகிற அன்றைக்குச் சகலபிரபஞ்சத்தையுங் கொல்லுகிற கால சொரூபன் நான் என்னையின்னானென்று நான்செய்கிறகாரிய மின்ன தென்றுஞ்சொல்லவேண்டுமென்று கேட்டையே அந்த விரண்டுஞ் சொன்னேன் அதை நீயறி யருச்சுனா வென்றவாறு. ※ அன்று என்றதனை வினைறென்றதருத்தாபத்தி.— இப்போது செய்கிறகாரியத்திலும்மைத்தவிர வென்றதனால் உங்களஞ்சுபேரையுந் தவிர மற்றைப் பேரையென்றும் அருத்தாபத்தி வரும். (உரு)

(கொச்சகக்கலிப்பா.)

இறந்தாரேயெனக்கருதிங் கிவர்களெல்லா மென்றாலே ......... *
யறந்தானுமதுநீயே யாங்கவரைக் கொன்றாயார் ... ... ....... *
சிறந்தாரவ்வரசினையுஞ் செகத்தினில்வாழ்ந் திருவினையும் ... *
பிறந்தார்கள் பெறாதபெரும் புகழினையும்பேணென்றான் .... *

(இ-ள்.) இங்கேநின்ற விவர்களெல்லாரும் நீ கொல்லா விட்டாலும என்றாலே செத்தவர்களென்றேதினை தருமமு மதுதான் நீயே அவர்களைக் கொன்றாயாகில் சிறந்தராசாக்களுடைய அந்த அர

னையும் பிரபஞ்சத்தில் வாழப்பட்ட செல்வத்தையும் பிறந் தவர்கள் பெறுகிற பெரியகீர்த்தியையும் ஆதரியென்று சொன்றவாறு. ❁ இறந்தானென்ற வேகாரத்தினாலே நீ கொல்லாவிட்டால் சாகாமலிருந்தவர்களென்று நினையாதே யென்றாலே செத்தவர்க ளென்றே நினையென்றல் - தேற்றேகாரம் - நான் கொன்றதனாற் பிரயோசனமென்னவென்று நீ கேட்கில் நீ கொன்றாற்சகலஅரசுஞ் சகலசெல்வமும் கீர்த்தியு முனக்கே வருமென்பது. (௨௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இவ்வகைமொழிபக்கேட்ட விசையனென்செய்தானென்னிற்,
கைதலைமிசையவாகக் கட்டினா குளரக்கண்ணீர் ...... ...... *
பையவேமார்பிற்சோரப் பயத்தொடும் பரிவினோடும் ... .... *
மைவரையெடுத்தவள்ளல் பெருமையை வழுத்தலுற்றான் ...*

(இ-ள்.) இந்தப்படி கிருஷ்ணசுவாமி சொல்லக்கேட்ட அருச்சுனன் என்னசெய்தானென்று கேட்கிற் கேளுந்திருதராட்டிரமகாராசாவேயென்று சஞ்சயன்சொல்லுகிறான் அருச்சுனன் கைகளைத் தலைமேலே கூப்பிக்கொண்டவனாக வாத்தைகுளரக் கண்ணீர்கள் மெள்ளமார்பிலே யுதிரப்பயத்துடனும் பத்தியுடனும் மேகஞ்சூழ்ந்த கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்த ஸ்ரீகிருஷ்ண சுவாமியினுடைய பெருமையைத் தோத்திரம்பண்ண வுத்தியோகப் பட்டானென்றவாறு. (௨௭)

(கலிவிருத்தம்.)

சாயாவிமையோர் சனகாதிகடா பதராமேனோர் ...... *
சேயாயணியா யுனைவேறறியார் தெளியாதார் ........ *
மாயாமனனே மதுசூதனனே திருமாலே ........ .......*
யாயாவரசேயுனைவே றறியே னடியேனே..............*

(இ-ள்.) சாயாமலிருக்கிற தேவர்களுக்குஞ் சனகாதியர்களுக்கும் முனிவர்களுக்குந் தூரமானவனென்றும் சமீபமானவனென்றும், உம்மைவேறொருவரறியார்க ளென்றும்; மாயா மனமுடையவனேயென்றும், மதுசூதனனேயென்றும், திருமாலேயென்றும், ஆயனேயென்றும்; அரசனேயென்றும், உம்மையல்லாமல்வேறொருதெய்வத்தையறியேன் அடியேனென்று தோத்திரஞ்செய்தானருச்சுனனென்றவாறு. (௨௮)

ஏகாவழகேயிசைழாவுருவே யென்றாழிப்.... .................*
பாகாவிமையோர் பருகாவமுதே பழையோனே......*
ஏகாணிலதீ ருளவேவறெவையுந் தெரிகல்லா ................*
வாகாயமுமேயுனவே யறியே னடியேனே ......... ... *

(இ-ள்.) ஏகமானவனே அழகனே இசைப்படாவுருவேயென்னைக்குத் துணையானவனே பாகனே தேவர்பருகாத அமிர்தமேபழைமையானவனே ஐம்பூதனே உன்னையறியாமல் வேறென்றையு மறியேனென்றும் சொன்னானருச்சுன னென்றவாறு. (௨௯)

சாதீவினையாழியிலே விழுநா டயியேனைப் ....... ........*
போதிதழியா நெறியென் றருளும் புலையாளா .... ......*
சோதியருவேயுருவே சுருதித்தொகைகூறு.............*
மாதிமுடிவே யுனவே யறியே னடியேனே......... ...*

(இ-ள்.) தீவினையென்கிற சமுத்திரத்தில் விழுந்து இறக்கின்ற அடியேனை அழியாத மார்க்கமாய் இப்பொழுது நின்று இரட்சித்தெய்னையாளாவென்றும் சோதியே அருவேயுருவேசுருதியினுடைய தொகைசொல்லுகிறவனே ஆதிமுடிவே உம்மை யல்லாமலடியேனுக்கு வேறெயொன்றுமில்லையென்று சொன்னானருச்சுன னென்றவாறு.— (௩௰)

இருவேறுயிரோவெனவே றுலகா மெவையாவுந்......*
தருவாமுதலே யவைபோ யறிநாடமியேனே..... ... *
யருவேயுருவேயுயிரோ டெனயற் றவசோரா........ .... *
வுருவேயுறவே யுனவே யறியே னடியேனே .... ........*

(இ-ள்.) இருவகையுயிரான உலகையெல்லா முண்டாக்கின கற்பகதருவிற்கு வேர்முதலானவனே யென்றும் உலகத்தை யறிகின்றநாளைக்கு உசசாகமானவனேயென்றும், அருவை யுருவையுயிரைச்சேராத உருவேயென்றும் உறவேயென்றும், உன்னை யல்லால் வேறொருவரை யறியே னடியேனென்றுஞ் சொன்னானருச்சுன னென்றவாறு.— (௩௧)

படலேவடிவாய் தருமாயையிறேன் மறையாவு .........*
மியலேயிசையே யெழின்மாசுவையே வினியானே ..*

செயலேனையே மனமேயெனமற் றவைசோர ... ..... ✻
வயலேயறிவே யுனையல் லறியே னடியேனே .... ........ ✻

(இ-ள்.) மயக்கமேவடிவாகத் திருமாயையினாலே மறையாவுமா னவனே இலக்கணமானவனே இசையானவனே அழகானவனே மக த்தாகிய சட்சுவையோடும் இனிமையானவனே செயலான வனேஉ ளையானவனே மனமானவனே அயலானவனே அறிவானவனேஉன் னையல்லாமல் வேறொன்றும் அறியேனென்றா னருச்சுனன்.—எ-று.

ஒருநாகநடா வொருநா கமனா வுயமோதங் ....... .... ✻
கரநாண்மலரா லமுதாயெழவே கடைவோனே..... .... ✻
வரநான்முகனே மறைதேடரியே மழுவாள்சே .... ..... ✻
ராறுமவனே யுனைவே றறியே னடியேனே .... ........ ✻

(இ-ள்.) திருப்பாற்கடலிலே மேருவைநாட்டி ஒருநாகமே லாகவும், ஒருநாகங்கீழாகவும், நாணைப்பூட்டி உயர்ந்த பணைக்கூட் டிக் கயலப்போன்ற லகையினாலே அமிர்தமுண்டாக வேண்டுமென் று இழுத்துக்கடைந்தவனே யென்றும்வரந்தருகிற பிரமாவேயென் றும்வேதந்தேடுகிற விஷ்ணுவேயென்றும் மழுவையும் வாளையுந்த ரித்த அரனானவனேயென்றும், உன்னையல்லாமல் வேறொன்றையு மறியேனென்று சொன்னானருச்சுனனென்றவாறு. (௩௩)

ஞானமுதலிந்திரிய மனைத்தினுக்கு நாயகனே ..... ..... ✻
யூனவினைதனையறுப்பா யுன்னுடைய புகழ்கேட்கில்- ✻
வானவருமுனிவருமனங்களித்து மகிழ்வெய்தத் ...... ✻
தானவருமரக்கர்களுஞ் சாதுயரப் படுவர்களால் ........ ✻

(இ-ள்.) ஞானமுதலானவிந்திரிய மெல்லாவற்றிற்குங் கர்த்த னே குற்றமுள்ள தீவினையான பவத்தை யறுக்கிறவனே உன்னுடை ய கீர்த்தியைக்கேட்கிற தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் மனசுகளிப்பு ண்டாய்ச் சந்தோஷித்தையடைய அசுரரும் ராக்ஷதரும் மரணதுக்க ப்படுவார்களென்றவாறு. (௩௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கையும்பதமுந்திருவாயுங் கண்ணுஞ்செய்யகருமுகிலே .............. ✻
வையைம்பொருளுமறிவரியா யயனூர்தாயேயந்தமிலாய்..... ........ ✻

மெய்யும்பொய்யுமில்லாதா யெல்லாமாகியிருந்தாயே..................*
யுய்யும்பரிசுநினைந்தவர்க ளுன்னைவணங்காதவருளரோ.............*

(இ-ள்.) திருக்கைகளுந் திருவடிகளுந் திருவாயுந் திருக்கண்களும் சிவந்தநிறத்தையுடைய நீலமேகம் போலுந் திருமேனி யையுடையவனே ஆத்மதத்துவ மிருபத்துநாலுஞ் சீவாத்துமா வொன்றுமாக விருபத்தஞ்சுபொருளும் அறி யவரியவனே பிரமாவின் தாயே முடிவில்லாத அனந்தனே மெய்யும் பொய்யுமில்லாதவனேமெய்யும் பொய்யுமான வெல்லாந்தானாகிப் பரந்தவனே பிழைக்கிறவிதத்தை நினைந்தவர்கள் உன்னைவணங்காதவர்களுண்டோ எல்லாரும்வணங்குகின்றவர்களே யென்றவாறு. (௩௫)

ஆதிதேவனாவாய்நீ யாக்கைக்கமைந்த வாருயிர்நீ.....*
யாதுமறியப்படாமையுநீ யெல்லாங்கடைகாற்புகலிட நீ.
யோதியுணர்வாருணர்வுநீயுணர்வா லுணரப்படும்பொருணீ
நீதியமனாயழிப்பாய்நீ நீருங்காற்றுமாவாய்நீ...............*

(இ-ள்.) சகலதேவர்களுக்கு முந்தினதேவனான ஆதிதேவனானவன் நீ-தேகங்களுக்கு அமைந்த அரியசீவன் நீ- ஒன்றுமறியப்படாமையும், எல்லாவற்றையும் அறியப்பட்டவனும் நீ-முடிவுகாலத்தில்-எல்லாம்புகுதுமிடம் நீ- வேதங்களையோதி வேதாந்தத்தைத்தெளிகின்றவர்களிடத்துத்தெளிவும் நீ- அந்தத்தெளிவாலே தெளியப்பட்டபொருள் நீ- நீதியையுடைய யமனாய்க் கொல்லுகின்றவனும் நீதண்ணீருங் காற்றுமாகின்றவன் நீயென்றவாறு. (௩௬)

ஏயும்பரிசிவ்வுலகெல்லா மென்றும்பிறப்பித்திடுகின்ற.......*
தாயும்பிதாவுமாவாய்நீ தாய்தாய்தந்தைதந்தையுநீ...... .*
யாவும்படியையல்லாதவையாவுன்னையடியேனென்.........*
மாயும்பிறவித்துயர்தீர நூறாயிரங்கால்வணங்கினேன்.......*

(இ-ள்.) இசையும்படிக்கு இந்தப் பிரபஞ்சத்தை யெல்லாமென்றைக்கும் பிறப்பிக்கிறதாயுந் தகப்பனு மாகின்றவன் நீதாயினுடைய தாயானபாட்டியுந் தகப்பனுடையதகப்பனானபாட்டனும் நீ- விசாரித்துத் தேடியறியப்பட்ட சுபாவத்தை யல்லாத விசாரித்துத் தேடியுமறியப்படாத சுபாவத்தையுடைய சுவாமியென் பிறவித்து

ணீபந்தீரவேண்டி அடியேன் உன்னை நூறுயிரந்தரம் வணங்கினே னென்றவாறு. (௬௭)

என்பேரிடும்பைக்கெடும்வண்ண மின்னந்தொழுதேனெந்தாயு ... *
முன்பேதொழுதேனுன்னுடைய பின்பேமுறையால்வணங்கினே.. *
னன்பேயடியேனாரமுதே யகலாவிந்தப்பெரும்பிறவி.... ........ *
வன்பேகெடவுன்றனையெங்கு மறித்துமறித்துவணங்கினே.... .... *

(இ-ள்.) என்பெரியதுக்கங் கெடுகின்ற நிமித்தமாகஇன்னம்வ ணங்கினேன்சுவாமி உன்னுடைய முன்னேவணங்கினேன் உன்னு டையபின்னே முறையாலே வணங்கினேன் என் அன்பே அடி யேன்குடிக்கிற அமிர்தமே யென்னைவிட்டு நீங்காத இந்தப் பெரிய பிறவியினுடைய வலுமையறிடவேண்டி யுன்னையெங்கெங்குந் திரும் பியும் திரும்பியும் வணங்கினே னென்றவாறு. (௬௮)

தேவதேவனின்னில்வேறு தேவரோதுதெய்வமேது....*
பாவமேதறங்களேது பற்றியாதுவீடியாது .........*
சாவதேதுவாழ்வதேது தனைத்துமாயதன்மைநீ..........*
யாவதேதுமொன்றுதா னறிந்திலேனென்மாயனே... *

(இ-ள்.) தேவதேவா உனக்குள்ளே யுன்னைத் தவிரவேறு தேவர்களேது தெய்வமேது பாவமேது புண்ணியமேது பாசபந்த மேது மோக்ஷமேது சாவதேது வாழ்வதேது இவை முதலானசக லமுமாகிய சுபாவம்நீயாவது இதையேதாகிலும் ஒன்றுங்கூம் முன் னேநான் அறிந்ததில்லை அதென்ன சுவாமியென்றுமென்றவாறு.

நீதிவேதம்வானுளோர் நிலத்துளோர்நினைந்துரைந் ...*
தோதியோதியுட்சகிந் துணர்ந்தவுன்னைமுன்னெலாஞ்*
சாதிபேதமாகிவாழ் சராசரங்களுக்கெலா .... ........ ... *
மாதிமூலமொன்றுநா னறிந்திலேனென்மாயனே.... *

(இ-ள்.) மேலோகத்திலுள்ள தேவர்கள் பூமியிலுள்ள மனி தர்கள் தெய்வமாமோவென்று நினைந்துமனங்கரைந்து நீதியுள்ளவே தத்தை யோதியோதி மனசுகனிந்து உருகிநீயென்று நிச்சயமாகத் தேறித்தெளிந்தவுன்னை யிந்தவிசுவரூபங்காணாத முன் னெல்லாமனே வற்றசாதிபேதமாகி வாழப்பட்ட சராசரங்களுக்கெல்லாம் முதற்

பூசமென்று நானறிந்தேனில்லை அதென்னசுவாமி யென்றவாறு.—
ஆதிமூலமானவனு முதற்பீசம். (௪௰)

சாயைபோலும்வாழ்வுநாடு வீடுதந்தைதாயெனும்...*
பேயையேறிமாறியே பிறந்திறக்கயிதெலாந் ... ......*
தூயையாகியாதுமோர் தொடக்கிலாதுநின்றநின் ....*
மாயையாவதென்றுநா னறிந்திலேனென்மாயனே.... *

(இ-ள்.) நிழலையொப்பான வாழ்வு நாடு வீடு தகப்பன்றாய் யென்றுசொல்லப்பட்ட பேயை நிச்சயமென்று மேன்மேலும் அதுமேமுயற்சியாக யேறிமாறிமாறிப் பிறந்துபிறந்து செத்துச்செத்துவருகின்றவிதங்களெல்லாம் பரிசுத்தையாகி ஒன்றுகிலும் ஒருபற்றில்லாமல் நின்றவுன்னுடைய மாயையாகின்றதென்று முன்னேநான் அறிந்தேனில்லை அதென்னசுவாமி யொன்றவாறு. (சக)

யாதவாவென்மைத்துனுவ டாவசோதையின்னுயிர்க் *
காதலாயகாவியாய் கண்ணகண்ணவென்றுநா ........*
ஞேசவாவதன்றியே யுனாத்ததீமையாவையு ... .... ... *
மாதகாதவென்றுநா னறிந்திலேனென்மாயனே ......*

(இ-ள். அடாயாதவா! அடாவென்மைத்துனு! அடாஅசோதையினுடைய வினியசிவனை யொப்பான*குமாரா! அடாபசுமேய்க்கிறவிடையா! அடாகிருஷ்ணா? அடாகிருஷ்ணாவென்றுசொல்லலாகாதசொல்லை நான்சொன்ன பொல்லாங்கு சகலத்தையும் தகாதசொல்லென்று முன்னே நான் அறிந்தேனில்லை அது வென்ன ஆச்சரியமென்றவாறு. (சஉ)

ஏறுமல்லுவென்றுகுன் றெடுத்தவண்ணமெண்ணியே ... ..*
கூறுமல்லதிரவும்பர் கூறுகன்ற கொண்டலே ... ..... .... .... *
வேறுமலைமயான்றுமல்லை மெய்ம்மைகூறமப்பொரு.... ...*
ளாறுமல்லவொன்றுநா னறிந்திலேனென்மாயனே.... ...*

(இ-ள்.) கோசலராசாவினுடைய பெண்ணைக் கலியாணம்பண்ணுகிறதற்காக எழுரிஷபத்தையுங் கஞ்சனவிட்டமல்லரையுஞ் செயித்து இந்திரன் வருஷிப்பித்த மழையைத்தடுத்துப் பசுக்களையுமிடையரையுங் காக்கவேண்டிக் கோவர்த்தன மலையைக் கொடையாகவெடுத்துத் தடுத்ததை நினைத்துச்சொல்லப்பட்டதுன்பந்திரத்து

தேவர்கள்கொண்டாடப்பட்ட நீல்மேகத்தையொப்பான சுவாமி நீ வேறுவேறான அனேகமுமல்ல ஒன்றுமல்ல சத்தியத்தைச் சொல்லப்பட்ட பொருள்மார்க்கமு மல்லவென்று நான்முன்னறிந்தேனில்லை அதென்ன ஆச்சரியஞ் சுவாமி யென்றவாறு. (௪௩)

(கலிவிருத்தம்.)

என்னுடைய தோழனென்ன வேகருதியானு ............ *
முன்னுடைய மெய்ம்மையினை யொன்றுமுணராதே... *
வன்மையினிலின் மொழி மறுத்தெதிருரைத்த ...... ......*
புன்மொழிகளானவை பொறுத்தருள வேண்டும் .... *

(இ-ள்.) நானும் என்னுடைய தோழனென்றேயுன்னை நினைத்து உன்னுடைய சத்தியத்தையொன்று மறியாமல் என்னுடைய வலுமையினாலேயுன்வசனத்தைத்தடுத்து எதிர்வசனஞ்சொன்ன அற்ப வசனங்களானவைகளைப் பொறுத்தருளவேண்டுமென்றவாறு.(௪௪)

உண்ணல்விளையாடுத லுறங்குதல் சிரித்தல்............... *
பண்ணவுறுபோதுகளினும்பழமை யானு.......... .... *
மெண்ணலறியாமையினில் வந்தபிழையெல்லாங்......*
கண்ணகருணாகர பொறுத்தருளு கண்டாய் .... ......... *

(இ-ள்.) கிருஷ்ணா! கிருபா சொரூபா! போசிக்கிற போதும் விளையாடுகிறபோதும் நித்திரைபண்ணுகிறபோதும் சிரிக்கிற போதும் இருவருக்குமுள்ள பாரம்பரிய உறவுபழமையினாலும்மைத்துனன் முறைமையினாலும் உன்னைச்சுவாமி யென்றெண்ண அறியாமையினாலே எதினபிழையெல்லாம் பொறுத்தருளவேண்டுங்கண்டாயென்றவாறு.— (௪௫)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

உண்டாவுலகனைத்து மீன்றாய்நீயே யெவராலு முன்னு
ன்மை புணர்ந்துகூறிற் - கொண்டாடப் பரிவாய்நீ மே
ன்மைநல்கிக் குருவாகிக்குற்றங்க ளோர்க்கின்றாய்நீ - யெண்
டாலுமறையனைத்து முன்னின்மிக்கா ரில்லை யென நின்
றெடுத்து மெடுத்துக்காட்டக் - கண்டாருநின் பெருமை
காணமாட்டார் கண்ணிலாதவர்வேறுகாண்பதுண்டோ.

(இ-ள்.) உண்டாகிய சகலபிரபஞ்சத்தையும், நீயேபெற்றாய் எவ்

ராகிலும் உன்னுடைய வன்மையை யறிந்து சொன்னால் அவர்களை நீ கொண்டாடி யன்டசெய்வாய் அவர்களுக்கு மேன்மையைக் கொடுத்துக் குருவாகி யுபதேசித்துக் கீழ்மையான குற்றங்களை நீ தீர்க்கிறாய் உன்னைப் பிரமாணமுஞ் சகலலோகமும் உன்னிலும் அதிகமானவர்கள் இல்லை இல்லையென்று துணிந்து நின்று சொல்லி யதுவு மெய்த்துக்காட்ட அதனாலே கண்டவர்களும் உன்னுடைய பெருமையைக் காணமாட்டார்களா கையாலே ஞானமென்கிற கண்ணில்லா தவர்கள் காண்பது வேறேயுண்டோ அஞ்ஞானியான குருடன் ஒன்றுங்காண்பதில்லை யென்றவாறு. (௬௬)

அறியாதபருவத்து மகன்செய் குற்ற மருந்தாதை பொறுத்த
னவுமாவிபோலப் - பிரியாததோழன் செய்குற்ற நட்பிற்பெரி
யோர்கள் பொறுத்தனவும் போலதயோனன் - குறியாது செய்
துவருங் குற்றமெல்லாங் குணமாகக்கொண்டருள வேண்டுமெ
ன்றே - வெறியாரு மலர்ப்பதங்களிடையே வீழ்ந்து வேண்டி
க்கொண்டிலையிலெனம் விளம்பலுற்றான்..........*

(இ-ள்.) அறியாதகுழந்தைப் பருவத்து மகன் செய்தகுற்றத்தை அருமையானதகப்பன் பொறுத்தாற்போலவும் தேக சீவனைப்போலப் பிரியாததோழன் செய்தகுற்றத்தைச் சினேகத்தினாலே பெரியோர்கள் பொறுத்தாற்போல அடியேனான் உண்மையறியாமல் நாள்தோறுஞ் செய்துவந்த குற்றத்தையெல்லாங் குணமாகக் கொண்டருள் வேண்டுமென்று தேன் நிறைந்த செந்தாமரைப் பூவையொப்பான திருவடிகளிடத்திலே தெண்டனாக வீழ்ந்து வேண்டிக்கொண்டு இன்னமிதைச் சொல்ல வுத்தியோகப் பட்டானென்றவாறு.— (௬௭)

(கலிவிருத்தம்.)

பண்டுகண்டறி யாப்பழங் கோலத்தைக் ............ .... *
கண்டு நெஞ்சங் கலங்குங் களிக்குமாற் ......... ......... *
றண்டு நீண்முடி சங்கொடு சக்கரங் ........................ *
கொண்டகோலத்தை யேகொண் டருளுவாய்...... ..*

(இ-ள்.) முன்னேயொருகாலுங் கண்டறியாத பழையசொரூபத்தை இப்போது கண்டு மனதுகலங்குகிறது ஆனந்தங்கொள்ளுகிறது ஆகையாலே தண்டாயுதமும் நீண்டகிரீடமுஞ் சங்கும் அதனுடனே

சக்கரமுந்தரித்துக் கொண்ட புதிய கிருஷ்ணசுரூபத்தையே கொண்டருள்வா யென்றவாறு. (சஅ)

(கலிவிருத்தம்.)

என்றவனுரைத்திடலு மெவ்வுருவு மொன்றாய் ... ... ..... *
நின்றவனுரைத்தருளு வாணிறை யொளித்தாய்..... .... *
முன்றருமுதற்பொருளு மாய்முழுது மாய ........ ..... *
வென்றனுரு வததினைமுன் னியாவரறிகிற்பார்.........*

(இ-ள்.) என்று அருச்சுனன்சொல்லலும் எந்தரூபமுமொன்றுநின்ற கிருஷ்ணசுவாமி திருவாய் மலர்ந்தருளுவார் நிறைந்தசோதியையுடையதாகி முன்னெல்லாவற்றையுந் தரப்பட்டமுதலின்பொருளுமான ஆதிமூலமுமாகி எல்லாம் நானுகி என்சொரூபத்தையிப்போது நீயறிந்தாற்போல் முன்யா ரறியமாட்டுவார்கள் யாருமறியாரென்றவாறு. (சகூ)

வேதநெறியாலுமிரு வேள்விகளினாலும்........... *
மாதவமையாலுயகா தானவகை யாலும் ............. *
காதலர்கள்காணமுடி யாவடிவுகண்டாய்..... .. . ...*
யேதமறியாதவெளி யோகவலி யாலே..................*

(இ-ள்.) வேதமார்க்கமான வைதிகக்கிரமங்களினாலும்மிகுந்துசெய்த யாகங்களினாலு மகாதபசுகளினாலும் ஏற்கிறவர்கள் மனதுசந்தோஷிப்படக் கொடுத்ததான விதங்களினாலும் இவைகளின்பிரயோசனத்தை யிச்சித்த ஆசையுடையவர்களாலே காணமுடியாதசொரூபத்தைப் பிரயோசனத்தைஇச்சிக்கிறதாகிய குற்றத்தை யறியாதவென்மேலேவைத்த மனதுள்ளயோகமான ஆத்ம யோகவலுமையினாலே நீகண்டாயருச்சுனாவென்றவாறு. (ருய)

இப்பரிசுரைத்தருளி யிரிருகையேயா............... ......... *
யப்பழையகோலமது வாயருளியங்கே...................*
மெப்பயமகற்றிவிசை யாக்கிவைகள்வேறே .............. *
யொப்பவரின்மிக்கவரி லாதவனுலாப்பான்.............*

(இ-ள்.) இந்தப்படி திருவாய்மலர்ந்தருளி நாலு கைகளையுடையதாகிப் பழையமனிதசொரூபமா யருளிச்செய்து அப்போது

அருச்சுனனுக்குச் சரீரபயத்தைத்தீர்த்துத்தனக்குத்தானேயொப்பி ல்லாமல் வேறேயொப்பானவரில்லாத வேறே அதிகமானவரில்லாத கிருஷ்ணசுவாமி யிவைகள்சொல்லுவானென்றவாறு. (௫௧)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கண்டவரில்லை நீமுன் கண்டவிக்கோலங்காண ......... *
அண்டருமறியாநின்றாராதலாலன்புகூருந் ......... *
தொண்டருமாகியென்னையன்றியோர்தொடர்ச்சியில்லாமை,
கொண்டவரடைவரென்றுங் கோக்குலமெய்த்தகோமான்.

(இ-ள்.) நீ முன் கண்டவிசுவரூபத்தை யுன்னைத் தவிரக்கண்டவர்களில்லை தேவர்களுங்காண அறியாமல் நின்றார்களாகையா லென்மேல் அன்புமிகுதியாகப்பட்ட அடியானுமாகியென்னை யல்லாமல்வேறொருநினைவு தொடங்குவதில்லாத வென்னைத்தன் சித்தமாகக்கொண்டவர்களிந்தச் சுரூபத்தையடைவார்களென்று பசுக்கூட்டங்களைமேய்த்த ஸ்ரீக்ருஷ்ணசுவாமி சொன்னானென்றவாறு. (௫௨)



பதினோராவது - விசுவரூப - அத்தியாயம் - முற்றும்.
ஆக அத்தியாயம் - ௰௧ - க்கு - கூடியச்செய்யுள். (௱௪௭.)



பன்னிரண்டாவது.

# பத்தியோக அத்தியாயம்.



(அறுசீரடியாசிரிய விருத்தம்.)

ஐயநானெதிரேகண்ட வுருவமேயிசைக்கிற்பாரோ.................*
ஆய நான்மறைக்குமெட்டாப் பொருளையேதொடர்கிற்பாரோ...*
தாயனையப்பெரியோனென்று தனைச்செயல்வினையத்தானே...... *
நாயனையநீணாகன்மேய்க்குமாடல்வேதருளிச்செய்வான்...... *

(இ-ள்.) தாயையொப்பான அன்புள்ளவரோபெரியோர்களெல்

லாம் உன்னிலேயொருந்த நான்கண்முன்னே கண்ட இந்தவிசுவரூபத்தையேமனதிலே பொருந்திச்சேவிப்பார்களோ அல்லது சுத்தயமான நாலுவேதங்களுக்கு மெட்டாதபொருளாகிய பிரமத்தையே தொடர்ந்து சேவிப்பார்களோ இந்தவிரண்டில் எதைநிச்சயங்கொள்ளுவார்களென்று அருச்சுனன்கேட்கத் தானொரு இடையனாகப் பசுக்களைமுன் மேய்க்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணசுவாமி வேறேயருளிச்செய்வாரென்றவாறு. ❋ வேறேயென்றதனால் முன்காட்டினதும்போதாமல் வேறும் அருளிச்செய்வாரென்ற கருத்தாபத்தி. (க)

மன்னநீகாணநான்முன் காட்டியவடிவைநெஞ்சா........ ❋
லுன்னவாய்மொழிகளாலே புகழ்த்தல்செய்பவர்களெல்லா ❋
மென்னலாற்பிறிதொன்றெய்தா ரியாரினுநல்லாரிங்குச்....... ❋
சொன்னவான்றிமற்றை யவர்கடந்துறையுங்கேளாய் ... ... ❋

(இ-ள்.) இராசனே; நீ கண்ணாலேகாண நான்முன்காட்டினவிசுவரூபத்தைமனதிலே தியானித்தல் வாய் வார்த்தைகளாலே தோத்திரம்பண்ணுதல் இவ்விரண்டுஞ் செய்பவர்களெல்லாம் என்னைச்சேருவார்களல்லாமல் வேறொன்றைச் சேரார்கள் இவர்களாரிலும் நல்லவர்களிப்போது சொன்னவிசுவரூப நிஷ்டைகளல்லாமல் மற்றபிரமநிஷ்டர்களுடைய துறையுங்கேட்பா யென்றவாறு. ❋ வேறொன்றாவது பிரமாவினுடைய பதவி இந்திரபதவி முதலானவைஇவைகளுக்குமேலான வென்னைச்சேருவதிலே தாழ்ந்த பதவிகளையிந்தவிசுவரூபநிஷ்டர்கள் தங்களைச்சேர்ந்தவர்களுக்குக் கொடுப்பாரென்பது குறிப்பு. (உ)

உரைசெயற்கரிதாய்நெஞ்சி னுணர்விடப்படாதேயெங்கும் ❋
புரைவறக்கலந்துபோக்கு வரவின்றிப்பொலிந்ததொன்றைக்,
கரைசெயற்கரியவாய புலன்களைக்கடந்துகாண்பா......... ❋
ரரசமர்த்தியானேயென் னிலனனியமென்னலாமே ... ... ... ❋

(இ-ள்.) இப்படி யப்படியென்று சொல்லப்படாததாய் மனதிலுண்டாகிய அறிவினிடத் தகப்படாமல் எங்கு மிடையறக் கலந்து போக்குவரவில்லாமல் பொலிவினை யுடைத்தாகிய ஒன்றானபிரமத்தை அனேகவழியாகப் புரண்டோடிக் கரைகட்டக்கூடா தாகியவெள்ளத்தையொப்பாய் மட்டுப்படாததாய்ப் பலவழியாகச் சிதறியே

லென்றதாகிய பஞ்சேந்திரியங்களைக் கடந்துகாண்கின்றவன் நானே யென்றால் இராசாவே; யென்னைத்தவிர அன்னியமென்று அவனைச் சொல்லலாகுமோ ஆகாதென்றவாறு. ஃ புணர்தல்என்பது-குற்றம றவென்பதாம். குற்றமாவது-எங்கெங்குங்கலத்தலுக்கு அணுவதனை கலவாவிட்டாலும் எங்கெங்கும்கலந்ததல்லாமல் எங்குங் கலந்தமெ ன்றசொல்லுக்குக் குற்றமாகையால்இடையறக்கலந்தமதன்றதுபோ க்குவரவாவதுசலனம். (௫)

காரணமிறந்தொன்றிற்குங் காட்சிபிற்படாதவொன்றைச் .. *
சேர்பவர்வருத்தம்வெறென் செப்பிடலாவதென்னு ... ........*
லோர்வரிதிதுதான்வாழு முயிர்களாலாவதென்று .......... *
லாரவர்பெருமைதன்னை யளவறுப்பவர்களையா......... . ....... *

(இ-ள்.) காரணங்கெட்டு ஒன்றிற்குங் காண்பதற்கு அகப்படா தஒன்றான பிரமத்தைச் சேருவார்களுடைய பிரயாசத்தைவேறே எ ன்னசொல்லலாவது என்னுலேயறியப்படாது இந்தப்பிரயாசமான பிரமநிஷ்டையானது உலகத்தில்வாழப்பட்ட வுயிர்களால் ஆவதா னால் அந்தவுயிர்களுடைய பெருமையைப் பிரமாணமாக அளவறு க்கின்றவர்கள்யார் யாருமில்லை ஐயா வென்றவாறு. ஃ பிரயாசமாவ துகாணப்பட்ட தேகிக்குங்காணுத ஆத்மாவைத் தியானிக் கின்றது பிரயாசமெனக. (௬)

யாவர்கள்சிலர்களெல்லா வினையுமென்கண்ணேவிட்டிட் ...... *
டாவர்தம்மறிவென்பாலே யாக்குவாரவர்கடம்மைச் .......... *
சாவதுமுதலாயுள்ள துயர்க்கடனின்றுந்தாங்கி ... .... ......... *
மேயர்க்கெனென்னுங்காலஞ் சிறிதிலையெடுக்கின்றேனன் ...... ... *

(இ-ள்.) எவர்களோ சிலபேர்களெல்லாவற்றையுமென்னிடத்தி லேவிட்டுவிட்டு அவர்கள் தங்களுடைய அறிவை யென்னிடத்திலேயா கப்பண்ணுவார்களோ அவர்களை எவர்களானாலுஞ் சாகின்றதுமுத லாயுள்ளதுக்க சமுத்திரத்திலே நின்றுந்தாங்கிச் சீக்கிரத்திலே எடுக் கமாட்டுவெனென்றவாறு. (௭)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மெய்யவன்னையென்னிலேவைத்தாலென்னில்வேறன்றியொ
ன்று யுறவில்லையதுமுடியாதே லாயினுமதனையேயபி

ல்வாய், பொய்யறவனுவும் புரிகிலாதெனிலுன் வினைகளென்
பொருட்டினுஞ் செய்வாய், செய்யுமவ்வினைக ளப்படிச்செயா
யேல் வினைப்பயன் றவிரவேசெய்வாய்...... ..............*

(இ-ள்.) மெய்யாகவென்னிடத்திலே யுன்னை வைத்தால் நீ நானென்று வேறுபடாமல் என்னிலொன்றுகின்றதற்குச் சந்தேகமில்லையென்னிலுன்னைமெய்யாக வைக்கமுடியாதாகில் ஆனாலும் அப்படி வைக்கின்றதையே அப்பியாசம்பண்ணுவாய் அந்த அப்பியாசமும்பொய்யறச் செய்ய மாட்டாயென்று உன் காமங்களை எனக்காகச் செய்வாய் அப்படியெனக்காகச் செய்யப்பட்டகருமங்களை அப்படிச்செய்யமாட்டாயாகில் கரும பலனை யிச்சியாமற் செய்வாயென்றவாறு. ☼ இதனால் ஆத்மஞானஞ்சித்திக்குமென்பது குறிப்பு. (௬)

(கலிவிருத்தம்.)

அத்திஞானவினையி னதனினு ....... ..............*
மெய்த்தியான மிகுமதன் மேலதாம் ..............*
வித்தினைய வினைப்பயன் வீடுதல் . ............*
சித்தசாந்தி யதனினுஞ் சீரிதால்...............*

(இ-ள்.) கருமமாகிய அப்பியாசத்திலும் ஞானமதிகமது அந்த ஞானத்திலும் மெய்யான தியானமதிகம் அந்தத்தியானத்திலும்பிறவிவிதையை யொப்பாகிய கருமபலனை யிச்சியாததியாக மதிகமாம் அந்தத்தியாகத்திலுஞ் சித்தசாந்தி சிறப்புடையதென்றவாறு. ☼ ஆ—ஆல்—அசைகள். (௭)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

இருவகையுயிர்க்கு மினியனாயின்ப துன்பங்களியானெனதறியா..*
ஒருபொருளாலுங் குறைவபாடன்றியுள்ளமுமொருவழிப்பாடாய்ப்
பொருவருந்துணிவுங் கருணையும்புரிந்து புலன்செறி யுணர்வையெ
ன்பாலே - மருவுநின்றொழுகு மியோகியென்பவன் காண்மன்னவம
த்தெனக் கினியான்.................................*

(இ-ள்.) சரம் அசரம என்கிற இரண்டுவகையான சீவன்களுக் குநல்லவனாய் சுகதுக்கங்கள் நான் என்கின்ற அகங்கார சுதந்திரங்கள் இவைகளையறியாமல் கிடைத்தபதார்த்தமென்றது இவைகளி லொருபதார்த்தங்களாலுங் குறைபாடில்லாமல் கிடைத்ததைத்தையுமனுபவி

க்கிறவனும் பலவழிப்பட்டுகிறமனதும் ஆத்ம சொரூபமான ஒருத்தியிலேநடக்க ஒப்பில்லாத துணிவுந் தயவுஞ்செய்து பஞ்சேந் திரியங்களாலே தெரியப்பட்ட அறிவை யென்னிடத்திலே சேரநின்றஇந்தப்படி யெப்போதும் நடக்கின்ற யோகியென்கிறவன் கண்டாயிராசாவே யெனக்குப்பிரிய னென்றவாறு. ஃ சுகதுக்கங் களையும் அகங்காரசுதந்திரங்களையும் அறியாமலென்பது அறியப்படுவ தெல்லாம் என்னையேயென்று அறிந்ததினாலே சுகதுக்கங்க ளென்றும் அகங்காரசுதந்தரங்களென்றும் நாமரூப கிரியைப்பகுப்பு அறியவாராது என்றது குறைபாடில்லாமல் என்பது இச்சையில்லாமல் அநிச்சையாக வந்ததை யனுபவிக்கையாலே ஒருபதார்த்தங்களையும் அந்தக்குறையில்லாமலென்பது உள்ளமென்றதனாற் பலவழி யோடுகிற மனதும் ஒருவழியாக நடக்கவென்றது இன்னமுஞ் சகலசீவனுக்கு மினியனாய்சுகதுக்கங்கள் அகங்காரசுதந்திரங்க ளறியாதவனாய் இச்சையில்லாதவனாய் இப்படியிருந்தாலும் மனது ஒருவழிப் பட வேண்டுமென்றுமாம்- துணிவாவது - எத்தனையாபத்து வந்தாலும் ஒன்றுஞ்செய்யமாட்டாதென்று ஆத்மசொரூபம் அறிந்ததனால் வந்ததுணிவு கருணையாவது செய்வ தொன்றுண்டு அது செய்கிற தின்னதென்று பகுக்கவு மித்தனைகாலஞ் செய்வதென்று கணிக்கவுங் கூடாது அவனுடையவிதியையாரா லுங் கடக்கக்கூடாது என்றறிந்து இதில் அகப்பட்ட எல்லாரும்நானே நானே யெல்லாருமென்று தன்மேலவைத்த தயவைத்தனக்கு நன்மை துன்மை செய்வார்கள் மேலுஞ்செய்வது தயவு துணிவின்னமு மொருவிதம் தெய்வத்தின்விதிக்கு ஒழிவில்லை தடையில்லை ஆகையாலே தேகமெத்தனைவந்தாலும் அந்தத்தேகங்களுக்குள்ள சுகதுக்கங்களெத்தனைவந்தாலும்விதிப்பக்கலாமல் விசாரத்தினா லொழிவில்லையே அதினாலே நடந்த தெல்லாம் நடக்கட்டும் நடக்கிறதெல்லாந் தேகத்துக்கே யல்லாமல் நமக்கொன்றுமில்லையே யென்கிற துணிவுமாம் அறிவாவது விஷேஷவறிவு.— (அ)

உலகமுந் தானும்வேறிலாமையினா லொன்றொரு பொருட்கு மஞ்
சாமே-பலகிலாவுயிர்கட் கினிமருதலினா லவைகளுந் தன்னை
யஞ்சாதே - புலவரானவர்கள் புகழுமவ நிகழ்வான்பொருமை
யுபயக்குமக்களிப்பு - மிலகிடாநெஞ்சத் தியோகியெவ் வவன்
காணியாரினுமெனக்குமே வினியான்........................*

(இ-ள்.) உலகமுந்தானும் வேறல்லாதினாலே ஒருபதார்த்தத்துக்கும் இச்சியாமல் உலகமெல்லாந்தானாகவும் தானே உலகமாகவுமிருக்கிறதினாலே உலகத்துக்குப் பயப்படாமல் அளவில்லாத சீவன்களுக்கும் நல்லவனானதினாலே எந்தச்சீவன்களுந் தனக்குப்பயப்படாமல் தேவர்களான மேலுலகத்தார்களுந் தோத்திரம் பண்ணத்தக்கதாக நடக்கிறவன் பொறாமையும் மயக்கமுஞ் செருக்குமுண்டாகாத மனதையுடைய யோகியென்கிறவன் கண்டாயருச்சுனா! எவர்களிலு மெனக்குப்பிரியமென்றவாறு.— (௯)

ஒன்றினுமாசையின்றி யிந்திரியங்கடன்வழி யொழுகிடா தொறுக்
கி-நன்றியிதெனுந் தீங்கெலாமொத்து நல்வினை தீவினை துறந்
து-பொன்றினுநோவுந் தழிதல்செய்யாமற் பூரித்தல் வாடுதலி
ன்றி-யென்றுமுன்பிழைத்த பொருட்கிரங்காமல் வரும்பொரு
ட்கிச்சைசெய்யாதே..............................*

(இ-ள்.) ஆத்மஞானமாகிய பிரமத்தைத்தவிர வேறொன்றினுமாசையில்லாமல் பஞ்சேந்திரியங்களினுடைய வழியே போகாமல் அதைப்போக்கி நன்மையினுடனே பொல்லாங்கெல்லாஞ் சமமாகிப் புண்ணியபாவங்களைவிட்டுச் செத்தாலும் வருத்தப்பட்டுத் தாழ்வுசெய்யாமல் நிறைதல் குறைதலில்லாமல் முன்புபோன பொருளுக்கு என்றைக்குந் துக்கப்படாமல் இனிமேல் வருகிற பொருளுக்கு இப்போதே ஆசைப்படாமலென்றவாறு. (௰)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இகழ்பர்நட்டாரென்ப தின்றியே யின்பதுன்பந்.... ..... .....*
திகழவமானமானஞ் சீதமோடழலின் றீமை ... ....... ....... *
புகழ்பழியிவற்றினொத்தே பொருந்திவா ழிடமொன்றின்றி-*
நிகழ்ந்தருமியோகி கண்டாய் மற்றெனக்குரிய னான்........*

(இ-ள்.) சத்துருமித்துருவென்பதில்லாமல் சுகதுக்கம் விளங்காநின்ற அவமானமானம் குளிர்மை அக்கினியின்சுடுதலான உஷ்ணத்தைக் கீர்த்திபழிப்பிவைகளிலே சமமாகி யாருடனுங் கூடி இன்பமாகவிருக்கிற இடமொன்றில்லாமல் இந்தப்படி நடக்கிற யோகிகண்டாயருச்சுனா எனக்கு உரித்தானே சுபாவகுணவானென்றவாறு. ✲ ஒன்றினுமாசையின்றி யென்றதவிடம் இகழ்பவா நட்டாரென்ப [illegible] பொருட்டேடார் அதெப்படியென்னில் ஆத்மஞானத்தைத் தவிர வே

ளுன்றிலு மாசையில்லாமல் பஞ்சேந்திரியங்களின் வழியே போ காமல் அந்தவழியை அடைத்து நல்லதுபொல்லாதெல்லாஞ்சமமா ய்புண்ணியபாவங்களை விட்டு வருத்தம் வந்தபோது தாழ்ந்த காரி யத்தைச்செய்யாவிட்டாற் றீராமற்கொல்லுகிறதான சாவுவந்தாலு ந்தாழ்வுசெய்யாமற் சுகம்வந்தபோது சந்தோஷிக்கிறதுந் துக்கம் வந்தபோது கிலேசிக்கிறதுமில்லாமல் முன்போன பொருளுக்கெ ன்றைக்குந் துக்கியாமல் இனிமேல் வரப்பட்ட பொருளுக்கு இப் போது வரவேண்டுமென்றாசைப்படாமற்பகைக்காரர்சினேகிதரென் கிறபேதமான ராகத்துவேஷமில்லாமல் சுகந்துக்கம் அவமானம் மானம் சீதளஉஷ்ணங் கீர்த்தி பழி யிவைகளிலே சமமாகி ஒன்று டனுங் கூடி வாழ்கின்றதானசங்கமில்லாமல் இப்படிநடக்கிறயோ கி தான் கண்டாயருச்சுனா! எனக்குப் பிரியனென்றவாறு. ※ மற்றவென்பது சகலசீவனும் என்தானாலும் அவர்களைத்தவிர இப்ப டிக்கொத்தவன் பிரியனென்றது இதற்குமேல் மற்றசீவன்களெல்லாம் பிரியாப்பிரிய மல்லாதவர்களென்ப தாயிற்று. ராகமாவது-ஆசை- துவேஷமாவது - கோபம் கூடிவாழ்கிறதாவது -மனதிலேயென்னை த்தவிர வேறொன்றைக்கூடிவதெல்லாஞ் சங்கமென்பது- ஆகையால் சங்கவாசிதப்பண்ணி நிர்ச்சங்கனாயிருக்க வேண்டுமென்றது. இனி விரிக்கில் பெருகுவாம். (௰௯)

செயத்தகுவதுவுமாகிச் சேர்ந்தவர்க் கல்லறீர ............ .... ※
வுயத்தொடுபோவதான பொருளையா னுரைத்தவண்ண ... ※
மியற்படவுணர்கிற்பாருக் கியானமிக வினியனென்றான் .. ※
மயக்கறவொருவராலு மறிவரிதாய மாயோன் ......... ...... ... ※

(இ-ள்.) அப்பியாசஞ் செய்த்தக்கருமாகிச் சேர்ந் தவர்க ளுடைய துக்கந்தீரத்தக்கதாகத் தப்பிப்பிழைக்கக் கொண்டுபோகி றதான ஆத்மஞானமான பத்தியை நான் சொன்னபடி இந்தப் பத் தியே சுவாவமாக உண்டாக அறியமாட்டுகிறவர்களுக்கு நான் மிகவு ம்பிரியனென்று சொன்னார் ஒருவராலும் மயக்கந்தீர அறியப் படா தகிருஷ்ணசுவாமி யென்றவாறு.— (௨௰)

பத்தியோக வத்தியாயம் முற்றும்.

ஆக அத்தியாயம்-௰௨-இ-கூடியசெய்யுள் (௩௱௩௰௩)

பதின்மூன்றாவது.

# பிரகிருதிபுருடயோக அத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

விடம்படுபணமுடி யரங்கின்மிசையேறி ...... ........*
நடம்பயிலுநாயகன் மறித்துமிகு ஞானஞ் ......... ..*
சடம்படுபிணிப்பிறவி யென்றிவை தரித்த ....... ......*
முடம்பொடுயி ரானவை யுரைத்தருள லுற்றான்... ...*

(இ-ள்.) விஷமுண்டாகிய படமுள்ள சிரசாகிய நாடகசாலையிலேறியாடுகின்ற கூத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி திரும்பவும்மிகுந்தஞானமும் மிகுந்த அஞ்ஞானமு முண்டாகிய நோயையுடைய பிறவியென்று சொல்லப்பட்ட இவைகளைத் தரிக்கப் பட்டவுடம்புடனே ஆத்மாவானதை உபதேசித் தருளுவ தானு மென்றவாறு.— (௧)

உடம்பெனவுரைப்பது விருண்பவைக ளெல்லா .... .....*
மிடம்பட விளைப்பதெதிர் காணலுறு மீதார்..... .... ....*
திடம்படவுமற்றிவை தெரிந்துணரு மெய்யைக்..... ....*
கடம்படுமுயிர்ப்பொரு ளெனப்பகர்வர்கற்றோர்......*

(இ-ள்.) உடம்பென்றுசொல்வது-ஆத்மாபொசிக்கின்றவைகளுக்கெல்லாம் விசாலமுண்டாகவிளையப்பண்ணுவதுகண்முன்னே காணப்படும் இந்தச்சரீரம் ஆதலால் நிச்சயமாகவும்-சந்தோஷமாகவும்- இவைகளைத்தெரிந்து அறியப்பட்ட சத்தியத்தை ஆதரிக்கப்பட்ட ஆத்மாவாகிய பொருளென்று ஆத்மசொரூப மறியத்தக்கப்பெரியோர்கள் சொல்லுவார்களென்றவாறு. (௨)

மன்னவுடலியாவையினு மன்னியறிவாகி .......... *
யுன்னுமுயிர் நானிவை யிரண்டினையுமோர்காற்..*
றன்மையினிலியாதறிபின் மற்றதனை ஞான ....... *
மென்னவுணர்வாயிஃதெனக்குமிசைவாமால் .. *

(உ௧)

(இ-ள்.) இராசாவே; சகலசரீரங்களிலும் நிலைமையாக நின்று அறிவாகி நினைக்கப்பட்ட ஆத்மாவானது நான்இந்தச்சரீரம்ஆத்மா வென்றவிரண்டையு மயக்கமறத் தெளிந்த சுபாவத்திலேயே திவ்வியமொன்றுண்டோ அந்த ஞானமென்றறிவாய் இந்தஞானமெனக்குஞ் சம்மதமாம் எல்லாருக்குஞ் சம்மதமா மென்றவாறு. (ரு)

மற்றிவ்வுடறன்னின்வர வுங்குணனும்வந்தாங் ........... *
குற்றமைவிகாரமு முயிர்க்குறுநிதானு .................*
நற்றவர்கள்வேறுபட வோதினர்களுனுஞ் ............ *
சொற்றொகையினுளிவை சுருங்கமொழிவன்கேள் ... *

(இ ள்.) ஆத்மாவைத்தவிர மற்ற இந்தச்சரீரத்துடன் வரவுங்குணமுஞ் சரீரம்வந்த அவ்விடத்தி லுண்டாயமைந்தவிகாரமுமிந்தச்சரீரத்தினாலே ஆத்மாவுக்குள்ள பிரயோசனமும், இவையெல்லாம் நல்லதவம்பண்ணின ரிஷிகள்வேறுவேறாக முன்விரித்துச்சொன்னார்கள் இப்போதுநானும் இதைச் சொல்லினுடைய தொகையினாலேசுருங்கச் சொல்லுவன்கேள் அருச்சுனாவென்றவாறு. (சு)

எப்பொருளினும்பரவி யெங்குமுளவாகும் ...... *
அப்பெரியபூதமவை யைந்துமவையினு....... *
மொப்பரியதானுமவை வந்துமுனுதிக்கும்......*
பொய்ப்பகையில்புந்திமகா னென்றவொருடானும்.

(இ-ள்.) எந்தப்பொருள்களினும் அதிகமாகப்பரவி யெங்குமுண்டாயிருக்கப்பட்ட அந்தப்பூதமானவைகளைந்தும் அந்தப் பஞ்சபூதத்தை யுண்டாக்கப்பட்ட ஒப்பில்லாத அகங்காரமும் அந்த அகங்காரம்வந்து முன்னே உண்டாகப்பட்ட பொய்ப்பகை யில்லாமல் பொய்ப்பகையாயுள்ள புத்தியும் அந்தப்புத்தி யுண்டாக்கப் பட்டமகானென்ற தத்துவமுமென்றவாறு. ☼ இவ்விடத்தில் நானென்றதகங்காரம் அகங்காரத்தில் ஆகாசாதிபூதமொன்றி லொன் றுண்டாகின்றது எப்பொருளினும்பெருகு மெங்குமுளவாகுமென் றுபாடமோதில் பெருகின்பொரு ளெந்தப்பொருளினும் அதிகமாகப்பெருகப்படாது எங்குமுண்டாகப்பட்ட தென்பது. (ரு)

காதலிவிவ்வெட்டும்விளை காரணமுமொன்று ............ *
யோதவரிதாயபுல னைந்துமவையுள்ளு ..................... *

மாதவறியாதபொறி யைந்துமவையாலே.................*
யேதவினைசெய்கரண மூன்றிறேடிரண்டாம்.........*

(இ-ள்.) ஆசையில்லாதஎட்டுக்காரியமுமுண்டாகப்பட்டகாரணமுமொன்றாகச் சொல்லப்படாத பஞ்சேந்திரியங்களும் அவைகள் நினைக்கப்பட்ட தாவதையறியாத அஞ்சுபொறிகளும் அவைகளாலேகுற்றமுள்ள கருமத்தைச்செய்யப்பட்ட அந்தக்கரணமஞ்சுமென்றவாறு. (௬)

இற்றிவையனைத்துமிட ரின்பமுதல்யாவுந் ..................*
துற்றமைவிசாரதை தொடர்ந்ததொகைகண்டாய்.....*
நற்றவவுடம்பென வியம்புவது நல்லோ ..............*
ருற்றவுடனுக்குரிய ஞானமுமுரைப்பாம்...................*

(இ-ள்.) இவைகளெல்லாம் துக்கசுகமுதலானவெல்லாம் நெருங்கியமைந்த விசாரந்தொடர்ந்த தொகையைத்தான் கண்டாய்நல்லதவம்பண்ணின அருச்சுனா! தேகமென்றுபெரியோர்கள்சொல்வது இத்தனையுமுள்ள விகாரக்கூட்டமாக விருந்த இந்தச் சரீரத்துக்கு உரித்தான ஞானமும் சொல்லுவோமென்றவாறு. ௸ எப்பொருளென்ற கவியும், காதலிலென்றகவியும், இற்றிவையென்றகவியும்; ஒருதொடர். நற்றவகண்டாயெனவும், நல்லோரியம்புவதெனவுமாறுக. துக்கசுகமுதலானவென்றவையுந்; தேகவிரிவையும் விரிக்கில் வெகுவிரிவாம் ஆகையாற் சுருக்கினது. (௭)

(கலிவிருத்தம்.)

மானமும்பிறர்தனை மறிக்கப்பண்ணலு.........*
மூனமும்பிறவுயிர்க் குறுகண்செய்கையு..........*
மியானெனுஞ்செருக்குமிவ் விகபரங்களி.......*
லானபேராசையோ டறுக்குமாற்றலும்..........*

(இ-ள்.) மானமும் அன்னியர்தன்னைத் துதிசெய்யவேண்டிமறிக்கப்பண்ணுகின்றதும் பிறனையூனமாக நிந்திக்கின்றதும் அன்னியஜீவனுக்குத் துன்பஞ்செய்கின்றதும் நானென்கிற அகங்காரமும் இந்தஇகலோக அந்தப்பரலோகங்களில் வைக்கின்ற தானஆசையுடனே இவைகளை யெல்லாம் ஒறுக்கப்பட்ட பலமுமென்றவாறு. ௸ மானமாவது-எனதென்கிறசுதந்திரம்வெகுயானம் அவமானமெ

ன்பாருமுளர். அதாவது-தனக்குபகாரரை வெகுமானித்தலும் அபகாரரை அவமானித்தலுமாம் இவ்விகபரமென்பது இந்தவுபதேசமிருந்து சொல்லுமுலகமிதனாலே அந்தப்பரலோகமென்று வந்தது;

பெற்றனையனையொடு பெண்டிர்மக்கள்பா ... .... *
லுற்றெழுமவாவுட னுடம்பின் றாய்மைபு......*
மைந்தனைவப்பொறிகளின் வாயின்வாழ்க்கையுஞ்*
செற்றமுஞ்சிறியவர் குழுவுந்தீர்தலும் ... ... . ... *

(இ-ள்.) தானசஞ்சிதத்தினாலே பெற்றவீடுடனே மனையாள்பிள்ளை இவர்களிடத்தில் வைத்தெழும்பப்பட்ட ஆசையுடனே சரீரசுற்றமுமற்ற அஞ்சுபொறிகளினாலும் பஞ்சேந்திரியங்களினாலும்வருகின்றவிஷயங்களை யனுபவிக்கின்றதுங் கோபமுமுடைய கூட்டமுமிவைகளெல்லாம் விடுதலுமென்றவாறு. ❋ இதனால்மனசுத்தமும்பெரியவர்களினுடைய வுறவும்வேண்டுமென்ற தருத்தாபத்தி.(௯)

ஒருபெரும்பொருளையே யுளத்துவைத்தலும் ..........*
மிருவினைகெட்டவ ரிடங்களெய்தலுங்............... *
குருவினைவழிபடு குணமுங்குற்றமென் ..... ...............*
றுருவினையுள்ளவா றுணருமுண்மையும் ..................... *

(இ-ள்.) ஒப்பில்லாதபெரிய ஆத்மாவையே மனதில் வைக்கின்றதும் புண்ணியபாவங்களைக் கடக்கின்றபெரியவர்களிடங்களிலே சேருகின்றதுங் குருவைப்பூசை பண்ணுகின்ற குணமுந் தேகத்தைக்குற்றமென்று உள்ளபடியறிகின்ற வுண்மையும் வேண்டும்.(எ-று.) ❋ பொருளேயே யுளத்துவைத்தலென்ற வேகாரத்தாலேவே றொன்றையும் நினையாதேயென்றது - பெரியவர்களைச் சேருதலாலேஞானம்வளரும் குருவேதெய்வமாகையால்- பூசிக்கவேண்டுமென்றது தேகத்துக்குக் குற்றமாவது- செனனமரணம் பாலயவ்வனகவுமாரவியார்த்திபம் வியாதிதுக்கமிவை முதலானவைகள். (௰)

முன்றிகழ்பிறப்பொடு மூப்பிறப்பினாற்...........*
சென்றடையிடும்பையைச் சிந்தைசெய்கையு. ... *
மென்றிவையனைத்துமற் றிவற்றினாலினிச்.......*
சென்றடைபொருளினை தெரிந்துகேளென......*

(இ-ள்.) முன்னேவிளங்கப்பட்ட பிறப்புடனே மூப்புச்சாவி னாலேவந் தடைகின்ற துக்கத்தை நினைக்கின்றது மென்றுசொல்லப் பட்ட இவைசகலமும் நீங்கினவிது ஞானம் இந்தஞானத்தினாலே இ னிமேற்போய்ச் சேருகின்றஆத்மாவைச்சொல்லுகின்றோம் தெரிந் துகேளென்றவாறு. ஞானமுமென்றகவியும், பெற்றனவென்றக வியும்ஒருபெருமென்றகவியும்;மூன்றிகமென்றகவியும்,ஒருதொடர்.

ஆதியந்தமிலதழியாதுநின்றபெருமையை ......... *
சோதிலுண்டிலையெனுமுரையின்றியொழிவது ..... *
நீதியின்கணெங்குமாகியெங்குநிறைதவி ........ *
ஞோதருங்கைதலைசெவிகால்களெங்குமுடையது ....*

(இ-ள்.) முதலுமுடிவு மில்லாதது அழியாமல்நித்தியமகாநீ சலியாமல்நின்ற பெருமையையுடையது சொல்லுமிடத்தில் என்று முள்ளது இல்லையென்கின்ற குற்றமில்லாமற் றீர்வது நியமிக்குமிட த்தில் எல்லாமாகி யெங்கும் நிறைதலினாலே சொல்ல அரிதாகிய கை கள் தலைகள் காதுகள் கால்களிவைகளெங்கு முடையதென்றவாறு.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

காணும்புலன்களனைத்திற்குங் கண்ணாய்நின்று காட்டுவது ..... *
பேணும்புலன்கடனக்கொன்று மில்லாதியன்ற பெற்றியது... ... *
பூணும்பற்றுந் தனக்கின்றி யெல்லாந் தானே பொறுக்கின்ற ..... *
தாணும்பெண்ணு மலிகுணமு மன்றியேநின் றுகியது............*

(இ-ள்.) காணப்பட்ட கண்களெல்லா வற்றிற்குங் கண்ணாக நின்றுகாட்டுவது மதிக்கப்பட்ட விந்திரியங்களொன்றுந்தனக்கில் லாதது எல்லாம் வல்லசுபாவமுடையது சுமக்கிற பிடிப்புத்தனக்கில் லாமல் எல்லாவற்றையுந்தானே சுமக்கிறதுதான் ஆணும் பெண்ணு ம் அலியுமில்லாமலே நின்று அந்தமூன்றுமான தென்றவாறு. காணப்பட்ட விந்திரியங்களென்றுமாம் அதெப்படியென்னில் அந் தந்தவிஷயத்தை அந்தந்த விந்திரியங்களால் அறிவதே காக்ஷியா கலால்.— (௫௬)

(கலிவிருத்தம்.)

பூதமைந்தினகத்தினோடு புறத்தினும்பொலிகின்றதிங்......*
சேதமின்றிநடப்ப நிற்பனவாயிருப்பதினின்னதென்... ...*

றேதரும்படி நுண்ணிதாகிய தோன்றதாகி யிருந்துமெய்ப்*
பேதம்வந்தது போலநின்று பிணங்கவும்படு கின்றதே .....*

(இ-ள்.) பஞ்சபூதங்களினுடைய வுள்ளிலும் புறத்திலும்பொரி யிபப்பட்டதுஇவ்விடத்திலே குற்றமில்லாமல் நடக்கிறது நிற்கிறதா யிருப்பதான சராசரங்களில் இன்னதென்று சொல்லக் கூடாதபடி நுண்ணியதாகியது இப்படி அளவற்றபேதங்களில் நுண்மைபாகவி ருந்தாலும் அனேகமாகாமல் ஒன்றாகியிருந்து சரீர பேதங்கள் வந் து அந்தச்சரீரங்களைப் போலத் தானும் அனேகபேதங்களாக நின் று ஒன்றுக்கொன்று சமாதானமில்லாமற் பிணங்கவு மிதை நிச்சய மாக வறிந்தபோது எல்லாம் தானேயென்றுசமாதானமாகவும்உண் டாகின்றதென்றவாறு. ✻ பிணங்கவுமென்ற வும்மையால் இணங்க வுமென்றெதிர்தழுவும் இதை விரிக்கில் வெகுவாம். (௰௪)

அருவமாயதி தூரமாயதணித்துமாய தலைத்துமா ........ .... *
யுருவம்யாவுமளித்துமீள வொழிக்குநாளி லொழிப்பது... *
பொருவிலாவொளி கட்குமுள்ளொளி யாகியேபொலிகின்றதிங்.*
கிருமைநீடிய ஞானமோடது நேயமாக விசைந்தது... ....*

(இ-ள்.) உருவமில்லாததாய் அஞ்ஞானிகளுக்கு வெகு தூரமா மீஞானிகளுக்கு வெகுகிட்டமானது சகலமுந்தானாய் உருவங்களெ ல்லாம் உண்டாக்கித் திரும்பப்போக்கிற காலத்திலே போக்கு வது ஒப்பில்லாத சோதிகளுக்கு உளளே நின்ற சோதியாகியேபொலிகின் றது இவ்விடத்திலே இம்மை மறுமையிலே பெருகிய ஞானமும்அ தினுடனே நேயமுமாகப்பொருந்தின தென்றவாறு. ✻ ஆதி யந்த மென்றகவியும் காணும்பலனென்ற கவியும் பூதமைந்தென்ற கவியு ம் அருவமாயதென்ற கவியும் ஆத்ம சொரூபத்தைச் சொன்னதினா லே யொரு தொடர். (௰௫)

ஆனவிப்பொருள் முன்புரைத்த வவற்றினாலறி யும்பொரு..*
ளூனமற்ற மனத்தனுயதல் லுடம்புமற்றவ் வுடம்புசேர்... *
ஞானமுற்றுமவற்றினாலறி யப்படும்பொரு ளன்மையு......*
மீனமற்றதிறத்தியோடு சுருக்கமாக வியம்பினேன்........ *

( இ-ள். ) இப்படியான இந்த ஆத்மாவானது முன் சொன்ன சரீரஞானங்களினாலறியப்பட்டபொருள் குற்றந்தீர்ந்தமனசுடைய

அருச்சுனு நல்லவுடம்புமற்ற அந்தவுடம்பைச் சொந்தஞானமுதிர்ச்சி இந்த வுடம்புஞானமென்ற விரண்டினு லறியப்பட்ட ஆத்மலாபமும் குற்றமற்றவிதத்துடனே சுருக்கமாகச் சொன்னே னென்றவாறு.— (௰௬)

எள்ளலானதிகழ்ந்தியான்முன் ஞனொத்தவிப்பொருளிதெலா *
முள்ளவாறுதெரிந்தெ னன்பர் தமக்குணர்ந்திடவோதினேர் *
கள்ளமாதரு மாயவேலை கடந்துகாதல்செய் யின்பமாம் *
வெள்ளமாமெனை யெய்துவாமெனவேறுகூற விரும்பினன் *

(இ-ள்.) இழவானதைநீங்கி நான்முன் சொன்னஇந்த அர்த்தங்களிவையெல்லா முள்ளபடி தெரிந்து என்னுடையபத்தர் தங் கருக்குத்தெளிவிக்க ஓதினபேர்கள் வஞ்சனையான மயக்கத்தைக் கொடுக்கப்பட்ட மாயாசமுத்திரத்தைக் கடந்து ஆசையுண்டாக்கப்பட்ட சுகமானவெள்ளத்தை யொப்பான வென்னை யடைவார்க ளென்று சொல்லிமேல்வேறேசொல்ல விச்சைபாரு றென்றவாறு. ❋இப்பொருளிதெலா மெள்ளலான திகழ்ந்துள்ளவாறு தெரிந்தெனப் பொருளுக் கெற்பமாறுக. (௰௭)

(கலிவிருத்தம்.)

ஓதியவுடம்புக்கு முயிர்க்கு முண்மையா........... ....*
யாதிகண்டறிபவ ராரு மில்லையாற் ........................*
தீதிலிவ்விரண்டுமுன் செய்வ தேதெனி .....................*
னீதியினவற்றினை நிகழக் கூறுவாம்.............. ......*

(இ-ள்.) நாம் முன்சொன்ன வுடம்புக்கும் ஆத்மாவுக்கும் சத்தியமாக ஆதியைக்கண்டு அறிகிறவர்களாருமில்லை யாகையால் இவையிரண்டும் அநாதி குற்றமற்ற விந்தவிரண்டும் முன்செய்கிறதேதென்பாயாகில் நியமத்தினுலே அவைகளை விளங்கச் சொல்லுவோமென்றவாறு. ❋ தேகத்தைப்பிரகிருதி யென்றும் உயிரைப் புருஷனென்றுஞ்சொல்லுவாருமுளர் ஆதியையறியப்படாதினுலே அநாதி யென்றது.— (௰அ)

நண்ணியகுணத்தின்வே றின்மை நாட்டலாற்..... ..... *
கண்ணியவிவைகளுக் குடம்பு காரணம் ..................... *
எண்ணியதுன்பமோ டின்ப மென்றிவை...................*
யுன்னியகாரண முயிரென் றின்றதே.......................*

(இ-ள்.) சொந்த குணத்தினுடைய செயலையல்லாமல் வேறி ல்லாததைத் திறத்துகிறதினாலே நினைத்தகருமங்களாகிய புண்ணியபா வங்களுக்கு உடம்புகாரணம் இந்தப் பிரகிருதி குணத்தால் வந்தபு ண்ணியபாவங்களைக் கொடுக்கப்பட்டதாக நிச்சயித்த சுகதுக்க மெ ன்ற இவைகளை யனுபவிக்கிற காரணமானது உயிரென்று சொல்லப் பட்ட புருஷனென்றவாறு. ※ இதனாலுடம்புசெய்து உயிரனுபவி க்கு மென்றது. (௰௯)

இவ்வுயி ரிவ்வுட றன்னிலேயிருந் ............................ *
தவ்வுடல் பயிற்றிடுங் குணங்க ளாவை ......... ......... *
துவ்வினைபிறந்திடுந் தோன்று மிக்குண ...................... *
மெவ்வநா னுடையனென் றிருத்தலால் ......... .. ..... *

(இ-ள்.) இப்தப்பிரகிருதியைக் குற்றமுடையநானென்றும் என் னுடையதென்றும் அகங்கரித் திருக்கிறதினாலே யிந்தபுருஷனாகிற சீவன் இந்த வுடம்பிலிருந்து அந்தவுடம்பை நடத்தப்பட்டபிரகிரு திகுணங்களான புண்ணியபாவங்களால் வந்த சுகதுக்கங்களை யனுப விக்குமாண மாகுஞ் சன்னமா மென்றவாறு. ※ அகங்கரியாமலனுப விக்கிற ஆத்மானுபவத்தைவிட்டு அசங்கரித்ததினாலே சுகதுக்கங்க ளையனுபவித்துச் சனனமரணப்படு மென்றது. (௨௰)

உண்பனயாவையு முண்கின்றுணு மெய்க் ................ *
கண்கொடெப்பொருளையுங் காண்கின்றுனுநா ....... *
னண்பமெப் பொருட்குமாத் திருக்குநாதனு .... ... *
மெண்செய்திவ் வுடம்பிலே நில்றிசேனே ................ *

(இ-ள்.) தோழா அனுபவிக்கப்பட்ட சகலத்தையு மனுபவிக்கிற வனும் உடம்பிலிருக்கின்றகண்ணைக்கொண்டு எந்தப் பதார்த்தங்களை யுங்காண்கின்றவனும் எந்தபதார்த்தங்களுக்கும் சமமா யிருக்கின்ற காத்தனும் இந்தவுடம்பிலே கர்த்தனென்ற கங்காரஞ்செய்துநின் றசீவனு மென்றவாறு. ※ ஈசனே—சீவன். (௨௧)

இப்படியுயிரையு மியாக்கை தன்னையு ........... ....... *
மெய்ப்படவறிந்தவன் வேட்டவைநுகர்ந் ......... ...... *
தொப்பனவன்றியே யொழுகி வாழினும் ......... ..... *
பொய்ப்படு பிறவியின் மறுத்தும் போகிலான். ......... *

(இ-ள்.) இப்படிச்சீவனையும், உடம்பையும், நிச்சயமாகஅறிந்தவன் வேண்டியவைகளைத் தனக்கென்றெப்புகிற தல்லாமல் அனுபவித்து நித்தியமாய்க்கூடிச் சுகித்தாலும் பொய்யாகவுடையபிறவியிலேதிரும்பவும் போய்ப்பிறவான மோக்ஷத்தையடைவானென்றவாறு. ※ அறிந்தவன் சுகியானென்பது கருத்து.—ஆகலால்அப்பிரகிருதியால் அனுபவம் வந்தனுபவித்தாலும் தனதென்று அகங்கரியான் அதனாலே மோக்ஷமுண்டென்பது. (உஉ)

செறியுமிப்பொருளையே சிலர்தியானமாங் ............ ....*
குறியினாற்றம்முள்ளே கண்டுகொள்வர்க ............ ....*
ளறிவருஞ்சாங்கிய யோக மாகிய ......... .... .......... ....*
நெறியினாலெங்குமாய் நிற்பக் காண்பரால்... .......*

(இ-ள்.) கனமான்விந்த ஆத்ம சொரூபத்தைச் சிலர்தியானமார்க்குறியினாலே தங்களுடையமனதிலே கண்டுகொள்வார்கள்சிலர் அறியப்படாத சாங்கியயோகமாகிய மார்க்கத்தினாலே உள்ளும்புறம்பும் எங்கும்பூரணமாய நிற்பக்காண்பார்களென்றவாறு. (உ௩)

இருமையுமறிவதற் கிடனில்லாதவர் ......... ..... ... ..*
ஒருமகன்றெய்வமென் றுரைத்தவொன்றையே..*
யருமையில நுச்சனை செய்வரர்தலான்..... .........*
பெருமையினவர்களும் பிறவியேவிடார்......... ..*

(இ-ள்.) இப்படித்தியானமென்றும், சாங்கியயோகமென்றும் சொல்லப்பட்ட இரண்டையும், அறிகின்றதற் கிடமில்லாதவர்கள் ஒருவருவனவர் தெய்வமென்று சொன்ன வொன்றைத்தானே யருமையினாலே பூசைசெய்வார்கள் அந்தப்பூசையினுடைய பெருமையினாலேஅவர்களும் பிறவியேசேரார்கள் ஆத்மாவைக்காண்பார்கள்.எ-று. ※ பூசிக்கவரும் தெய்வம் காட்டுவதினாலே ஆத்மாவைக் காண்பார்களென்பதாம். (உச)

போவனநிற்பனயாக்கைபூண்டுகொள் .... ... ...... ...... *
டியாவருந்துயர்ப்படு கின்றவீதெலாம்........... .......... *
மேவருமுயிருடல் வேறுபாடினை................. ....*
யாவர்கண்டறிவதோ ரறிவிலாமையே............. ....*
(உரு)

(இ-ள்.) நடக்கின்றது நிற்கின்றதுமான சராசரமாகிய தேகத்தைத்தரித்துக்கொண்டே யாருந்துக்கப்படுகின்றதிவையெல்லாமமனம்பொருந்துதலாக வரப்பட்டசீவனும் உடம்புமான பிரகிருதிபருஷிக்கூட்டம் இந்தப்பிரகிருதி புருஷர்களுடைய வேறுபாட்டை ஒப்பில்லாத ஞானமில்லாத அஞ்ஞானத்தை யுடையவர்கள் யார்கண்டறிகின்றவர்கள் காணமாட்டார்களென்றவாறு. (௨௫)

(இதுவுங்கலிவிருத்தம்.)

கெடுகின்றபூதங்க டோறுங்கெடாதே......... *
வடுவின்றிநின்ற மறைப்பொருடன்னை.......... *
நடுவென்றுகண்டவ னல்லனவெல்லாங்......... *
கடுகின்றனெயொழி யாவகைக்கண்டான்.......... *

(இ-ள்.) கெடுகின்ற பஞ்சபூதாத்துமாக்கள்தோறும் பிறந்துகெடாமல் குற்றமில்லாமல் நிறைந்திருக்கின்ற வேதப்பொருளானவஸ்துவானதைப் பொதுவென்றுகண்டபேரெல்லாம் நல்லவர்களென்று அப்படிக்கொத்தபே ரணுவுக்கணுவா எங்கும் நீங்காமலிருக்கின்றவகையைக் கண்டவர்களென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௨௬)

ஒத்தெங்குமாய வொருமைப்பொருளினை......*
யத்தன்மையினு லறியுமவனே.....................*
செத்தும்பிறந்துந் திரியாவகைதனை............ *
மெய்த்தன்மையிலே புகவிடுகின்றான்............*

(இ-ள்.) சமமாகியெங்குமாகிய ஒப்பில்லாமையையுடையஆத்மாவையெல்லாந் தானுகச்சமமாகியெங்குந்தானுகியஒருமையாகியசுபாவத்தினு லறியப்பட்டவனே செத்தும்பிறந்துந்திரியாதபடிக்குத்தன்னைச் சத்தியசுபாவத்திலே புகுதவிடுகின்றவனென்றவாறு. ❀ சமமாவது அணுவுக்கு அணுவாய்மகத்துக்கு மகத்தா யிருப்பதுசத்தியசுபாவமாவது பிரமசுபாவம்பிரமமொன்றுதவிரமற்றவெல்லாம் சத்தியமாதலாற் பிரமத்தைச்சத்தியமென்றது. சுபாவமாவது எல்லாந்தானுய் ஒன்றிலுங்கூடாதாய் அசையாதாய் சைதன்னிய மாய் நின்மமாயிருப்பது இன்னஞ்சொல்லிற்பிரிவாம் பிரமத்தையேஆத்மாவென்பது. (௨௭)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

உணரவிகாரியென்றும் வினைபெலாமுடம்பினோடே ... ... *
புணர்வனவென்றுங்கண்டான் பொய்யிலாமெய்மைக்கண்டா... *
இணர்மலர்முடியாயெல்லா வினைகளுஞ்செய்தாலீசன் .... .... *
குணமிலியாதலாலே யவற்றொடுங்கூடிநில்லான் .... .... *

(இ-ள்.) சைதன்னியமான ஆத்மாவை விகாரங்களில்லாத அவிகாரியென்றுங் கருமங்களெல்லா முடம்போடே பொருந்துவதென்றுங்கண்டவனே பொய்யிலாதமெய்யைக் கண்டவன் பூங்கொத்துக்களைத் தரித்தகிரீடத்தையுடைய அருச்சுன; இப்படி அவிகாரியான ஆத்மா வுடம்போடேகூடி யந்த வுடம்பாலே கருமங்களைச் செய்தாலுங் குணமில்லாதநிர்க்குணனானபடியினாலே அந்த வுடம்போடுங்கருமத்தோடுங் கூடிநில்லானென்றவாறு; ❈ உணர்வு இவ்விடத்தில் ஆத்மா இதனாலே ஆத்மாவுடம்போடுங் கருமத்தோடுங் கூடாமல்நிற்பனென்றும் அந்தவுடம்புங்கருமமும் ஆத்மாவைக்கூடிநிற்குமென்றும் அறிவது. (உ௮)

உன்னியவானமெங்கு மொழிவறநிறைந்தவேனுந் ... *
தன்னுடைநுண்மையாலே பிறவொடுஞ்சார்வதுண்டோ ... *
பன்னியவதுபோலெங்கும் பரந்துளனேனுமங்கு ... *
மன்னியவீசனந்தவுடம்பொடு மருவமாட்டான் ... *

(இ-ள்.) எல்லாருநினைத்த ஆகாயமானது அணுவத்தனையிடமானாலு மில்லையென்பதா நீரவெங்கும் நிறைந்ததானாலும் தன்னுடைய சூக்ஷுமத்தினாலே மற்றவாய்வு-அக்கினி-அப்பு-பிருதிவு-என்ற நாலு பூதங்களோடுங் கூடுவதுண்டோ அந்தநாலும் இந்த ஆகாசத்தைக் கூடாமையுண்டோ இரண்டுமில்லையே யிப்படி வேதங்கள்முறையிட்டனபோல ஆத்மாவெங்கும் பரந்திருக்கின்றவனானாலும், உடம்பான அந்தவிடத்திலிருக்கின்ற ஆத்மா அந்தவுடம்போடுங் கூடமாட்டானென்றவாறு. ❈ ஒழிவறவெங்கும் நிறைந்தவென மாறுக. ஆகாசம்வந்தவிடத்திற் பிறவென்றதனாலேமற்றநாலுபூதமுமாயின. ஆகாசத்தை நாலுபூதமு மாதாரமாக வுடையதுபோல ஆத்மாவை யாதாரமாக வுடையது உடம்பென்பதருத்தாபத்தி. ஈசன் இவ்விடத்தில் ஆத்மா. (உ௯)

இரவிதானொருவனேயாய் நின்றிந்தவுலகத்தோங்கும் ... *
விரவியவிருளை நீக்கி விளக்குறுமாறுபோலத் ... *

தரவியாவருமுன்னில்லா சராசரருடம்புதோறும்.........*
பரவியானுரைத்தமாய னொருவனேபரந்துநிற்பான்.... ....*

(இ-ள்.) சூரியனானவன் தனக்கிரண்டாவதில்லாமற் றானொருவனேயாகிநின்று இந்தவுலகத்திலெங்குங் கலந்தவிருளைப் போக்கிப் பிரகாசிப்பிக்கிறபடிபோல முன்னே தன்னை யுடண்டாக்கயாருமில்லாதவனாய் இப்போது நான்விரித்துச் சொன்ன மாயனான் ஆத்மாவானவன் தனக்கிரண்டாவதில்லாமல்தானொருவனுமேசராசரங்களுடைய வுடம்புகள்தோறும் பரந்துநிற்பானென்றவாறு. ✲தரவியர் வருமில்லாமாயனெனமாறுக. இன்னமும்முன் றரவியாவருமில்லாமற்றானே தந்தசராசரருடம்புதோறுந் தானொருவனேபரந்துநிற்பானென்றுஞ்சொல்லலாம். (௩௰)

ஓரினமேலாகிநின்ற வுயிரினோடுடம்புக்குள்ள ......*
பேரினோடிறப்புமூப்புப்பிறப்பெனுமிவற்றைவேறாய்.
பாரின்மேலறிவார்வீடுபற்றினாரொன்றன்பார்த்தன் ...*
தேரின்மேனின்றுவேதச்சிரத்தின்மேலிருக்குஞ்சீரோன்.

(இ-ள்.) விசாரித்தறியில் எல்லாவற்றக்குமேலாகிநின்றஆத்மாவை அது உடனே உடம்புக்குள்ள பேருடனே சாவுமூப்புசனனமென்று சொல்லப்பட்ட இந்தநாமஞ்சாவுக்கிழப்பிறப்பாகியஇவைகளைவேறாகப் பகுத்துப்பூமியினிடத்தி லறிகின்றவர்களே மோக்ஷத்தையடைந்தவர்களென்றார். அருச்சுனனுடைய தேரின்மேலே நின்றுவேதச்சிரசின்மே லிருக்கப்பட்ட சிறப்புடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்றவாறு. (௩௧)

பிரகிருதிபுருஷயோக- அத்தியாயம்- முற்றும்.

ஆக அத்தியாயம்-௰௩ இ-கூடியசெய்யுள்(௩௭௩௰)



பதினாங்காவது.

# குணத்திரயயோக

## அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

செய்யமாமலர் மேலுறைசெல்வியும் ...... ..... *
வையமாமட வாளுமகிழ்ந்தசோ ............ ... *
ஐயன்மெய்ம்மையன் பாலடிபோமெலா .......... *
முய்யமீளவுணக்கத் தொடங்கினான் ..... .... . ... *

(இ-ள்.) சிவந்தபெரியதாமரைப் பூவின்மேலிருக்கின்ற லட்சுமியும், அறியாமையையுடைய பெரியபூமிதேவியுங்கூடி மகிழ்ந்ததிருத்தோள்களையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமிகிருபையினாலே அழுமையான நாமெல்லாம் பிழைக்கும்பொருட்டாகத் திரும்பவும் அந்தச் சத்தியமான ஆத்மாவைச்சொல்லத் தொடங்கினானென்றவாறு. லட்சுமியையும், பூமிதேவியையும், ருக்குமணியென்றுஞ்சத்தியபாமையென்றுஞ் சொல்லலாம். (௧)

நல்லவர்மறிவி யாதினுநல்லது ..... ............ *
மல்லறீர்தவத் தோர்க்கறியாவது .... ...... . *
மல்லவாவியதோண்முடி மன்னியான் ...... *
சொல்லமேயவ தன்றுணிவாவதே .......... *

(இ-ள்.) முன்சொன்ன ஞானத்திலும், நல்லதான ஞானமெல்லாவற்றிலு நல்லதாங் குற்றந்தீர்ந்ததவம்பண்ணுகின்ற ரிஷிகளுக்கு அறிவாகியது மறபோலா யிச்சிததோளையுங்கிரீடத்தையுமுடைய ராஜாவே! அந்த ஞானத்தினுடைய உறுதியானதை இப்போது நானுனக்குச்சொல்லப்பட்டதென்றவாறு. (௨)

இன்னதன்மை யிஞ்ஞானத்தி யற்கையா........ ......... *
லென்னைவந்தடைந் தாரிவ் வுலகினில்.......... ........ *
பின்னைவந்தடை யாரிற வராதன் .... ........ ... ......... *
றன்மையாதெனி லாங்கது சாற்றுவாம்.................. *

(இ-ள்.) இந்தசுபாவமான இந்தஞானசுபாவத்தினாலேவந்து என்னை யடைந்தபேர்கள் பிறகு சிருஷ்டி காலத்தில் இந்தப்பிர பஞ்சத்திலேவந்துபிறவார்கள் பிரளய காலத்திலே சங்காரத் துக்குங்கூடார்கள்—அந்த ஞானத்தினுடைய சுபாவ மென்ன வென்றா லதுசொல்லுவோ மென்றவாறு. ❋ ஆங்கு—அசை—பின்னர்வ் வுல கெனமாறுக-காலந்- தோன்றுவெரூவாய் - வந்தடைதலாவது-அஞ் ஞானத்தைநீங்கி ஞானத்தில்வந்தென்னையடைதல். (௩)

மூதவாவென்குணமவை மூன்றினும் …… …… …… …… ……*
பேதமாகப் பிரகிருதி தன்னிலே …… ……… …… ……… *
காதலால்வைப்ப னியான்கருவைக்கருப் ……… ……… *
பூதமியாவும் புலப்படு கின்றதே……………………*

(இ-ள்.) பழையதவசையுடைய அருச்சுனா! என்னுடைய குண மூன்று அந்தமூன்றிலும் பேதமாகப் பிரகிருதியிலே நான் விசுவா சமாகக் கருவைவைப்பேன் அந்தக்கருவைச்சகலபூதங்களுங்கெற்பிக்கி ன்றதென்றவாறு. (௪)

இந்தவண்ணத் தினாலிவ் வுலகிடை ……… ………………… *
வந்துயோனியெல்லாம்வரு வித்திடுந் ………………… ……… *
தந்தையாயிவை யீன்றளிக் கின்றதா ………………………… *
யந்தமாமலர் மேலய னுமென்றே………… … ……*

(இ-ள்.) இந்தவிதத்தினாலே இந்தப் பிரபஞ்சத்தி லிடத்திற் பிரகிருதிவந்து சகலயோனிகளையும் வரப்பண்ணுகிற தகப்பனாகி அந் தயோனிகளைப்பெற்று ரக்ஷிக்கிறதாகிய அந்தப்பெரிய தாமரைப் பூவின்மே லிருக்கிறபிரமம் தேவனாகு மென்றவாறு. (௫)

என்றுமுன்னங் குணமென் றியம்பிய……………… … …*
மூன்றுமூலப் பிரகிருதி தன்னிலே ……………………… ……*
தோன்றியுள்ளன தொல்லறி வைப்பற்றி ………… …… *
யூன்றிநிற்ப வவற்றை யுணர்த்துவாம்………………*

(இ-ள்.) முன்பொருர்தின் குணமென்று சொன்ன மூன்று ம் மூலப்பிரகிருதியிலே தோன்றியுள்ளது அந்தக்குணங்களானவை பழைய ஆத்மாவைச் சனன மரணத் துக்கு ஏது வாகப் பிடித்து

ஊன்றிநிற்பது அந்த மூன்றுகுணத்தையும் அறிவிப்போமென்ற வாறு.— (௬)

சத்துவம்மி ரசத தாமத மென ........ ..... ........ *
வுய்த்துவந்த பெயரை யுடையன ........................ *
வெத்துவந்து விளந்தரு கிற் பன ...... ........ ........ *
மெய்த்துவந் தவற்றின் செயல் வேறுகேள்...... ......*

(இ-ள்.) சத்துவகுணமென்றும் இராசதகுணமென்றும் தமோகுணமென்றும் வைத்துவந்த பெயரை யுடையது எந்தத்தத்துவங்களையுந் தாமாட்டுவது நிச்சயித்துவந்து அந்தமூன்றுகுணத்தினுடைய தொழில்களை வேறுவேறாகச் சொல்லுவோம் கேள் அருச்சுனா வென்றவாறு. ❊ துவந்துவ மென்கிறதை தொந்த மென்று வழக்கமாகச்சொல்லுவார்கள். (௭)

பற்றுமாசின்மை யாற்பளிங் கொப்பன..... ..... ........ *
வுற்றநல்லறி வான துண் டாக்குவ ........ . ..... ........ *
தெற்றுமின்ப மலர் துன்ப மென்பது.............. .....*
சற்றுமில்லது சத்துவ மாவதே,..........................*

(இ-ள்.) பற்றப்பட்ட ஆசையாகிய களங்க மில்லாமையினாலே பளிங்கைப்போல நின்மலமான து உறுதியான ஞானத்தையுண்டாக்குவது எது வந்தாலுஞ் சுகமில்லாமல் துக்கமென்பது சற்றுமில்லாதது சத்துவகுணமாவ தென்றவாறு. (௮)

ஒத்துமாசையி லேபிறந் துள்ளது .... ................ *
தாதுகற்புனை யுன்னிறஞ் சார்ந்தது .......... ....... *
பேறுசெய்வினை போடுறி வாய்ப் பின்னர்க்... *
கேதுவாய்வி ராசத மென்றதே............... ...*

(இ-ள்.) சொல்லப்பட்ட ஆசையிலே பிறந்திருக்கிறதுதாதுகற்புனை யுன்னிறஞ்சார்ந்தது மயக்கமுஞ் சொல்லப்பட்ட கர்மத்தோடுஅறிவாய் பிறகுவரப்பட்ட மரண சனனத்துக்கு ஏதுவாகியது ராஜதமென்கின்ற குண மென்றவாறு. (௯)

குறிகொளாத மயக்கமுங் கோதிலா............... .... .... *
நெறிகளான திகழ்தலு நித்திரை ........ ............ ...... *

செறிதலானது மென்றிவற் றுற் றின்ண ..............*
மறிவைமாய்க்கு மதுதம மாவதே..................*

(இ-ள்.) கேட்டுங் கேட்டதைக்கண்டும் மெய்யென் றொப்புக் கொள்ளாத மயக்கமுங் குற்றங்குடியா இருக்கின்ற மார்க்கங்களை னைக நடத்துகின்றதும் நித்திரை மிகுதலானது மென்று சொல்லப் பட்ட இவைகளினாலே நிச்சயமாக ஞானத்தையழிக்குமது தமோகுணமாய தென்றவாறு.— (௰)

(கலி நிலைத் துறை.)

வாழுஞ் சத்துவ மற்றவ் விரண்டையு மறைத்துத்..... ........*
தாழுமற்றவவ் விரண்டுமே தமோகுணந் தழைப்பின்...........*
வீழுஞ்சத்துவ தமங்களவ் விரசதம் விளையி ..........*
னூழிமற்றிவை யிரண்டு தாழ்ந் தொன்றியிக் குலவாம்:...*

(இ-ள்.) சத்துவகுணமானது ஒருவேளை அந்த ராசத தாமதமான விரண்டையுமறைத்துத் தானே பிரபலமாக வாழும் அந்தத் தமோகுணமான தொருவேளை பிரபலமாக எழும்பினாலே அந்தசத்துவராசதமிரண்டு மடங்கும் அந்தராசதகுண மொருவேளை மிகுந்துண்டானாற் சத்துவகுணமுந் தமோகுணமு மிரண்டும்விழும் இவைகள் இரண்டுந் தாழ்ந்து ஒன்று அதிகமாக இருக்கிறதுபழைய விதியினா லென்றவாறு. ※ மற்ற—அசை. (௰௧)

(கலிவிருத்தம்.)

உரைசெயுந் தத்துவ மின்பந் துய்த்திடு .....................*
மிரசத வினைகளோ டறிவை யார்த்திடும் ........ .........*
புரைசெய்திவ் வழுக்கையே பொருந்தப் போர்த்திடும்*
தரைசெறி புகழினாய் தம்மென் கின்றதே........*

(இ-ள்.) பூமியெங்கும நெருங்கிய கீர்த்தியையுடைய அருச்சுனா! சொல்லப்பட்ட சத்துவ குணமானது சுகத்தையனுபவிக்கப்பண்ணு ம்ராஜதகுணமானது கருமத்துடனே அறிவைக்கட்டுந் தாமத மென்றகுணமானதுகுற்றத்தைச்செய்து இந்த அஞ்ஞானத்தைமூடுமென்றவாறு.— (௰௨)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒத்துநல் லறிவுமிக்க யாதொரு பொழுதப்போது.........*
சத்துவந் தழைத்த போதாந் தாங்கரும் வினைக ளேகொண்*

டுய்த்தவற்றுசைகூர வுலோபம்வைந் துய்த்போது... ... .....*
மத்திம குணமேசால வளர்ந்ததென் றறிநீ மன்னு... ..... *

(இ-ள்.) ராசாவேசகலஇந்திரிய அந்தக்கரணங்களிலுஞ் சமமாக்வொத்துஞானமிகுந்தபொழுதெப்பொழுதோ அப்பொழுது சத்துவகுணமிகுந்து வளர்ந்தபொழுது தாம்செய்து முடிக்க அரிதானகருமங்களையே செய்து முடிப்போமென் றுட்கொண்டு வைத்து அபிலாசை மிகுதியாகலோபம்வந்து கூடியிருந்தபோது சத்துவதமகுணங்களுக்கு நடுவான ராசதகுணமே மிகுந்துவளர்ந்த தென்றறிவாய் நீயென்றவாறு. ஃலோபமும்சஞ்சல கருமமும்காமியகருமமும்விஷைய விச்சையும் வந்தபோது ராசதகுணமென்றறிவது. ௰௫

தக்கதுதகாதென் றொன்றைத் தானறியாதபோது .... .. ...*
எக்கருமங்கண்மாட்டு மிசழ்ச்சியோ டிருக்குப்போது ....... *
மொக்குமெய்ம் மயக்கத்தோடு முறக்கவந் துற்றபோது ..... *
மிக்கதுதம்மேயென்று விசையநீ யறிய வேண்டும்... ......*

(இ-ள்.) அருச்சுனா! ஒருபதார்த்தத்தை இது தகுமானது இது தகாதது என்று தான் பகுத் தறியாத போதும் எந்தக் கருமங்களிடத்திலும் வெறுப்புடனே யிருக்குப்போது உடம்பி லொத்திருக்கப்பட்ட மயக்கத்துடனும் நித்திரைவந் தடுத்தபோதுந் தமோ குணமே அதிகமானதென்று நீ யறியவேண்டிய தென்றவாறு. (௰௪)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

தக்கசத்துவமே நிகழ்ந்தபோ திறந்தோர் தெய்வ யோனி சளிலேசார்வார் - மக்களிற்பிறப்பா ரிரசதம்வந்து விளைந்த போதுடம்பினைத் துறந்தோர்-மிக்கெழுதம்மே விளைந்தபோ திறந்தோர் விலங்குசாதிகளிலே வீழ்வார்- ஒக்கமற்றிவற்றின் பலன்களுந்தெரிய வுரைக்கின்றே னிவற்றையுமுணர்வாய்... ...*

(இ-ள்.) தக்கதான சத்துவகுணமே நடக்கிறபோது செத்தவர்கள் மேலானதெய்வ யோனிகளிலே யடைவார்கள் இராசதகுணமே வந்துண்டானபோது தேகத்தைவிட்டவர்கள் மனிதயோனிகளிலே பிறப்பார்கள் மிகுத்து எழும்புகிற தமோகுணமே யுண்டான போது செத்தவர்கள் மிருகசாதிகளில் வீழ்வார்கள் இதனுடனேகூடயிரு

(௨௪)

தத்திரி குணத்திநுடைய பலன்களுந் தெரியச்சொல்லுகிறேன் இதையுமறிவாய் அருச்சுனா!வென்றவாறு. ※ சத்துவமே தம்மேயென்றதனால்- இரசதமேயென்று வருவித்தது. ஏகாரமேதுக் கெனின். ஒவ்வொன்றில்- மூன்றுகுணமுங்கலந் தோன்பது குணமாதலாலே இங்கேதனிக்குணத்தைச் சொன்னதுகலந்து தீர்ந்ததுதிரும்பத்தனியாகவு மிருக்குமோவென்னில். தக்கசத்துவமென்றதனாலும்- மிக்கெழுதயமென்றதனாலுங் கலந்தகுணத்திலும்மூன்றிலொன்று ளதும்குந்துமோ அதும்வமூதலாக மற்ற இரண்டுந்தாழுகையால்- மிகுந்ததைக் குணமாகக்கொண்டு ஏகாரம்வந்தது விழ்வாரென்றதனால்- மேலோசத்திலறித் தெய்வயோனியிற் பரம்பரை யாகவேப்பிறப்பாரென்று மத்தியமேலாகமானபூமியில் மனித யோனியிலேதானே பாரம்பரையாகப் பிறந்து சுழலுவாரென்றும் கீழானமிருகயோனிகளில்விழ்ந்து மேலானமனிதயோனிக்கும் வாராமற் பாரம்பரையாகத் தாழ்ந்துவிழ்வாரென்றது இன்னம்விரிக்கில்பெருகுமாம்.

அருங்குணமாய சத்துவபலமா மமூக்கறலிரசத பலமாம், பெருந்துயருழற்றல் தமோபலமாகும் பேதைமைபேசியமுறையே, பொருந்திய விந்தக் குணங்கண்மூன்றாலும் பூதசாலங்களுக்கெல்லாம்; வருந்திரு வாயஞான் மோடுலோப மயக்கமென் றின்னணம் வருமால்..... ※

(இ-ள்,) அரிதான குணமாகிய சத்துவத்திநுடைய பலமாகும் அமூக்கறலான நின்மலமாயிருப்பது ராசதகுணத்திநுடைய பலமாகும்பெரிய துக்கத்தை யனுபவித்தல்- தமோ குணத்திநுடையபலமாகும் மூடத்துவம் இப்படிச்சொன்னவ ரிசைப்படியே இந்தமூன்று குணங்களினாலும் பொருந்தின சீவசரீரகூட்டங்களுக்கெல்லாம்வரப்பட்டதென்னவென்னில். சாத்துவிக் குணத்தினாலே சிறப்பாகிய ஞானம்வரும் இராஜதகுணத்தினாலே லோபம்வரும் தாமதகுணத்தினாலே அஞ்ஞானம்வருமென்றவாறு. (௰௭)

சத்துவமாத்தர் பரகதியடைவார் தமத்துளோரதோகதி சார்வார், மத்திமகுணத்தோ ராயினோர் நடுவின் மானிடப்பிறவியாய் வாழ்வா, சித்திறமாய வுருவமேவிகாரியானவிகாரியென் றிவற்றை, மெய்த்திறனுக வறிந்தவனறிந்தபொருளிலே விட்டின்ப மடைந்தான்.................※

(இ-ள்.) சத்துவகுணமுடைய மனிதரான சாத்துவிகாகள மேலான மோக்ஷத்தையடைவார்கள்- ராஜசகுணத்தோரானவர்கள் மத்தியலோகத்திலே மனிதப்பிறவியாயிருப்பார்கள் தமோகுணமுடையவர்களே கீழ்நடுவென்ற இரண்டுகதியும் அடையார்கள் இந்த விதமான தேகமே அவிகாரி நான் அவிகாரியென்று தன்னையுந்தன்னுடம்பையுமான விந்த விரண்டையும் நிச்சயப்படியாக அறிந்தவன் அறிந்தபொழுதே மோக்ஷசுகத்தை யடைந்தானென்றவாறு. ❋ சாத்துவிகாகள் மோக்ஷத்தையடைந்தார்களெனவே இனித்திரும்பார்களென்னும்ராசதகுணத்தராய்மனிதரா யிருப்பாரெனவே சொர்க்காதிபலங்களுக்குப் போகின்றதும் பூமிக்குமனிதராகவந்து சுகிப்பதுமாகத் திரிவரல்லது தெய்வயோனியும்மோட்சமும்பெறார்களென்றும், மிருகயோனியும் அதோகதியும், அடையார்களென்றுமற்றுளோருங்கதிசாராரெனவே மிருகயோனியும் அதோகதியும்அடையுமென்பது அருத்தாபத்தி வரும். (௰௭)

உடம்புடனிருந்தே யுரைத்தவிக் குணங்கண் மூன்றையுமுள்ளவாறறிந்து, கடந்தவன் பிறப்பு மூப்பிறப்பாதியாகவே கட்டினாகின்ற, விடம்புரை யிம்மை யாவையுங்கடந்து விட்டின்பம் விளைபவ னென்றான், மடங்கடலிடையே வளர்ந்தவனவர்க்கு வேறிதனுஞ்செயலுரைத்தான்.

(இ-ள்.) ஆத்மாதேகத்தோடிருந்தே நான்சொன்ன இந்த மூன்றுகுணங்களையு முள்ளபடியறிந்து கடந்தவன்பிறப்பு மூப்புஞ் சாவுமுதலாகச் சொல்லுகின்ற நஞ்சையொப்பான எல்லாத்துக்கத்தையுங்கடந்து மோட்சசுகம் விளைகின்றவனென்று பெரியதிருப்பாற்கடலின்மேல் திருக்கண்வளர்ந்தருளிய ஸ்ரீகிருஷ்ண சுவாமிசொன்னார் அவருக்கு வேறேயிந்தச் சொல்லை அருச்சுனன் சொன்னானென்றவாறு. (௰௮)

கண்ணியவுலகிற் கடப்பரிதாயகுணங்கண் மூன்றையுங்கடந்துயர்ந்த, புண்ணியரியல்பு மவர்களையறியுங்குறியையும்புகன் றருளென்ன, வெண்ணியவுலகு முலகிலவாழுயிருமிருவினையாக்கையுமாகப், பண்ணியுமழித்துமேவிளையாடு பரமன்வேறிவ்வகை பணித்தான் ............ ❋

(இ-ள்.) இடமே சுபாவமான வுலகத்திலே யாராலுங்கடக்க

ப்படாத மூன்றுகுணங்களையுங்கடந்து மேலான நல்லவர்களுடைய் சுபாவமும் அவர்களையறியப்பட்ட குறியையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று அருச்சுனன்சொல்ல அதற்குப் பெரியவர்களா லே யெண்ணமிட்ட வுலகமும் உலகத்தில வாழப்பட்ட சீவனும் நல்வினை தீவினையான கருமமுமுடைய பேகமும் இப்படியாகவுண்டாக்கியும் அழித்துமிதுவெப்பொழுது போக்குதலாக விளையாடப்பட்டமேலான ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் யேறேயிந்தப்படிசொன்னொன்றவாறு. (௨௧)

வாயமையவல்லாற்குண மவைமூன்றின் வருகின்றகாரிய
மாய, தாமையுந்தொழிலு மயக்கமுமென்று சொல்லி
யதுறையிவை மூன்றுஞ், சேய்மைய் வென்று பெறுத
போதிரங்கல் பெற்றபோர் நிசழ்தல்செய்யாதான், தாமய
லாகாக் குணங்களொடிருந்தே யவற்றினுல்சவிப்பிக்கப்
படாதான்.......................................... *

(இ-ள்.) குணமான அந்தக்கரணமூன்றினுல் வருகின்ற காரியமாகியபரிசுத்தமுங் கருமமுமறியாமையுமென்றுசொல்லப்பட்டஇந்த மூன்றுவிதமும்பெறக்கிடையாதபோது தூரத்நிலிருக்கின்றதுகிட்டவில்லையென்றுவிசாரப்படுதல்பெறக்கிட்டக் கிடைத்தபோதுவிட்டுப்போகாததைப்போல அவமானஞ்செய்தல் இந்த இரண்டும்வாயினுலேசெய்யாம லிருக்கின்றதுமல்லாமல் மனதினுலுஞ்செய்யாதவன்தாங்களன்னியமாகாமல் ஆத்மாவோடு நீயேநானென்றிருந்தகுணங்களோடு கூடியிருந்தே யந்தக் குணங்களாலே சவிப்பிக்கப்படாதவனென்றவாறு. (௨௰)

(கலிவிருத்தம்.)

மானமவ மானம்வரு மின்பமிடர் மண்பொன் .... ..... *
ஞன்யகிழவப்பிரிய மன்பர் பகை யானோ.................. *
ருனவுனா யோம்புக மூற்றபொழு தொப்பா .... .... ...*
னினமுறுகின்றகுண மானவை யிகழ்ந்தோன்.........*

(இ-ள்.) வரப்பட்ட தானவெகுமான மவமானஞ் சுகதுக்கம் மண் பொன் சந்தோஷங் கோபந் தோழா டகையர் நிந்தை கீர்த்தி இவைகளடைந்தபொழுது சமமானவன் குற்றமடைகிறகுணமானதை வெறுத்தவ னென்றவாறு. ※ சந்தோஷங் கோபத்தை பிரி

டமப்பிரியமென்றுந் தோழர் பகைஞரைச் சத்துரு மித்துருவென்றும் நிந்தையை அடகீர்த்தி யென்றுஞ் சொல்லுவார்கள்ளாவனமன்னேணுமென்றுஞ் சொல்லலாம். (௨௧)

இப்பரிசினுக்வரு குணங்களை யிகழ்ந்தே ........ ..... ... *
மெய்ப்பருவ மாயபெரு வீடுபெற கிற்பா... .......... ...*
ரெப்பரிசி னுலுமிடை யின்றிமெழு மன்பா... ..... ....*
லொப்பவரிலாதவெனை யுன்னுமவர் கண்டாய்.........*

(இ-ள்.) இந்தவிதத்தினுலே வரப்பட்ட குணங்களைக் கடந்தே குணாதீதனுகிச் சத்தியமான பருவமாகிய பெரிய மோக்ஷத்தை ப்பெறமாட்டுவார்க ளெந்த விதத்தினுலு மிடைவிடாமலெழுமின அன்பினுலே ஒப்பானவர்க ளில்லாத என்னை நினைக்கிற வர்கள் கண்டாயருச்சுனு வென்றவாறு. ※ உரைக்குப் பின்னிரண்டு பாதத்தை யுமுன்னுகவு முன்னிரண்டு பாதத்தையும் பின்னுகவுமாறுக. (௨௨)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒழியாதொன்று மியாவர்க்கு மியானேயுணர்த்தி வருகுதலா......*
லழியாவறிவுங் கெடாவீடுங் கேடிலின்ப மானதுவு . ........ ....... *
மழியாவறமு மென்னுள்ளே யளவாகா நின்றனவென்றுன்......*
சுழியாநின்ற பெருவெள்ளத் துடையேயண்டு துயில்கொண்டான்.*

(இ-ள்.) எல்லாருக்கும் நானே விடாமலென்றைக்கு முபதேசம்பண்ணி வருகிறதினுலே கெடாதஞானமுங் கெடாத மோக்ஷமுங் கேடில்லாத சுகமானதுங் கெடாததருமமும் என்னுள்ளேயுண்டாகிறதென்று சொன்னுர் முற்காலத்திலே சுழித்துநின்ற பிரளயாந்தப் பெரியவெள்ளத்தி னிடத்திலே ஆலிலைமேலே பள்ளி கொண்டருளிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி யென்றவாறு. ※ எல்லாமுண்டாகிறதென்னுள்ளேயாகையா லெல்லாவற்றிற்கு நானே ஆதாரமுங் காரணமுமென்றது.— (௨௩)

குணத்திரயயோக அத்தியாயம் முற்றும்.

ஆக-அத்தியாயம்-௧௪ இ-கூடியசெய்யுள்(௪௱௰௩)

—?¦?¦*?¦?¦—



பதினைந்தாவது.

# புருஷோத்தமயோக

## அத்தியாயம்.



(கலிநிலைத்துறை.)

சாயையன்னவெவ்வினைத்தளை யறுக்கவோ தகவில......... *
பேயையின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்... *
வேயையொன்றிய வரிசிலை விசையற்கு மீள ........ .... ......... *
மாயைதன்னையோர் மரமொக்க வருணிக்கலுற்றான்......... *

(இ-ள்.) நிழல்போலத் தொடர்ந்த கொடுமையுள்ள கருமத்தையறுக்கவோ கொல்லத்தக்க பூதனையென்ற பேயையினிய சீவனைக்கொல்லவோ குழந்தையாய் இடையர் சேரியிலேவளர்ந்தகிருஷ்ண சுவாமி மூங்கிலைப் பொருந்திய கட்டுதலையுடைய காண்டிவமென்ற வில்லையுடைய அருச்சுனனுக்கு மாயையை ஒருமரத்தையொப்பாக வருணிக்கத் துவக்கினானென்றவாறு. (க)

(கலிவிருத்தம்.)

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேத.... ..... .... *
தேர்மேவிய விலைமேவிய திபாரும்புக றலினா....... .... *
லார்மேவிய வசுவத்தம தெனவேயர சதனின்......... *
போமேய்து பெருமாயைசெய் பிறவிப்பெருமரமே.. *

(இ-ள்.) மேலே வேருள்ளது கீழேதலையுள்ளது அழிவில்லாதது வேதமாகிய அழகுபொருந்திய இலை கூடியுள்ளது யாருஞ்சொல்லுகிறதினாலே நிறைவு பொருந்திய அசுவத்தமென்றே சொல்லப்பட்ட அரசமரத்தின்பெயரை யடைந்தது பெரிய மாயை செய்யப்பட்ட பெரிய சனன விருக்ஷமாகிய பிறவிமரமென்றவாறு. ※ பெருமாயை செய் பிறவிப் பெருமர மானதுவே மேலது தலை கீழது வீவில்லது வேதத்தேர்மேவிய விலைமேவிய திபாரும்புகறலினாலார் மேவிய வசுவத்தமதெனவே யரசதனின்- போமேயதெனமுடிக்க.

இவ்வாறித னியல்பாகிய வகையாதெனி லியாதும்..... *
ஒவ்வாவகை பெரிதாகிய பிரமத்தொரு விடமே ... ... *
வைவாள்வலி யுழலாவதன் முறையேவரன் முறையெ... *
மெய்வான்முதல் வருமாதலின் மேலானதுவேறே..... *

(இ-ள்.) இந்தப்படி யிதினுடைய சுபாவமாகிய விதமென்னவென்று கேட்கிற கூர்மையுடைய ஆயுதவலுமையினாலேபகைகளைநாசஞ்செயிக்கிற அருச்சுனா! கேள் ஒன்று மொவ்வாதபடி பெரிதாகிய பிரமத்திலொருவிடத்திலே அந்தப்பிரமத்தினுடைய விதிப்படியே வரத்தக்க கிரமப்படியே சிதாகாச முதலாகவெல்லாம் வரும் ஆதலால் பிரமத்தினிடத்தி லுண்டானசித்திலே வோக்கொண்டமாயையாகையாலமேர் மேலானதென்றவாறு. ※ மெய்வானசிதாகாசம். (௩)

ஊழால்வரு முலகாகிய முயிராகிய மெழலாற் ............ .....*
கீழான்று தலையாய்வரு முதலீறிடை கீழாய்ச் ..................*
சூழாகிய பிறவித்தொட ரொருகால்மு மடையப்..............*
படூாய்வஞ்ச மழியாமையி லழியாத தோர்படியே .... ..... *

(இ-ள்.) இனிமாயையில் நின்றும் வியாதியால் உலகங்களாகியும் உயிராகியும் வரப்பட்ட அதுகினாலே தலைகீழானதாய் வரப்பட்ட முதல் நடுகடைமூன்று மாயைக்கு மேலில்லாமல் அதோமுகமாய்ச் சுழல்வதாகிய பிறவித்தொடர்ச்சி யெல்லாம் பாழாமபடி யொருகாலமு மழியாமையினாலே இந்தச்சலன விருக்ஷம் அழியாதது ஒப்பில்லாத சுபாவமுண்டைய தென்றவாறு. (௪)

கருநான்முதல் வினையாவது வளர்காதல்செய்தலினா.........*
லருநான்மறை யிலையேயிலை யவையாமென வறிநீ.........*
வருநாள்களி லொருநாள்பெறு வகையின்மையி னாலே.......*
பெருநாடறி யசுவத்தம தெனலாயது பேரே.... ..... ... .. ....*

(இ-ள்) கருப்பற்று நாள்முதலாகக் கருமமாவது வளரப்பட்ட ஆசையைச் செய்தலினாலே அரியநாலு வேதங்களுமே யிலைகள் இந்தப்பந்தப் பிறவிமர மாகுமென்று நீயறியவருகிற நாள் களிலொருநாள் பெறும்படி யில்லாதினாலே பெரியவர்கள் அறியப்பட்ட அந்தப்பிரவி மரமான மாயையானது அசுவத்தமென்றுபெயருடையதாகிய தென்றவாறு. ※ கருநான்முதல் வினைவானதென்று பாட

கனவுந்திகழ் சழுதாழியின் மிருகந்திரு நகரு...*
மெனவந்தழி தலினாலூரு வதுவின்றிமுன்யாது *
முனவந்திடுமுதலாளொடு முடிவின்மையினாலே
தனதந்தமுமுதலுந்தெரி தரவில்லதுதானே....*

(இ-ள்.) சொற்பனமுந் தோன்றப்பட்ட கானலில்மிருந்தநீ்ர்காட்டுவதுபோல் வந்து அழிதலினாலே மூன் றென்றும் உருவில்லாமல் முன்னேயுண்டான முதல்நாளும் அதனுடைய முடிவுநாளு மில்லாதினாலே தன்னுடைய முதலும் முடிவுந் தெரிவதில்லாததென்றவாறு. ☼ ஆழியைத்தேரென்றதாகும்பெயர். சழுதுபெய ஆழி - ண்டிபெயத தேர்காணல். (௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மந்திரமாயவிந்த மரத்தினைத்துறவென் கின்ற.........*
தந்திரவாளால்வெட்டித் தற்பரமாகிநின்றே...........*
யிந்திரசால்மென்ன யாவுமென்னிடையேகட்டும்... *
அந்திரமிலாதவென்னை யடைகையேயடுப்பதையா...*

(இ-ள்.) மாயையாகிய இந்தப்பிறவிமரத்தை அசங்கமென்கின்றவுபாயவாளினாலேவெட்டி அந்தப்பிறவிமரத்தைப் பிரமமாக்கிநிஷ்டையில் நின்று இந்திரசாலம்போல வெல்லாம் என்னிடத்திலேகாட்டுகின்றநிரந்தரமான வென்னைச்சேருதலே அடுத்ததென்றவாறு. ☼ என்னைச்சேராதது அடுக்காதென்பது கருத்தாபத்தி துறவாவது- கூட்டத்தைவிட்டது- கூட்டமாவது - அந்தக்கரணவியாபாரம்- உபாயவாளாவது- குருவினுபதேச சாணைப்பிடித்தவாள் அந்தரமில்லாதது-நிரந்தரம் துறவை ஞானமெனினும் பொருந்தும். (௭)

துன்னியவாசைகாமங் கடந்தவர்காணத்தோன்று.....*
மென்னுருவியற்கைகேட்கி லியாவையுங்காட்டுகின்ற..*
மன்னியவொளிகள்காணு வகையதாய்வந்தும்சேர்ந்தார்*
பின்னியல்வேறொன்றுகாப் பெற்றியாய்நின்றுபேசும்.*

(இ-ள்.) கலந்த ஆசை காமம் இவைகளைக் கடந்தவர்கள் காணத்தோன்றப்பட்ட என்னுடைய சொரூப சுபாவத்தைக் கேட்கில் எல்லாவற்றையுங்காட்டுகின்றநிலைமையான பிரகாசங்களாகிய சந்திரசூ

ரியாக்கினிக்குங் காரணகபடியாய் என்னைவந்துசேர்ந்தவர்கள் பிறகு அவர்களுடைய சுபாவம்வேறொன்றாகாமல் என்னுடைய சுபாவமேயாவதாய் முன்னின்றுபேசும் அருவமாகவும் பேசுமென்ற வாறு.

குடந்தொறுந்தோன்றுகின்ற வாகாசங்கொலத்தக்கொப்பத் *
தடம்புனறோறுந்தோன்றுஞ் சந்திரன்றானுமென்ன ......... *
வுடம்புகடோறும்வேறு யுயிரெனநின்றேயந்த ..................... *
விடம்படுபுலன்கடோறு மியம்புழியியற்றுவேனன் .............*

(இ-ள்.) குடங்கள்தோறுங் காணுகின்ற ஆகாசம்போலவுங் குளத்துத்தண்ணீர்கள்தோறும் வெவ்வேறுச் சீவனென்றுநின்றேஅந்தவிடங்களிலுண்டாகிய இந்திரியங்கள்தோறும் நடத்துகின்றவன் சொல்லுமிடத்தில் நானென்றவாறு. இயம்புழி குடந்தோறுமெனமாறுக. (௰உ)

பூக்கமழ்நாற்றங்கொண்டு பொருமளிபோகுமாபோற் *
றீக்கனலகின்றவேலாய் சீவனென்கின்றசீவோன்.......*
யாக்கையையெய்தும்போதுமதனைவிட்டேகும்போதும்
போக்கரிதாயவாறு புலன்களைக்கொண்டேபோமால் *

(இ-ள்.) நெருப்புச்சுடுகின்ற வேலையுடைய அருச்சுனா; வண்டானது வரும்போதும் பூவின்மணக்கின்றபரிமளத்துக்காகவந்துபோருந்தும் போகின்றபோது பரிமளத்தைக்கொண்டுபோகும் அப்படிப்போலச் சீவனென்று சொல்லப்பட்ட சிறப்புடையவன் சரீரத்தைச்சேரும்போதும் இந்திரியங்களைக்கொண்டேசேரும் அந்தச்சரீரத்தைவிட்டுப்போகின்றபோதும்இந்திரியங்களைப்போக்கப்படாதபடியினாலே இந்திரியங்களைக்கொண்டேபோமென்றவாறு. பொரியளி மயன்பாருமுளர். (௰௩)

(இதுவும்அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மின்னேய்வயவுடம்பதனை விடுவதடைவதாய்விடையநீ... *
தன்னேரில்லாதான்பலவுந் தானுகின்றதன்மையினை ........ *
யென்னேகாணரறியாதா ரறிவரர்யோகத்தாலேதம் ... ..... *
முன்னேகாண்பாரிதனியற்கையாதோவின்னமொழிவன்கேள்

(இ-ள்.) தனக்கு ஒப்பில்லாத சீவஞானவன் மின்னையொப்பான சரீரத்தைவிடுகின்றது சேருகின்றதாகவிடயங்க ளனைகமுந்தானுக

அனுபவிக்கின்ற சுபாவத்தை அறியாதமூடர்களென்னவோ காணார்கள் அறிவுடையவர்கள் யோகதிஷ்டியினாலே தங்களுடையகண்முன்னேகாண்பார்கள் இதனுடையசுபாவமென்னவோ அதையின்னஞ் சொல்லுகின்றேன்கேள் அருச்சுனாவென்றவாறு. ஸ்ரீ தன்னேரில்லாதானமின்னே யனையவென்றும், விடயம்பலவுமென்றமாறாக.தமமுன்னே டெனப்படு சரீரத்திலாத்மா விருக்கச்சே தானே ஆத்மாவேறுசரீரம் வேறெனக்காணுதல் அறிவில்லாதவர்கள் செத்துங்காணார்களென்பதருத்தாபத்தி. (௰௪)

இந்திரியங் களுக்குங் கண்ணா யிரவி தீ யிந்துவின்பால் *
வந்தெழுங்கதிருநானே மாநிலமாகிநின்று ........ ..... *
தந்தியேறனையதோழா சாமமேமுதலாந்தன்மை......*
தந்திரந்தவிர்ந்துமெல்லாந் தாங்குகின்றேனுநானே.. *

(இ-ள்.) களிற்றனையை யொப்பானதோழா பஞ்சேந்திரியங்களுக்கும் விஷயங்களைக்காட்டுகின்ற கண்நான்- சூரியன்சந்திரன் அக்கினி யிவர்க ளிடத்திலுண்டா யெழும்புகின்ற பிரகாசமுநானே சாமமுதலான சுபாவதந்திரங்களைவிட்டுப் பெரியபூமியாகிநின்று எல்லாந் தாங்குகின்றவனும் நானேயென்றவாறு. (௰௫)

(கலிவிருத்தம்.)

மூந்துவானசுவை முற்றுமாகியே ................ *
இந்துவாகிநின் றுண்பன யாவையுந் ........... *
தந்துசேர்சுவை யகத்திலேதக...................*
நந்திடாவகை வளர்க்கின்றேனு நான்............ *

(இ-ள்.) முதன்மையான பெருமையுள்ள அறுசுவை முழுதுமாகிச் சந்திரனாகிநின்று பொசிக்கின்றதெல்லாங் கொடுத்து ஆறென்றாகுகைசேர்ந்த சுவையினிடத்திலே யிருந்து அந்தந்தச் சுவைகளுக்குத் தக்கதாக்க கெடாதபடி வளர்க்கின்றவனும் நானென்றவாறு. ஸ்ரீ வான்சுவையென்றதனால் ஒருசுவையினாலனேகபேதமுண்டு ...கையால் அனேகவிகற்பங்கூடிய தொருசுவையாகப்பேரிட்டு அறுசுவை யென்று தொகைப்படுத்தனதினாலே வான்சுவையென்றார்.

இன்பநக்குவ தீஞ்சுவையுண்பவா ........................ *
நன்பயன்செயு நால்வகையுண்டியு ............................ *

யின்பமாம்வகை யாக்கைகடோறுநின் ..................*
றன்பவங்கி யாயதுக்கின்றே ஞன்...... ............ ,*

(இ-ள்.) தோழாதின் கின்றதும் நக்குகின்றதும் மதூரமுண்டாகச் சுவைக்கின்றதும், உண்கின்றதும் ஒன்ருக நல்லபலனைச் செய்யப்பட்டநாலுவிதப்பொசிப்பும் இன்பமாகின்றபடிக்குச்சரீரங்கள் தோறும் அக்கினியாய்நின்றுபாகமாக்கிச் சீரணஞ்செய்கின்றவனும் நானென்றவாறு. (௰எ)

நல்லமாந்தர் நல்லறிவுநன்கிலாப் ..................*
புல்லர் தங்கள்புல் லறிவும்போர்திகழ் ..................*
வில்லமைந்ததோள்வீரர்விரயா.......................*
னல்லதில்லையென்றறியவேண்டுமால்.....................*

(இ-ள்.) போர்செய்துவிளங்கிய வில்லிருந்த தோளையுடையவீரர்களுக்குவீரனுன அருச்சுனு! நல்லமனிதர்களுடையஞானமும் நலமில்லாத சிறியவர்களுடைய புல்லறிவாகிய அஞ்ஞானமும் நானேயல்லாமல் வேறில்லையென்றறியவேண்டுமென்றவாறு. (௰அ)

அசைவில்லாமறைக் கறிவுநானதன் ..................*
வசையிலாதமெய்ப் பொருளும்வாய்மைசே.... *
ரிசையினுலெடுத் தேதுவேனும்யான்............*
விசையங்களின்னம் வேறுமொன்றையே.........*

(இ-ள்.) சலனமில்லாத வேதத்துக்கு அறிவுநான் அந்தவேதத்தினுடைய குற்றமில்லாத சத்தியமான பொருளும் என்னுடையவாக்கிலேசொந்த விசையினுலேயெடுத்துச்சொல்லுகின்றவன் நான் இதுவல்லாமல் வேறுமொன்றை இன்னஞ்சொல்லக்கேள் அருச்சுனுவென்றவாறு. (௰௯)

மருவுகின்றதில் வுலகின்மாய்தலே ..................*
யுருவமாகமுன் புடையதொன்றுமே..................*
யருவமொன்றிலா தழிவதின்கையே ..................*
குருவதின்றம்தார் குறியிலின்பமே....................*

(இ-ள்.) குருகுலத்தவனே இந்தவுலகத்தில் முன்பே உருவும்அருவமென் றிரண்டுள்ளன அவற்றில் உருவமொன்றே நாசத்தை

யடைகின்றது அருவமானதொன்றுமில்லாமல் அழிவதில்லை இதுவென்றுமுள்ளதாக நின்றது ஒப்புங்குறிப்புமில்லாததாய் ஆனந்தமென்றவாறு. ✽ குருவமென்றது- குருகுலத்தவனேயென்பது-அருவமாய் ஒப்புங்குறியுமில்லாததாய் ஆனந்த சொரூபமாய் அழிவில்லாததாயென்றுமுள்ளதாய நின்றது ஏனமுடிக்க. (௨௰)

மொழிசெய்கின்ற விவ்விரண்டுமுற்றவே ......... *
விழியிறுவுற நோக்கின் மெய்ம்மையே ......... *
யழிவதியாக்கையிங் கழிவுபாடிலா ......... *
தொழிவதென்னெனி லுயிரொன்கின்றதே ......... *

(இ ள்.) சொல்லுகின்ற விந்தவிரண்டுமுடியக் கண்ணாலேயுற்றுப் பார்க்கில் இந்தவுலகத்தில் உருவானசரீரமே அழிகின்றது நிச்சயம் அழிவுபாடில்லாமல் ஒழிந்திருப்பதென்னவென்றுகேட்கில் அருவமான ஆத்மாவென்கின்றதே நாசமில்லாததென்றவாறு. (௨௧)

இவையிரண்டையுங் கடந்துயாதுமோர் ......... *
நவையுமின்றியே நாசமின்றியே ......... *
யவையுமின்றியே யாவுமின்றியே ......... *
குவையினின்றதோர் குறியிலின்பமே ......... *

(இ ள்.) இந்தவிரண்டையுங்கடந்து யாதுமொருகுற்றமில்லாமல் நாசமில்லாமல் எந்தக்கூட்டமுமில்லாமல் ஒருகருபமுமில்லாமல்நிரம்பிநின்றது ஒப்புங்குறிப்புமில்லாத ஆனந்தமென்றவாறு. (௨௨)

இந்தவின்பமியானென்னையுள்ளவா ......... *
சிந்தையின்கணே தெளிதனமேயினோர் ......... *
பந்தமொன்றிலார் பழையவிப் பொருட் ......... *
கந்தமாதிவே றறிய வொண்ணுமோ ......... *

((இ-ள்.) இந்தவுருவம் அருவம் இரண்டையுங்கடந்த ஆனந்தமாவது நான் என்னையுள்ளபடி மனதினிடத்திலே தெளிவையடைந்தவர்கள் பாசபந்தமொன்றுமில்லாதவர்கள் பழைய தானே இந்தப் பொருளுக்கு ஆதிபந்தம் வேறேயறியப்படாததென்றவாறு. ௨௩

வேததாலுநின் றனைசெய்தாலுமோன ......... *
முதலாவதென் றுலகறிந்ததோ ......... *

காதலாலெனக் கினிய தோழநீ ..................... *
யாதலாலுனக் கறிய வோதினேன் ..................*

(இ-ள்) நாலுவேதமும் ஒழியாமல் நின்று சொன்னதும் ஒன்றென்று சொல்லுதலினால் அஃதென்று உலகமறிந்ததுவோ அல்ல ஆகையினாலே எனக்கு இனிதான நீ தோழனாதலாலுனக்கு அறியச் சொன்னேனென்றவாறு. (௨௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கண்ணையோ ரிடத்து மின்றி யதனிலே வைக்கிற் காதல் ...... *
பண்ணையோ யாக்கி நின்ற வினையெலாம் பயக்கு மென்றான் *
வெண்ணெயோ விதுரனிட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த *
மண்ணையோ வுண்டுமுன்னாள் வரும்பசி தீர்த்த மாயோன் *

(இ-ள்.) வேறோரிடத்திலு மில்லாமல் அந்த ஆனந்தத்திலே மனக்கண்ணை வைக்கில் ஆசை கூட்டங்களோடு கூடிநின்ற கருமமெல்லாம் பலிக்கு மென்று சொன்னார் இடையர்வீட்டு வெண்ணெயையோ! விதுர னிட்ட விருந்தையோ! கடல் சூழ்ந்த பூமியையோ! போசித்து முற்காலத்திலே வரப்பட்ட பசிதீர்த்த கிருஷ்ணசுவாமி யென்றவாறு. (௨௫)

புருஷோத்தமயோக-அத்தியாயம் முற்றும்.

ஆ அத்தியாயம் - ௰௫ - இ - செய்யுள் (சுாருஅ.)



பதினாறாவது.

# தெய்வசம்பத்துவிபாகயோக அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

மறந்திருந்த மனத்திரு ணீக்கிநீ ..................*
திறந்திறப் படச் செப்புதன் மேயினை ...............*

ணறந்திறந் தெரிந் தாக்குதற் காகவே……… ……*
பிறந்திறந் துழல்கின்ற பேராளனே…… ……*

(இ-ள்.) (இதனைப் பின்னிரண்டடியும் முன்னாக வைத்துரை கொள்ளுவது) தருமத்தினுடைய வகையைத்தெரிந்து தருமத்தை யாகப்பண்ணுகிற தற்காகப் பிறந்திறந்து உழலுகிற பேராளனாகிய கிருஷ்ணசுவாமியானவர் ஞானத்தை மறந்து கெட்ட மனதி லுள்ள அஞ்ஞானத்தைப் போக்கப்பட்ட விதத்தைநன்றாகத்தெரியச்சொல்லத்துவக்கினா ரென்றவாறு. ※ (கருமத்தை யாகவே பாப மழியு மென்ப தருத்தாபத்தி) அஞ்ஞானத்தை நீக்குகிற விதமாவது— ஞானம். (க)

தெய்வ வசுர மொன்றித் திறத்த தாய்…… ……*
வையமர்ந்த வெல்லார்களும் வாழ்வ திங்……*
கையகேள்வற் றின்றிற மென்று தன்……*
செய்ய வாய்திறந் திவ்வண்ணஞ் செப்பினான்…… …*

(இ-ள்.) ஐயா இந்தப்பூமியிலுள்ள மனித ரெல்லாரும் தேவர்அசுரரென்று சொல்லப்பட்ட இந்த விரண்டுவிதமுடையவராயிருப்பது அந்த இரண்டினுடைய விதத்தைக்கேளென்று தம்முடைய சிவந்த திருவாயைத்திறந்து இந்தப்படிசொன்னா ரென்றவாறு. (உ)

(இதுவுங்கலிவிருத்தம்.)

அஞ்சுத லின்மையு மறிவை யாக்கலும்…… ……*
நெஞ்சினை யடக்கலு நிலைகெடா மையும்…… ..*
வெஞ்சின மின்மையு மெய்ம்மை கூறலுந்…… ……*
தஞ்செசன் வேள்வியுந் தவமு மாக்கலும்…… …*

(இ-ள்.) பயப்படுதலில்லாததைரியமும் அறிவையுண்டாக்குகிறதும் மனதையடக்குகிறதும் நிலைமை யழியாததுங் கொடுமை யுள்ள கோபமில்லாமையுஞ் சத்தியமான மெய்ச்சொல்லு கிறதும் அடைக்கலமென்று யாகமுந் தவசுஞ் செய்கிறது மென்றவாறு. (ங)

மறைபயி லறந்தனை மறந்திரா மையும்…… ……*
குறளைக் கவிர்தலுங் கொள்கை யாற்றலும்…… ……*
பிறர்பிழை பொறுத்தலும் பேரொழுக்கமே…… ….*
லறன்வழி தானமோ டருளை யாக்கலும்…… ……*

(இ-ள்.) வேதங்களிலே விடாமலோதப்பட்ட தருமத்தைமறந்திராமலும் கோட்சொல்லுகிறதை விடுதலும் விஷயங்கொள்ளுகிறதையில்க்கலும் அன்னியர் செய்த குற்றத்தைப் பொறுத்தலும்பெரிய வொழுக்கதருமத்தை இச்சித்ததாணமும் அவற்றுடனே தயவுண்டாக்கலுமென்றவாறு. ஃ மறைபயிற்றலுந் தன்னை மதித்திராமையுமென்று பாடமோதில் வேதமோதலும் தன்னைப்பெரியவனாக மதித்திராமலுமென்றுணர்கொள்ளுமிது பொருந்தாது. (ச)

இருவகைத் தூய்மையு மிந்திரியங்களை ......................... *
யொருவகைப் படுத்தலு முள்ளிட் டன்னவே... ...*
செருவருஞ் சிலையினாய் தெய்வத் தன்மையோர்... ..*
மருவிய தொழிலென மதிக்க வேண்டுமே... .........*

(இ-ள்.) சுகம்தந்தபோது சந்தோஷிப்படாமல் துக்கம் வந்தபோது கிலேசப்படாமல் இந்தச் சுகதுக்க மிரண்டிலுஞ் சித்தமுமிந்திரியங்களை நாலுவழியிலே போகாமல் ஒருவிதமாக்குகிறதுமிவைகளை யுள்ளிட்ட அந்தநன்மைகளானவை சண்டை செய்துவருகிற காண்டீபமாகிய வில்லையுடைய அருச்சுனா! தெய்வத்தன்மையையுடையவர்கள் பொருந்தின தொழிலென்றுமதிக்கவேண்டுமென்றவாறு. ஃ அஞ்சுதலின்மையென்ற பாட்டு மறைபயிலறமென்றபாட்டு மிருவகைத் தூய்மையென்றபாட்டு மிந்தமூன்றுமொருதொடர்.— (ரு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தீமைசெய்யசுரரானோர் செய்தியைத் தெரிக்கிலொன்
றை-யாம்வகை யெனமற் றொன்றா வனவென்வறிதலில்லார்-
தூய்மையுந் தூயவாய வொழுக்கமுந் துடக்கு விட்டா
ர்-வாய்மையொன் றானு மில்லார் மயக்கமே மருவிநி
ன்றார்...................................................*

(இ-ள்.) பொல்லாங்கு செய்யப்பட்ட அசுரரானவர்களுடைய செய்தியைத் தெரியப்பண்ணில் புண்ணிய பாபமென்ற விரண்டில்புண்ணியமாகிய வொன்றை ஆகிறவிதமென்று சொல்லமற்ற பாபமாகிய ஒன்றையாகாததென்றுசொல்ல அறியத்தக்கதில்லாதவர்கள் சித்தமுஞ் சுத்தமான ஆசாரமுந் துடக்குவதை விட்டவர்கள்

ஒருவிதத்திலுஞ் சத்தியமில்லாதவர்கள் அஞ்ஞானமே சுபாவமாகப் பொருந்திநின் றவர்க ளென்றவாறு. ஆ தொடங்குவதையே விட்டவர்களெனவே செய்தறியாரதனால் அந்தச்சுகமு மறியாதவர்க ளென்றதுகருத்து. (௭)

(கலிவிருத்தம்.)

எண்ணியவுலகமு முலகுக் கீசனும்............. *
புண்ணிய பாவமும் பொய்யென் றெகொள்வார்...... *
பெண்ணினோ டாண்புணர் கின்ற பெற்றியார் .... .... *
நண்ணிய யாவையு மெடுத்து நாட்டுவார் ...... ...... *

(இ-ள்.) எல்லாரும் நினைக்கப்பட்ட பிரபஞ்சமும் பிரபஞ்சத்துக்குக்கர்த்தரான் தெய்வமும்பிரபஞ்ச கருமமான புண்ணியமும் பாவமும் பொய்யென்றே கொள்வார்க ளல்லாமல் மெய்யென்றுகொள்ளார்கள் பெண்ணோடே ஆண்கிரீடிக்கிறதே சுபாவ மாகவுடையவர்கள் தங்களுக்குக் கிடைத்த சகலத்தையும் எல்லாரு மறியவெடுத்து நாட்டுவார்க ளென்றவாறு. (௮)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

விரும்பலராகி யொழுக்கங்கடுறந்தார் மெய்மையுஞ் செம்மையும் விட்டா- ரிரும்பயனுய வறிவுமாய்ந் துள்ளா ரிடம்படா மனத்தினோ டிசைந்தார் - பெருமபழியாய தொழில்களே பயில்வார் பிழைப்பு வாய்ப் பொன் றறியாதா- ரரும்பகையா யிவ்வுலகினை யெல்லா மழிப்பதன் பொருட்டவ தரித்தார்............................ ......... .....*

(இ-ள்.) ஆசாரங்களை யிச்சியாதஅசராசராசர்களாகியாசாரங்களை விட்டவர்கள் மெய்மையும் ஒப்புரவையும் விட்டவர்கள்மெய்மையும்விட்டவர்கள் பெரியபிரயோசனமாகிய அறிவுகெட்டுழுடராயுள்ளவர்கள் விசாலமாகப் பரந்தமனதொடே பொருந்தினவர்கள்பெரிய பழியாகிய தொழில்களே பழக்கமானவர்கள் தவறுதல் கிடைத்தல் என்ற விரண்டிலொன்று மறியாதவர் இந்தவுலகத்தை யெல்லாம்அழிக்கிற நிமித்தமாக விலக்க அரியபகையாய்ப் பிறந்தவர்க ளென்றவாறு.— (௯)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

நிறைவிலாக் காம போகந் தன்னையே நிறைக்க வேண்டி........ *
மறைவிலா மானத் தோடு மதங்களை மருவி நின்று.... ..... ........... *
குறைவிலா மயக்கத் தாலே கோபத்தை யடைந்து நின்று ........ *
பொறையிலா விரதம் பூண்டு பொய்த்தவம் புரியா நிற்பார் ...... *

(இ-ள்.) அளவில்லாத காலம் அநுபவித்தாலும் நிறைவில்லாதவிஷய போகத்தையே நிறையப் பொசிக்கவேண்டி மறைவான மானத்தைக் கெடுத்தும் மறைவில்லாத மானத்துடனே கெர்வங்களையடைந்து நின்று குறைவில்லாத மயக்கத்தினாலே கோபத்தை யடைந்துநின்று பொறுமையில்லாத விரதத்தைத்தரித்துப் பொய்யாகத்தவஞ் செய்வார்களென்றவாறு. (௯)

இறந்துபோமளவுமெய்தாப் பொருளையேயெய்தநிற்பார் *
மறந்துமோர்பொருள்வேறில்லை வரும்பயனன்றியென்பார். *
பிறந்தபேராசையாய பாசத்தாற்பிணிக்கப்பட்டார்......... *
சிறந்தபோகங்கட்காகத் தீயையாம்பொருளேசெய்வார்..... *

(இ-ள்.) செத்துப்போகின்ற பரியந்தமும் எட்டாத பொருளையே எட்டவேணுமென்று வருந்திநிற்பார் வருகின்ற வினைப்பயப்பிரயோசனத்தை யல்லாமல் மறந்துமொருபொருள் வேறேயில்லையென்பார்கள் தங்களிடத்திலுண்டான பேராசையாகிய பாசத்தினால் கட்டப்பட்டார்கள் சிறப்பானவிஷய போகங்களுக்காப்பொல்லாங்கான காரியமேசெய்வார்களென்றவாறு. (௰)

இப்பொருளடைந்தோம்வேறிப் பொருளினை யடைவோமெ
ன்று, யிப்பகைசெகுத்தோம்வேறிப் பகையினைச்செயிப்போ
மென்றும், துய்ப்பவரெம்மிற்றுய்க்க வல்லவரிலையென்று,
மொய்ப்பவரெம்மின்மிக்கா ருளர்கொலோவென்றுநிற்பார் *

(இ-ள்.) இந்தப்பொருளையடைந்தோம் வேறேயிருக்கின்ற இந்தப்பொருளை யடைவோமென்றும், இந்தப்பகையாளியைக்கொன்றோம் வேறேயிருக்கின்ற விந்தப் பகையாளியைச் செயிப்போமென்றும், போகங்களனுபவிக்கின்றவர்களி லெங்களைப்போல அனுபவிக்க வல்லவர்களில்லையென்றும், எங்களுக்குச்சமானம் எவர்

ன் யாருமில்லை எங்களிலும் அதிகமானவர்களுண்டோ வில்லையென்
றுஇறுமாந்து நிற்பார்களென்றவாறு. (௰௧)

இனம்வலியிலும்பெற்றோ மெம்மின்மிக்கார்களில்லைத்....*
தனமிகவுடையோமென்றுந் தம்மையேவியவா நிற்பார்....*
மனதிலியாகஞ்செய்வோமனமழையெனக்கொடுப்போமென்று*
தினமவைதோறுஞ்சித்திப் பதுவலாற்செய்வதில்லார்......*

(இ-ள்.) உறவு பலம் சுகமிவைகளையடைந்தோமிதனுலெங்க
ளிலும் அதிகமானவர்களில்லையென்று மிகுந்தத்ரவிய முடையோ
மென்றுந் தங்களைத்தாங்களே அதிசயப்பட்டு நிற்பார்கள்யாகம்செ
ய்வோம் மேகத்தைப்போலத் தானங்கொடுப்போ மென்று தினந்
தோறு மனசிலேநினைக்கின்றதல்லாமற் செய்வதில்லாதவர்கள்.எ-று.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

துடக்கறவில்லா நினைவெனப்பட்ட குழலைப்பற்றியே சுழல்வ ....*
ரடற்கரிதாய மயக்கமென்கின்ற வலையிலேயகப்பட்டு நின்று.....*
முடற்குடில்வாழ்வாம்புன்னுனிப்பனிநீருலர்ந்திடவுயிர்நடுக்கெய்
கடப்பரிதாய நரகமென்கின்ற கடல்களில் வீழ்வேகடவார்... [திக்

(இ-ள்.) துடர்ச்சியறவில்லாத நினைவென்று சொல்லப்பட்டசுழ
லிடத்தைப்பிடித்துச் சுழலுவார்கள் அறுக்கப்படாத மயக்கமென்
றுசொல்லப்பட்ட வலையிலேயகப்பட்டுக் கடக்கமாட்டாமல் நின்று
ர்கள் உடம்பாகிய சிறுவீட்டிலேவாழ்வான துபுல்லினுனியி லிருக்கின்ற
பனிநீரளவு அப்படிக்கொத்த தேகம்போனால் உயிரான துநடுங்கிக்
கடக்கப்படாத நரகமென்று சொல்லப்பட்ட கடல்களில்விழக்கடவ
ர்களேயல்லாமல் கடக்கக்கடவர்களல்லவென்றவாறு. (௰௫)

(கலிநிலைத்துறை.)

வியந்துதங்களையேமேலாய்ப் பார்த்துமேன் மாந்தர்த
ம்மை, நயந்துகொண் டாடவில்லார் நல்லவை செய்தா
மொன்று, பயன்கருதிநோக்கத்தற்காகப் பாடியபழைய
நூல்க,ளியம்பியபடிசெய்யாதேயாகங்களியற்று நிற்பார்.

(இ-ள்.) தங்களைப்பெரியவர்கள் நயஞ்சொல்லிக்கொண்டா
டத்தக்க ஒழுக்கமில்லாதவர்கள் தங்களைத்தாங்களே மேலாகப்பார்த்
து அதிசயித்து யாசகரானவர்கள் பிரயோசனத்தை யிச்சித்துஇந்த

ச்சொமாகி நல்லவற்றைச்செய்தானென்று சொல்லுகின்றதற்காக எல்லாரும் ஓதியபழைய வேதங்கள்சொன்னபடி செய்யாமல்யாகங்களைத் தாறுமாறாகச் செய்வார்களென்றவாறு. ✻ பயன்கருதலாவது-பிரயோசனத்தை மனசுதொடருதல் அது இச்சித்தல்.(௰௪)

மன்னியகளிட்பொடு வலியுங்காமமுந்......... ✻
துன்னியானென்னும்பெரு மயக்கஞ்சூழ்ந்துளோ ✻
ரென்னியல்பதனினும் யாவர்மாட்டினு.......... ✻
மன்னியமெனக்கொடு பொறுமையாக்குவார்.... ✻

(இ-ள்.) நிலைமையான மனச்செருக்குடனே வலுமையும்ஆசையுமிருந்து கூடினுனென்று சொல்லப்பட்ட பெரியமயக்கஞ் சுற்றிக்கொண் டிருக்கின்றவர்கள் என்னுடைய சுபாவத்திலும்யாரிடத்திலும் அன்னியமென் றெண்ணிக்கொண்டு பொறுமையை யுண்டாக்குவார்களென்றவாறு. (௰௫)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மற்றவர்தம்மையித்த மானிடராகுனோர்யார்க்குங் ...... ✻
கொற்றவகீழானரைக் கொடுமையாலரவொப்பானா.. ✻
யற்றமிலிடும்பைசேரு மாசுரயோனியாய ... ..... .....✻
புற்றவைதோறும்யானே புகப்புகவிழ்த்துகின்றேன்.. ✻

(இ-ள்.) இந்தமனிதரானவர்கள் எல்லாருக்குமரசனுண அருச்சுனு; இப்படிக்கீழானவர்களைக்கொடுமையாலேபாம்பையொப்பானவர்களைச்சேருதலில்லாத பூரித்த துக்கஞ் சேரப்பட்ட அசுரயோனிகளாகிய புற்றுகள்தோறும் புகுதப்புகுத அவர்களை நானே விழத்தள்ளுகிறேனென்றவாறு. (௰௬)

(கலிவிருத்தம்.)

இவ்வகையாசுர யோனியடைந்தோர்... ........... ✻
மெய்வகையாமறி வின்மையினாலே ............... ✻
நைவர்கடூநர கக்கதிதோறு .... ..... ..... ..... ..... ... ✻
மூய்வகையின்றி யுழன்றுதிரிந்தே............... ✻

(இ-ள்.) இப்படி அசுரயோனி யடைந்தவர்கள் மெய் வகையான அறிவில்லாமையினாலே தப்பிப்பிழைக்கின்றவகையில்லாமற்பொல்லாத நரகவழிதோறும் உழன்றுதிரிந்து வருவார்களென்றவாறு

உய்வகையின்றித் தீநரகந்தோறுமுழன்று திரிந்துவருவார்களென்றவாறு. (௰௭)

ஒருவன்கெடக்க வியற்றுவதேனு ... *
மருநரகத்தி லடைப்பதுதானும் ... *
ஒருவனைமூன்றுள் மற்றவைதன்னை ... *
யொருமுறைகூறி யுணர்த்திடுவன்கேள் ... *

(இ-ள்.) ஒருவன்கெடச்செய்வதானாலுங் கடக்கரியநரகத்திலடையப்பண்ணுகின்றது தானும்வருகின்றவிதமூன்றுண்டு அந்தமூன்றையு மொருதரஞ்சொல்லித் தெரிவிக்கின்றேன் கேள் அருச்சுனா; வென்றவாறு. (௰௮)

காதலினாகிய காமமுலோபங் ... *
கோதறவேசுடு தீநிகர்கோப ... *
மாதலினாலவை மூன்றுமகன்றார் ... *
வேதனைதீர்பெரு வீடுவிளைந்தார். ... *

(இ-ள்.) ஆசையினாலுண்டாகிய காமலோபங்களாங்கமறச்சுடப்பட்ட நெருப்பையொப்பான கோபமாகையினாலே அந்தகாமக்குரோத-லோபமாக மூன்றையும்நீங்கினவர்கள் பிறவிவேதனையில்லாமற் போகப்பட்ட பெரியமோக்ஷத்தை யுண்டானவர்கள். எ-று.

கூறினநூல்வழி சேர்குறிபேணா ... *
தேறினவாறுசெய் வாரிகலோகம் ... *
வேறியல்பர லோகம்விளைக்கும் ... *
பேறினவானவை பேறுபெறாரால் ... *

(இ-ள்.) வேதஞ்சொன்ன வழியேசேரப்பட்ட குறியையமதியாமல் விட்டுக் காமகருமங்களில் மனஞ்சென்றபடி செய்கின்றவர்கள் இகலோகமும்வேறுசுபாவமுள்ளபரலோகமுமுண்டாக்குகின்றபேறானவிந்த விதமானபேறு பெறார்களென்றவாறு. (௨௰)

ஆதலிலடாதவறி கைக்குவழியான ... *
வேதமுதனூலவை விதித்தநெறியாலே ... *
யேதநினை யாதுன்வினை யேயிசைகவென்றான் ... *
பூதமுதலானவை பொறுத்தருளுகின்றான் ... *

(இ-ள்.) ஆகையால் அடாதகாரியத்தையறிகைக்குவழியான வேதமுதலானசாஸ்திரங்கள் அவைகள் விதித்தமார்க்கத்திலேகுற்றமானகாரியத்தையுங் குணமானகாரியத்தையும், அறிந்துகுற்றமானகாரியத்தை நினையாமல் குணமானவுன்னுடையகருமத்தையேபொருந்துவாயென்று சொன்னார் பூதமுதலான தத்துவங்களையெல்லாஞ் சுமந்தருளிச்செய்கின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்றவாறு. (உ௪)

தெய்வசம்பத்து விபாகயோக அத்தியாயம் - முற்றும்.

ஆக அத்தியாயம்-௰௬-க்கு-கூடியசெய்யுள்(௪௱௯௰.)





பதினேழாவது.

# சிரத்தாத்திரயவிபாகயோக அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

உண்டுமீள வொளித்துல கியாவையுங் ........ *
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே.......... *
கொண்டுபாத்தனக் கொண்டல்வண்ணனற் றனைத் *
தொண்டுகூரப் பணிந்திவைசொல்லுவான்....... *

(இ-ள்.) சகல லோகத்தையும் உண்டாக்கித்திரும்ப ஒளித்துக் கண்டுகாக்கின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி யுபதேசித்தத்தையே சங்கையாகக்கொண்டு அருச்சுனனானவன்: அந்த மேகநிறமான ஸ்ரீகிருஷ்ணசுவாமியை அடிமை சிறக்கவணங்கியிது சொல்லுவார். எ-று.

வேதமேமுத னூல்விதியன் றியே.................... *
காதலானுல கோர்செய்யுங்காரிய ..................... *
மேதமாங்குண மென்றிலும்யாதென் ............... *
வோதமாகடல் வண்ணனுமோதுவான்.........*

(இ-ள்.) வேதமேமுதலான சாஸ்திரவிதியல்லாமல் ஆசையினாலேஉலகத்தார் செய்யப்பட்ட கருமமானது குற்றமொரு மூன்றுகுணத்திலும் எந்தக் குணமென்று கேட்க அலையுள்ள சிறந்த கடல்போலும் நிறமுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமியுஞ் சொல்லுவார். எ-று.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

யாவர்க ளாசைப் பாடு மியம்பிடி னியம்பப் பட்ட..... ......*
மூவகைக் குணமு மாகி யல்லது முடிந்து நில்லா..... ......... *
மேவரு மவற்றி னாய வேறுபா டுகளை யெல்லாம் .................. *
காவல் தெரியக் கூறக் கேளெனக் கழற லுற்றான் ..........*

(இ-ள்.) எல்லாருடைய ஆசைப்பாடுஞ் சொல்லில் எல்லாருஞ் சொல்லப்பட்ட மூன்றுவித குணமாவது அந்த முக் குணத்தையுமல்லாமல் வேறேமுடிந்து நில்லாது மனது பொருந்தி வரப்பட்ட அந்தமூன்று குணத்திலுண்டாகிய வேறுபாடுகளை யெல்லாந் தெரியச் சொல்லக்கேள் ராசாவே யென்று சொல்லத் தொடங்கினாரென்றவாறு.— (௩)

(கொச்சகக்கலிப்பா.)

சாத்துவிகா தேவரையே சரண்புகுவர் தாமதர்கள்............*
காத்தல்புரி வன்பேயும் பூதமுமாய்க் கைப்பிடிப்ப ... .... *
ரேத்தரிய குணமிவற்றி னிராசதமாங் குணமுடையோர் .... *
காத்த வெனு வரக்கரையு மியக்கரையு மடைவார்க ளால்...*

(இ-ள்.) சாத்துவிகம் ராசதம் தாமதமென்று சொல்லப் பட்ட குண மூன்று இந்தக்குணமூன்றில் சாத்துவிகமான குணத்தையுடையவர்கள் தேவர்களைச் சரணமடைவார்கள் தாமதமான குணத்தையுடையவர்கள் தங்களைக்காத்து ரக்ஷிப்பது பேயும் பூதமுமென்று நிச்சயமாகியவைகளை மறவாமற் பூசிப்பார்கள்புகழ அரிதாகியராசதகுணத்தை யுடையவர்க ளாபத்த வொன்று ராக்ஷதரையும் யக்ஷரையுஞ் சரண மடைவார்க ளென்றவாறு. (௪)

(கலிவிருத்தம்.)

அடங்கிய பொறியினு மறிவு மன்றியே...... ..........*
இடம்படு நூல்களி னியல்பு மன்றியே.. ........ ....... *
யுடம்பையு முயிரையு மொறுக்கு மாதவந்.... .... .... *
தொடங்கு வஞ்சக யோனிகளிற் றோன்றி னூர்.........*

(இ-ள்.) அஞ்சுபொறிகளு மடங்கின விடத்தி லுண்டாகிற அறிவு மல்லாமலே விரிவுண்டான சாஸ்திரங்களி லுடைய விதியு மல்லாம லேவுடம்பையு முயிரையு ம்வருத்தப்பட்ட பெரியதவசை த்தொடங் கிச்செய்வார்கள் அசுரயோனிகளிலேபிறந்தவர்களென்றவாறு. (ரு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

உண்பன யார்க்கும் யாரு முறுதவந் தான மென்ன ... ..... .... *
வெண்பட வுரைத்த நான்கு மோரொன்று மூன்றாய்நின்ற · *
பண்பமை குணங்கள் மேலே கேளெனப் பற்றும் வீடு ... ... ...... *
நண்பொடு பகையு மில்லான் முறைமையி னவிலலுற்றான் *

(இ-ள்.) எல்லாரும் அடையப்பட்ட ஆகார மயாகந் தானமெ னதென்னடைப்படச்சொன்ன நாலும் பண்ணப் பட்ட குணங்க ளா லேயுவ்வொன்று மூன்றாய்நின்றது அவைகேளென்றுசம்சார முமோ க்ஷமு மற்றவும் பகையு மில்லாத ஸ்ரீகிருஷ்ணசுவாமி ஆகார முதலாகச் சொன்ன முறையினாலே சொல்லத்தொடங்கினா னென்றவாறு. (௬)

சத்துவ குணத்தா ருணவ தாமாத்திடி லழகு சார்ந்த.......... *
தித்தித்த சுவையவாகித் தேகஞ்சிக் கெனவு சேர்ந்த ...... .... *
வத்தித்த வலிநோ யின்மை யறிவுநல் லாயுவின்பம் .... ...... ..*
வத்திக்கச் செய்த வித்த வுணவுகண் மடங்க லன்னாய்..... .... *

(இ-ள்,) சிங்கத்தையொப்பான அருச்சுனா சாத்துவிக குண முடையவர்களுடையஆகாரத்தைச்சொல்லில் அழகுடையதாகித்தித் தருசியுடையதாகி யுடம்புசிக் கெனவு சேர்ந்ததாகிச் செம்மையான தாகி வயிற்றுநோயில்லாத ஆரோக்கியம் அறிவுநல்ல ஆயிசு சுகம் இவைகள் அதிகமாகச்செய்த இந்தஆகாரங்கள் தான்சாத்துவிகபோ சனமென்றவாறு. ஸ்ரீ தேகஞ்சிக்கெனவாவது - பெலம். (எ)

இப்படியன்றிவேறு மிராசத ருணவு கேட்கிற்............ *
கைப்பன பிளிப்புவாய்ப்புக் கார்ப்பன கடிய வெய்து .......*
நெய்ப்படயி னெருப்புப்போலச் சுடுவன விவற்றினாலே....... *
மெய்ப்பயி னோயினெஞ்சத் திடும்பையும் விளைவவேலோய் *

(இ-ள்.) வேலாயுதத்தைத்தரித்த அருச்சுனா! இந்தப்படியல் லாமல் வேறான இராசத குணத்தாருடைய ஆகாரத்தைக் கேட்கிற

கசக்கிறது புளிக்கிறது உப்பு கரிக்கிறது உறைக்கிறது நெய்வார்த்த கடுமையுடையநெருப்புப்போலச் சுடுவது இவை தானராசதகுணத்தாருடைய ஆகாரமிந்த ஆகாரத்தினாலே உடம்பிலே பழக்கப் பட்ட வியாதியு மனதிலே துக்கமு முண்டாவ தென்றவாறு. (அ)

ஆசினை யடைந்த நெஞ்சிற் றாமதருணவு கேட்கி ..................*
ஊசின பழஞ்சோ றெச்சி லும்பர்பூ சனைக்கா காத.......... .... *
வேசின வெந்தி லாத வினையன வியற்றி னாலே ........ ........ *
காசின முதலா யுள்ள துயரெலாம் விளைவு கண்டாய் .... .....*

(இ-ள்.) குற்றத்தையடைந்த மனதையுடைய தாமதகுணத்தோருடைய ஆகாரத்தைக் கேட்கில் ஊசிய பழஞ்சோறு எச்சில் தேவர்களுடைய பூசைக்காகாதது நிந்தித்தது வெந்த தில்லாதது இவைகள் தாமதருடைய போசன மிதனாலே காயப்பட்ட கோபமுதலாயுள்ள துக்கமெல்லா முண்டாவன கண்டா யருச்சுனா வென்றவாறு.— (௯)

செயத தருவ னென்றல்லாற் சோபயன் சிந்தியாதே......*
நயக்க நூன் முறைசெய்யாகஞ் சாத்துவீ கனசெய்யாகம்..... *
பயத்தையே வேண்டி யாதல் பலர்புகழ் வேண்டி யாத ........*
வியற்றுறு கின்றயாக மிராசத ரியாக மாமே.................. ......... *

(இ-ள்.) செய்யத்தக்க கடனென்று செய்வ தல்லாமல் அதனால்வருகிற பிரயோசனத்தை இசையாக நினையாமலே மந்திர திரவியகிரியைகள் குறையாமல் விளங்கச் சாஸ்திரத்தில் விதித்தபடி செய்யப்பட்ட யாகமானது சாத்துவிக குண முடையவன் செய்கிறயாகமென்று சொல்லப்படும் பிரயோசனத்தையே வேண்டி யாகுதல் பலரும்புகழ வேண்டியாகுதல் செய்யப்பட்ட யாகம ராசத குணமுடையவன் செய்கிறயாகமா மென்றவாறு. (௰)

நூற்படு நெறியுமன்றி நுனித்தவர் முதலா யுள்ளோர்..... .... *
தாற்பரி யமும்வே றன்றித் தக்க மந்திரமு மன்றி..... .... .....*
யேற்பவர்க் கீதலன்றி யியற் றுறு கின்ற யாகந்...................... *
தாரப்பொலி கின்ற மார்ப தாமத ரியாகமாமே...........................*

(இ-ள்.) சாஸ்திரத்தி லுண்டாகிய வழியுமல்லாமல்கூர்மையா னதவமுடையவர் முதலாக வுள்ள பெரியோர்களுடைய தாற்பரியமுமல்லாமற் செய்கிறதற்குத்தக்க மந்திரமு மல்லாமல்யாசகருக்குக்கொடுக்கிறது மல்லாமற் செய்கிற யாகமானது பூமாலைவிளங்குகின்றமார்பையுடைய அருச்சுனா தாமதகளியாகமென்றவாறு. (௰க)

(கலிவிருத்தம்.)

தீக்குலா வேலினாய் தவத்தின் செய்கை தான்........ ..... *
வாக்கினாற் பேசுதன் மனத்தி னாக்குத.................. *
லாக்கையா லியற்றுத லா யிருப்பது......... ............ *
நோக்கினா னிவற்றினை நுணித்துக் கூறவே......... ....... *

(இ-ள்.) நெருப்புக் குலாவப்பட்ட வேலையுடையஅருச்சுனா! தவசி னுடைய செய்கையானது வாக்கினாலே பேசுதல் மனதிலேயுண்டாக்குதல் சரி ரத்தி னாலே செய்தல் என்று மூன்று விதமாயிருப்பதுஇந்தத்தபசைதானறிந்தூக்கூர்மையாக்கிச்சொல்ல நீகேளென்றவாறு. (௰உ)

(இதுவுங்கலிவிருத்தம்.)

தீர்த்த யார்க்குஞ் செவிக்கினி தாயின .......... .......... *
வார்த்தைமாமருந் தேயென லாவென........... .......... *
வோர்த்து மென்மொழி கூறுத லோதுதல்............... *
வார்த்தை யாற்பண் ணுமாதவ மென்பதே........... .... *

(இ-ள்.) சந்தேகந் தீர்ந்தது எல்லாருக்குங் காதுக்குஇன்பமானது வார்த்தையே பெருமையுள்ள அமிர்த சஞ்சீவி நீயென்றுசொல்ல லாவது வேதசாஸ்திரம் அப்பியாசிக்கிற மேலானசொல் லைச்சொல்லுகிறது வேதசாஸ்திரங்களையோதுகிறது இப்படி யிருக்கிறது வார்த்தையாற் பண்ணப்பட்ட பெரிய தவமென்றதென்றவாறு.— (௰ங)

தெளிவுநெஞ்சைச் செறியப் பிணித் தலுங் .... ..... ..... *
களிசெயைப் புலனைக் களி மாற்றலுங் .................. *
குளிர்வுநெஞ்சி னுணர்வு கோணமையு.............. ..... *
வெளிறினமானத மாதவ மெனபதே.......... .......... *

(இ-ள்.) மனதை விஷயங்களாகிய மயக்க மடை யாமல்

ஞானமாகிய தெளிவு நெருங்கக் கட்டுதலுங் களிப்புச் செய்யப்பட்டபஞ்சேந்திரிகளைக் களிப்புப்போகலும் பகைகளென்றும் உறவினென்றும் பாராமல் எல்லாரிடத்திலுஞ் சமமாகவைத்த குளிர்ச்சியும் மனதிலும் வார்த்தைகள் மொடாதமவுனமு மிவைகள் எளிதிலேவந்த பெரியமானச தபமென்றதென்றவாறு. ※ மனசிலேதெளிவைநெருங்கக்கட்டினால் மயக்கத்துக்கு நுழையவு மிடமில்லையாதலால் நிர்மலமென்பது களிப்பைப்போக்கலே யிந்திரியஞ்செடமானதென்பது எளிதிலென்றது காயக் கிலேசப் படுத்தாமல் எளிதில் வந்ததென்பது. (௰௪)

தலைமையந்தணர் தேவர்குரவர்பால்............ ※
மலைதலின்றி வழிபடுவாழ்க்கையுந் ........................ ※
கொலைதுறத்தலுங் காமங்குறைத்தலுந்................ ※
தலைவகாயத் தவமென்றிசைப்பதே ........................ ※

(இ-ள்.) இராஜாவே முதன்மையையுடையபிராமணர்கள்தேவர்கள் பெரியவர்கள் இவர்களிடத்தில் மாறுபட்டு எதிர்ப்பதில்லாமற் பூசிக்கின்றவாழ்வுங் கொல்லுகின்றதைவிடுகின்றதும் ஆசையைக்கொடுக்கின்றதும்இவைகளைச்சரீரதபமென்றும் சொல்லுவமென்றவாறு.— (௰௫)

(கொச்சகக்கலிப்பா.)

தீத்துவளும்வடிவேலோய் செப்பியவிம்மூன்றூலும்..... ※
தீர்த்துலகமகிழ்வெய்தச் செய்கின்றநெடுந்தவத்தி .... ※
லார்த்துவருபயன்வேண்டாதரற்றுகின்றவருந்தவந்தான்
சாத்துவிகத்தவமென்று சாற்றுவதுதக்கோரே... .... ※

(இ-ள்.) நெருப்பைப்போலத் துவளப்பட்ட நீண்டவேலையுடைய அருச்சுனா! இப்போதுசொன்ன இந்தமனவாக்குகாயமென்றமூன்றுங் குற்றந்தீர்ந்து உலகத்தார்மகிழ்ச்சியையடையச்செய்யப்பட்ட பெரியதவசிலேகட்டுப்பட்டு வரப்பட்டபிரயோசனத்தை இச்சியாமற் செய்கின்ற அரியதவத்தைத்தான் சாத்துவிகத் தவமென்றுபெரியோர்கள் சொல்லுவதென்றவாறு. (௰௬)

வசையிரவமுடையனொமானிடர்கொண்டாடுகைக்கு ....※
நசையிரெடும்பொருள்பெறவுஞ் செய்கின்றதற்றவத்தை.....※

விசையவுனக்குரைசெய்தேன் மிகப்பெரியோர்செய்திடினு. *
மிசையவறிமற்றிதனை யிராசதமாந்தவமென்றே .... .......... *

(இ-ள்.) அருச்சுன குற்றமில்லாத தவசுடையவ னென்று மனிதர்கொண்டாடுகின்றதற்கும் ஆசையுடனே திரவியம்பெறவுஞ்செய்கின்ற நல்ல தவத்தை யுனக்கு விரித்துச் சொல்லி என்ன பிரயோசனம் மெத்தவும் பெரியோரானவர்கள் செய்தாலும் இந்தத்தவத்தை இராசதகுணதவமென்று உன்மனதுபொருந்த அறிவாயென்றவாறு.

பேதமையைமிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும்பிறவுயிர்க்கு.... *
மேதமுறுபெருந்துயருங் கேடுமேயியற்றுவதா... ................ *
யாதபமும்பிணியுமுழன் றாற்றுகின்றவருந்தவந்தான் .................. *
தாதலருநெடுமுடியாய் தாமதமாந்தவங்காணே ........................ *

(இ-ள்.) பூந்தாதுகளுநிற மலர்ந்தமாலையைத்தரித்த நீண்டகிரீடமுடைய அருச்சுன மிகுந்த அறியாமையை யுடைய தாய்த் தன்னுயிர்க்கும் அன்னியசீவனுக்குங் குற்றமுள்ளபெரிய துக்கமுங்கேடுஞ்செய்வதாய் வெய்யலிலும் வியாதியிலும் உழன்று செய்கின்ற அரியதவமானது தான்கண்டாய தாமததவமாவதென்றவாறு.(மஅ)

முன்செய்காரியப்பொருட்டு மன்றியேமுடிந்திதனுற்.....*
பின்பொருநற்பயன்விளைக்கு மென்பதுவும்பேணுதே .......*
நன்குடைநற்காலத்தே நல்லிடத்தேநல்லவர்க்குந்........ *
தன்பொருளைக்கொடுக்குமது சாத்துவிகத்தானமே ...... ...*

(இ-ள்.) முன்பொருவன் செய்த காரிய நிமித்தமல்லாமலேமுடிந்தவிதனுலேபின்பு ஒருநல்லபிரயோசனத்தைவிளைக்குமென்கின்றஆசையுமதியாமலே நன்மையுடைய காலத்திலே நல்லவிடத்திலே நல்லவர்களுக்குத் தன்னுடைய திரவியத்தைக் கொடுக்கின்றது சாத்துவிகத் தானமென்றவாறு. * நல்லவிடமாவது- தேசம்நல்லவர்களாவது-பாத்திரம்-தன்பொருளென்கின்றது - குலாசாரத்தால்வந்த திரவியமென்றும்- அல்லாமலும் தன்னிடத்தி லிருந்த அன்னியனுடைமையைக்கொடுக்கலாகாதென்றுமாம் ஆகையால் முன் பெற்ற உபகார நிமித்தமும் பின் பலனையிச்சித்துஞ் செய்யாமல் தேசகால பாத்திரமறிந்து தன்பொருளைக் கொடுக்கவேண்டுமென்பது.(மகூ)

கொண்டுசெயத்தருங்கரும மெனுங்குறிப்பொன்றின்றியே..*

பண்டுசிலர்செய்தற்காய்ப் பரிவினொடுபண்ணினவும் ...... *
உண்டிதனன்மேல்வினைவென் றுணர்வோடு கொடுத்தனவு*
மெண்டிசையுநிறைபுகழா யிராசதமாந் தானமே ........ *

(இ-ள்;) உபகாரங்கொண்டு செய்யத் தக்கது காரிய மென்று சொல்லப்பட்ட நினைப்பொன்றில்லாமலே முன் னாளிலே சிலபேர் செய்த உபகாரத்துக்காக அன்புடனேபண்ணின கொடையும் இப் போதுகொடுக்கின்றவிதனால்இனி மேற்பலனுண்டென் றுநினைவோடு க்கொடுத்ததுவும் எட்டுத்திக்குநிறைந்த கீர்த்தியையுடைய அருச்சு னு, இராசததானமா மென்றவாறு. (உ௰)

வாயாதவொருபொருளை வழங்காதகாலத்தே ........ *
யேயாதநிலத்திடையே யிழிந்தகுலத்தவர்களுக்கே ... *
யாயாதவழிவினொடு மப்பிரியத்தொடுங்கொடுத்தல் ... *
சாயாதபெருந்திறலாய் தாமதமாந்தானமே........ *

(இ-ள்.)யாராலுஞ் சாயாதபெரிய திரமையையுடைய அருச் சுனு கிடையாத தொரு செல்வத்தைக் கொடுக் காத காலத்திலே இ சையாத நிலத்திலே யின்குலத்தவர்க்கு விசாரியாத அறிவுடனேபிரி யமில்லாத உதாசினத்தோடுங் கொடுக்கின்றதானந் தாமத தானம் என்றவாறு. ※ கிடையாத திரவியமாவது வார்த்தை வருமென்று பொய்சொல்லி அவைகளை நீ வாங்கிக்கொள்ளென்றல்- ஆயாதவழி வுமூடம். (உக)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒப்பரிதாய வுண்டியோடியாக மூறுதவத்தானமென் று
ரைத்த, வப்படியெல்லா மறிவகையுனக்கு முரைத்தன
னடையமற்றையா, வெப்படியாகு மிவற்றினைச்செய்தா
ல்வீடுபெற்று யாநெறியாவ, தெப்படியென்னி லதனையு
முனக்குத் தெரிவகையியம்புவன் கேணீ ... ......... *

(இ-ள்.) ஒப்பில்லாத ஆகாரத்தோடு யாகம்உறுதியானதவ ந்தானம் என்றுசொன்ன அந்தநாலுவித சுபாவமெல்லாம்அறிகின் றபடிக்கு உனக்குஞ்சொன்னேன் இவைகளெல்லாம் எப்படியாகும் இவைகளைச்செய்தால் மோக்ஷம்பெற் றுயர்ந்த வழியாவ தெப்ப டியென்னில். அதனையு முனக்குத் தெரியும்படி சொல்லுவேன் நீ கேளையா வென்றவாறு. (உஉ)

ஓமென்கின்றதனியெழுத்துமுரைத்தற்கரியதற்பதமுந்...... .....*
த மங்கமழ்ந்தார் மார்பன்மற் சத்தென்கின்றதனிப்பதமு....... ...*
மாமென்கின்றவிவைமூன் றுமறிவின்பெற்றியிவற்றுலே........ *
ய முன்புணருமருமறையோ ரியாகத்தோன்றிற்றெனவறிவாய்....*

(இ-ள்.) ஓமென்று சொல்லுகின்ற தனியெழுத்தும் சொல்லுத ற்கரிதான தத்து வென்கின்ற சொல்லும் இதற்கு மேல் சத்தென்று செல்லுகின்ற தனிச்சொல்லும் ஆமென்றுசொல்லுகின்றஇவை மூன்றும் அறிவினுடைய சுபாவம் ஒளிடும்- மணமுமுடைய பூமாலைதரித்தமார்பையுடைய அருச்சுனு, இந்தமூன்றினுலே நாம் முன்பு அறியப்பட்ட வோதவரியவேத பாராயணஞன பிராமண னுடையயாகத்திலே பொருந்திற்றென் றறிவாயென்றவாறு.※பதமாவது-சொல். (உரு)

ஓமென்றுரைத்தே வினைசெய்வார் வீடுற்றவர்வீடுறுமவர்க ..... *
டாமுன்புரைத்ததற்பதத்தை யுரைத்தேசெய்வார்சத்தென்றே .... *
யாமென்றிருந்தேவினையாகு மிவைமற்றழகாயினவெல்லாங் ....... *
காமபலத்தின்மேலின்றிச் செய்வாரறிஞர்கதிர்வேலோய் .... ... ...*

(இ-ள்.) பிரகாசமுள்ள வேலைத்தரித்தஅருச்சுனு ! மோக்ஷம்பெற்றபிரமம் ஞானிகள் ஓமென்று பிரணவத்தைச்சொல்லியே கருமத்தைச் செய்வார்கள் மோக்ஷத்தைப் பெறுகிறவர்கள் தாங்கள்முன்பு சொன்ன தத்தென்று சொல்லியே கருமத்தைச் செய்வார்கள். சத்தென்று சொல்லியே நாயென்றிருந்த கருமமாகும் இது அழகானது எல்லாம் விஷய பலத்தின்மேலில்லாமற் கருமத்தை யறிவுடையவர்கள் செய்வார்க ளென்றவாறு. ※ ஓம்-ஆவது பிரம சொரூபமத்ததாவது அதென்றுபேர் அதுவென்றந்தப் பிரமத்தையே சொன்னது -சத்தென்றது- நல்லதென்று பேர்உலகத்தாரும் நல்ல காரியம்பண்ணினவனைச் சற்கருமம் பண்ணினு னென்பார்கள். ஆகையாற்சற்குணமே பிரதானமென்பது கருத்து அல்லாது செய்தால் அசத்தாமென் றருத்தாபத்தி. (உசு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

காதலாலிந்தப் பதங்கண்மூன் றினையுங் கற்றுணர்ந் தவ
ரெலாங் கருத்தா-லோதலாம்வகையா லுரைத்தலாற்றவ
மூற் தானமுமுதலிய வுயர்ந்தா - ராதலா லிந்தப் பதந்

தனைவிரும்பி வினைசெய்த தகுவதென் றளித்தான்- தீதி
லா துலகந் தன்னுளே யுதித்த தேவகி திரு வயிற் றுதித்
தான்..........................................*

(இ-ள்.) ஆசையினாலேயிந்த ஓமதத்து சத்தென்றசொல்லுகள் மூன்றையுங் கற்றறிந்த பெரியவர்களெல்லாங் கருத்தினாலே யோதலாகும் படியானவாக்கினாலே சொல்லுதலினாலே தவசுந் தானமுமுதலானவைகளாலேமேலானார்கள் ஆகலால் இந்தமூன்றசொல்லையும் இச்சித்துக் கருமத்தைச் செய்யத்தக்கதென்றருளிச் செய்தார் தீங்கில்லாம லுலகமானது தன்னுக்குள்ளே பிறக்கத் தாம் இந்தவுலகத்திலுள்ளவர்களி லொரு தேவகியினுடையதிருவயிற் றிலேதிருவவதாரஞ் செய்தருளிய கிருஷ்ணசுவாமி யென்றவாறு. (௨௫)

சிரத்தாத்திரயவிபாகயோக - அத்தியாயம் - முற்றும்.
ஆக அத்தியாம்-௰௭-இ கூடியசெய்யுள்(௬௱௮௪.)





பதினெட்டாவது.

# சகலஉபநிஷத்துப் பிரதிபந்தனமோட்ச யோக - அத்தியாயம்.



(கலிவிருத்தம்.)

ஏகமே கருதுவா ரிதயமே விளைவ தோர்.... ....... ....*
யோகமே யுலகிலோர் பொருவிலா மொருவனே......*
நாகமே யமளியாய் நளினமே மாலவதோர்........ ....*
மேகமே பணியெறு விசையன்மேல் வினவுவான்........*

(இ-ள்.) ஒன்றான பிரமத்தையே தியானிக்கிறவர்களுடைய இருதயத்திலே விளையாடப்பட்ட ஒப்பில்லாத யோகமோ வுலகத்திலுள்ளோர்களில் ஒப்பில்லாதகர்த்தனே சேஷனாகிய பாய்சயன மா

கிய தாமரைகளே மலரப்பட்டதொரு நீலமேகத்தை யொப்பானவ ரோ அனுக்கிரகம் பண்ணுமென்று சொல்லி அருச்சுனன்மேற் கேட் கின்று மென்றவாறு. (க)

(இதுவுங்கலிவிருத்தம்.)

சன்னியாச மாவதுந் தகுந்தியாக மாவது............ *
மென்னியாய மாகவெம்பி ரானியம்பு சென்னவே....... *
யன்னிவாயு வானமாகி மண்ணு நீரு மாமெயான் .... *
றுன்னியா பொருட் டொகைத் திறஞ்சொல்த் தொட ங்கிறுனே...................................... *

(இ-ள்.) நீர்சொன்ன சத்திறுடைய நியாயமான சன்னியாசமாவ தும் அதற்குத் தக்க தியாக மாவதும் எந்த நியாயமாக இருக்கும் எங்கள் சுவாமியே சொல்லுமென்ன ஆகாசம் வாயு அக்கினியாகிய பின்பு நீரு மண்ணுமாகி நின்ற கிருஷ்ணசுவாமி பழைய நியமமுள் ளபொருளினுடைய தொகையின் வகையைச்சொல்லத் தொடங்கினு ரென்றவாறு. (உ)

காமமென் றிரும்பயன்செய் கனமமான யாவையுந்... *
தாமடங்க வேயிருத்தல் சன்னியாச மாவதிங்............ *
கேமமின்றி யேவினைப்பயன்களான யாவையுந் ...,,.. *
தீமையென் றறத்துடைத் திருத்தறியாக மாவதே...... *

(இ-ள்.) இந்தப்பிரபஞ்சத்தில் இச்சைபொருந்தியபிரயோ சனத்தைச் செய்யப்பட்ட கருமமானது சகலமு மடங்கத் தாமேய கமாக இருக்கிறது சன்னியாசமாவது இன்ப மில்லாமலே கருமப லன்களானவை சகலமும் பொல்லாதென்று அறத்துடைத் திருக்கிற து தியாகமாவ தென்றவாறு. (ங)

திங்கியற்று கின்றதீ வினைத் திறங்கள் போலவே..... ..... *
யீங்கியற்று நல்வினைத் திறங்களான யாவையு .... ... ..... *
மாங்கியற்ற வின்றிவிட் டிருத்தலே யுருத்தமாஞ் .. .. *
சாங்கியத்தை யோகிடுந் தவத்துளோ ருணாப்பரால்... *

(இ-ள்.) தியாகமாவதும் பொல்லாங்கு செய்கிறபாவவிதங் களை விட்டாற்போலவே இங்கேசெய்யப்பட்ட புண்ணிய விதங்களா ன சகல கருமமுஞ் செய்வதில்லாமல் விட்டிருத்தலே தியாகமென்று

அர்த்தமாகப்பட்ட சாங்கியத்தைச் சொல்லாநின்ற தவகை யுடையவர்கள் சொல்லுவார்க ளென்றவாறு. (௪)

ஞானகா ரணங்களாத லியாக மோடு நற்றவ ..........*
தானமோடி காத்தலைத்த காமைகூறு வாருளர் .... ....*
ரானகார ணத்தினு லறிந்தடங்கி னூர்க்கலா... .........*
வினமா மிவற்றை விட் டிருத்தலென் றிருத்தலே......*

(இ-ள்.) ஞானத்துக்குக் காரணங்களாகையால் யாகத் துடனே நல்ல தபசு தான மிவைகளை விடுகிறதைத் தகா தென்று சொல்லுவார்களுண்டு யாகந் தவந்தானமென்ற வினைகளை விட்டிருக்கிறதென்றிருத்தல் இவைகளாலே ஞானமுண்டான காரணத்தினுலிதையறிந்து அடங்கினவர்களுக் கல்லாமல் அறியாதவர்களுக்கு விடக்கூடாதென்றவாறு. (௫)

(கலிவிருத்தம்.)

தியாகமூன்று வகைப் படுஞ் செப்பக் கேள்......... ...... ....*
யாகமுந் தவந் தானமு மென் றிவை .......... .... ...... .........*
மய லறுக்கு மனத் தினை யாத லா... ......... ....... ...... ... ... *
லயர் வுறாத்தல் விடுகை யடாத தால்............... ........*

(இ-ள்.) இந்தத்தியாக மூன்றுவிதப்படும் அதுசொலலக்கேள் அருச்சுன! யாகமுந் தவமுந் தானமுமென்ற விந்தக்கருமமானவை மனதிலுள்ள மயக்கத்தை யறுக்குமாகையால் விடுதலென்று சொல்லுதல் மறந்துசொல்லுதல் ஆகையால் இந்தக்கருமத்தைவிடுவது அடாத தென்றவாறு. (௬)

என்ன செய்வ தெனி லிவ் வினைக ளாற்.......... ...... ..*
பின்னை யெய்து பெரும் பய னுவது .......................*
தன்னை விட்டுசெ செய்த தகு மென்பது ....................*
முன்னை யோர்க்கு மெனக்கு முடிவ மோர்...... ... ......*

(இ-ள்.)இந்தக்கரும மானது ஞானகாரணமாகையால் விடப்படா தாகில் மேலதிக மாவது என்ன செய்வ தென்று கேட்கில் இந்தக் கருமங்களாலே பிறகுவரப்பட்ட பெரியதான.பிரயோசனமாவதை இச்சியாமல் விட்டுக் கருமத்தைச் செய்யத் தகு மென்று

லாதவனுக்கே நானே அவன் அவனேநான் ஆகையாலே அவனேபி ரமமென்பது கருத்து. (ய)

யாக்கையோடு மிசைபுமிருவினை ......... *
நீக்கலாவன வல்லநிலத்திடை ......... *
வீக்கமாய வினைப்பயன் விட்டினார் ......... *
போக்கலவினை யாவையும் போக்கினார் ......... *

(இ-ள்) உலகத்தினிடத்திலே சரீரத்தோடும் பொருந்தி நல்வினை தீவினையென் றிரண்டாகவிருந்த கருமத்தைச் சரீரமிருக்கையில் விலக்கலாவதல்ல ஆகையாலே வளர்ந்தாகிய கரும பலனைப்போக்கினவர்களே திரிமூர்த்தி முதலானவர்களாலும் போக்குதற்கு ஆகாதகருமமெல்லாவற்றையும், போக்கினவர்களென்றவாறு. இவையேகருமத்தியாகமென்பது. (யக)

(அறுசீரடிய சிரியவிருத்தம்.)

இன்றனவு மினியனவு மிரண்டுங்கூடி யிசைந்தனவுமாய் ......... *
மூன்றுநின்றவினை மூன்று மவற்றால்வந்த முடிபொருளும் ......... *
பொன்றுனதுவுந்தொழிலும்போ லிருக்குமந்தப்பொய்மெய்யை *
யுன்றுதவர்க்கேயுள்ளதிவை யுணர்ந்தார்க்குளவா யுறுவாவால் ..,*

(இ-ள்) ஆகாததான அநிஷ்டமும் இனியதான இஷ்டமும் அவையிரண்டுங்கூடி இசைந்ததாகிய மிசிரமுமாகி நினைக்கப்பட்டகருமமும் அந்த மூன்று கருமத்தாலும்வந்த அவ்வவற்றுக்கு முடிந்தபொருளானது அநிஷ்டகருமத்துக்கு நரகமும் இஷ்டகருமத்துக்குச் சொர்க்கமும் மிசிரகருமத்துக்குப் பாரியாபுத்திராதிசம்பத்தும் பொன்னுந் தொழிற்பட்ட பூஷணமும்போல விருக்கும் அந்தப் பொய்யாகிய மெய்யைநினைத்து விசாரித்து இது மெய்போலக்கண்டபொய்யென் றறியாதவர்களுக்கே இந்தக்கருமபலமான நரகசொர்க்கசம்பத்தாதிய அனுபவமுள்ளது இதுகானற்சலம்போலக்கண்டு பொய்யென்று தெளிந்தவர்களுக்கு உண்டாய்த் தோன்றுதென்றவாறு. (யஉ)

ஓங்கியவுலகினி லுயர்ந்த நன்மையைத் ......... *
தீங்கினையாம்வினை யாவுஞ்செய்தற்குச் ......... *

சாங்கியநூலிலே சமைந்தசாதன ............ ....*
மீங்குளவைந்தவை யெடுத்துக்கூறுவாம் ..........*

(இ-ள்.) உன்னதமான உலகத்திலே வுயர்ந்ததான நன்மையைத் தன்மையை யுண்டாக்கப் பட்ட கருமமெல்லாஞ் செய்வதற்குச் சாங்கிய சாஸ்திரத்திலே உண்டான சாதனம்அஞ்சுண்டு அந்தச்சாதனமான காரணத்தை இப்போது எடுத்துச் சொல்லுவோம். எ-று, * ஈங்கவை யெடுத்துக் கூறுவாமெனவும் ஐந்துளவெனவுமாறுக.

இருப்பிடமாமுடம் பியற்றுமாருயிர்க் ............ *
கருத்தினைமுதலிய கரணங்காற்றினல் .... .......... *
விருப்பொடுவருந்தொழிலிவற்றின்மெய்த்தொழி
கருத்தமாமொழியென வாகவைந்தரோ ......[ற்

(இ-ள்.) ஆதரவாவது-ஆகாரமானவுடம்பு- நடத்தப்பட்டசீவன்-மனதுமுதலான அந்தக்கரணம்- பிராணுபானுதி - வாயுக்களினுலே ஆசையுடனே வரப்பட்டதொழில்-இந்தவுடம்பு-சீவன்-கரணந்தொழிலென்ற- நாலினுடைய உண்மைத் தொழிலுக்கு அருத்தமாகப்பட்ட சோதியான தெய்வமென்பதொன்று முன்சொன்னநாலினுடனே தெய்வமொன்றுகூட ஆக-அஞ்சென்றவாறு. (யக)

வாக்கினுலாதன்மெய் மனத்தினுலாகுத.......... : *
லாக்கையாலாதலிவ் வுலகில்யாவரும் ...... ...... . *
வீக்குவார்கிலையினுய்வினையிரண்டிலொன்......*
ருக்குநாளிங்கிவை யைந்தும்வேண்டுமால்....... *

(இ-ள்.) வாரா விறுகக் கட்டின வில்லையுடைய அருச்சுனுவாக்குமனங்காயத்தாலாகுதல்இவ்வுலகில் எல்லாரும்நல்வினைதீவினை இரண்டிலொன்று செய்யும்போது இப்போது சொன்ன இந்தவுடம்பு சீவன் கரணந் தொழில் தெய்வமென்ற அஞ்சும் வேண்டும்.—எ-று,

இவ்வகையேவரு வினையிரண்டையு ........ ........ *
மெய்வகையேயயா னன்றிவேறிலைச்... ........... *
செய்வகையானெனச் சிந்தைமேயினு........... *
னுய்வகைவேறிலா னுணர்வுமாய்ந்துளான் .....*

(இ-ள்.) இந்தப்படியே வரப்பட்டகருமமிரண்டையுமெய்

பானபடி பொருந்தினவனையல்லாமல் வேறில்லை இந்தக்காருமத்தை
ச்செய்யப்பட்ட விதத்தையுடையவனும் நானென்றுமனதிலே அக
ங்கார மடைந்தவனே அந்தஅகங்காரமே கெதியல்லாமல் வேறேத
ப்பிப்பிழைக்கின்ற வகையில்லாதவன் அறிவு கெட்டவன்.—எ-று.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

யாவனொருவன்றன் னுடம்பை யானென்றருக தியல்பொழிந்தா *
னியாவனொருவன் கரணங்களிபாலேதான் றும்பவினை ந்திரா ...... *
னியாவனவனிவ்வுலகத்தை யடையக்கொன்றானெயிடினும் ...... *
பாவமில்லையவன் கொன்ற பழியுமில்லைப்பார்மன்னா ............ *

(இ-ள்.) எவனாகிலும் ஒருவன் தன்னுடைய சரீரத்தைநானெ
ன்றிருக்கப்பட்ட சுபாவத்தை யொழிந்தானோ அவன் எவனாகிலும்
ஒருவன் அந்தக்கரணங்களானவைஏதாகிலும்ஒருவிஷயங்களின்இச்
சையாக விராதோ அவனெவனோ அவனிந்த உலகத்தாரை எல்லாங்
கொன்றானாகிலும் பாவமு மில்லை அவன்கொன்றபழியுமில்லைக்கண்
டாய்ராசாவேயென்றவாறு * பாவமும்பழியுமில்லையெனவே அவன்
செய்தகருமம் விதிப்படிமுடிந்ததாயிற்று. (௰எ)

அறிவுமறியப்படும்பொருளு மறிவானொருவன்றானுமாய் .... .... *
நெறியில்வினைகள்விதிக்கின்ற விதியினிலைமைநிற்பதுதான் ..... ..... *
செறியுந்தொழிலுஞ்செய்வானுஞ் செய்தற்குரியவறிவுமாங் ........ *
குறியில்வினைகண்முடிப்பதுவு மின்னுஞ்சிலவுங்கூறக்கேள் ....... *

(இ-ள்.) எல்லாவற்றையுமறிகின்ற அறிவும் அந்த அறிவினாலறி
யப்படுகின்றபொருளும் இவைகளிரண்டையு மறிகின்றவனும் ஆகி
க்கருமத்தினாலேகருமத்தைவிதிக்கின்ற விதியினுடையநிலைமைகெ
டாமல் நிற்பது அதுதானெருங்கிய கருமமும் கருமத்தைச்செய்கி
ன்றவனும் அந்தக்கருமத்தைச் செய்வதற்கு உரித்தான அறிவுமெ
ன்று மூன்றாகப்பட்ட குறியிலே கருமங்கள் முடித்திருப்பது இன்
னஞ்சில சொல்லக்கேள் அருச்சுனா! வென்றவாறு. (௰அ)

ஆன்றவறிவுங்கருமமுமக் கருமங்களையாக்கிடுவானு ..................... *
மூன்றவுணரும்புத்தியொடு திருத்தியெனவே றுரைத்தனவுந் ...*
தோன்றவினையுமின்பமுமுன் சொன்னகுணத்தின்றொடர்பாலே *
மூன்றுவகையாமோரொன்றே யவற்றின்றிறதான் மொழியக்கேள்.*

(இ-ள்.) நிறைந்த அறிவாகிய ஞானமும் அந்த ஞானத்தினுற் செய்கின்ற கருமமும் அந்தக்கருமங்களைச் செய்கின்றவனு மென்ற மூன்றையு மூர்த்தியாக அவை யறியப்பட்ட புத்தியுடனே திருத்தியென்று மேலேசொன்ன பிரியமுங் கண்காண வுண்டாக்கப்பட்ட சுகமுமாக ஞானங்-கருமங்-கர்த்தன்-புத்தி-தயிரியம்- சுகமென்றஆறுமொவ்வொன்றே முன்சொன்ன முக்குணத்தொடர்ச்சியினுலேமூன்றுவிதமாம் அவைகளினுடைய விதத்தைநான் சொல்லக்கேள் அருச்சுனவென்றவாறு. (௰௯)

நன்றாய்ஞானத் திரளாகி நானுவிதமாய் விரித்தெங்கும் ....... .... *
பொன்றுநின்ற பூதங்கடோறும் பொன்றாப் பொருளாகி ....... *
யொவ்வாநிற்ப தொன்றினையப் படியேயுணரு முணர்வதனை .... *
யன்று மென்ஞர்சாத்துவிக ஞானமெனவே யமைப்பர்களால்...*

(இ-ள்.) நன்றாகி ஞானத்திரளாகிப் பலவிதமாயெங்கும் வியாபித்து அறியப்பட்ட சகலபூதங்களிலும் அழியாத பொருளாகி ஏகமாகி நிற்பதாகிய ஆத்மாவானவொன்றை அப்படியே யறிகிற அறிவைச்சாத்துவிகஞானமென்றே விதிப்பார்கள் அல்லவென்று சொல்லாரென்றவாறு. (உ௰)

ஊனப்படு மிவ்வுடறோறு முள்ள பொருளை யுணராதே......... *
ஈனபடக்காண் கின்றவிரா சதமா ஞானமே யாகு .. .... ...... *
ஞானத்திரளாய் நின்றவதயோ ருடம்பினிடையு நாட்டிடையோர் *
தானத்திடையு மடங்கக்காண் பதுதா மதமா ஞானமே.... ......*

(இ-ள்.) நாசமாகிற குற்றமுண்டாகிய இந்தச்சரீரங்கடோறுமுள்ள ஆத்மாவையொன்றை யென்றறியாமலே பிராமணாதி வர்ண பேதங்களிலும் பிரமசாரியாதியா சிரமபேதங்களிலும் பேதப்பட்டிருக்கிறதாக எண்ணியினமுண்டாகக் காணுகிற ஞான மிராசதமான ஞானமேயாகும் ஞானந்திரண்டதாகியபூரணமாகி நித்திய மாகிநின்ற ஆத்மாவை யொருடம்பினிடத்திலும் நாட்டிலொருதலத்தினிடத்திலுமடங்க மற்றவிடங்க ளெல்லாம் பாழாகக்காண்பதுதாமதமாகிய ஞான மென்றவாறு. ※ ஆத்மாவாவது பிரமம்இந்தஆத்மாவை வர்ணாசிரம பேதங்களிலும் பேதமாக இருக்கிறதாக நினைத் தனுதிக்கங்களாலே பல மீனுதிக்கமாமென்று ஆநேகமாக வரு

றபலனை இச்சித்து வர்ணாச்சிரமங்க ளிலாநிக்குமுள்ள வர்ணாச்சிரமகரு மம் அனுஷ்டானம் பண்ணுகிறதிலுமே இனமாகக் காணுகிற இரா சதஞான மென்பார் இப்பால் தாமத குணத்துக்கு ஓருடம்புமொருதா னமுமென்றது கல்லு நவலோகங்களாலேபண்ணின விக்கிரகங்களை ஓருடம்பு நாட்டிலொருதானமாவது மலை நதி குளம் மரம் இவை முதலான வனேகதானங்கள் இவைகளை விரிக்கில் பெருகுவாம். (௨௧)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வீதலும் பற்று மேலா வினைபயன் வேண்டல் வேண்டாக்.... *
காய்தலொன் றின்றிச்செய்யுங் கருமஞ்சாத்துவிக் கன்ம... *
மாய்தரும் பலத்தி னோடும் வருங்கர ணத்தி னோடு..... .......*
மேய்தருங் கருமமெல்லா மிராசத கரும மேயாம்.......... *

(இ-ள்.) சாகிறதுஞ் சமுசாரத்திலே கட்டுப் படுகிறதும் வே வத்தக்கதாக கருமபலனை ஆசைப்படுதலும்வெறுப்பாய்கோபித்தலு மிவற்றிலொன் றுமல்லாமற்செய்யப்பட்டகன்மஞ்சாத்துவிககன்ம ம் அந்தக்கருமத்தா லுண்டாய் அழியப்பட்ட பலத்துடனும் அந்த ப்பலத்தி லிச்சையாய்ப் பொருந்தி வரப்பட்ட அந்தக் கரணத்துட னுங் கூடி யிசைந்து செய்யப்பட்ட கருமமெல்லாம் இராசத கரு மமே யாகு மென்றவாறு. (௨௨)

கொலைபெரும் பற்று மேலோர் கூறிய நீதி யோடுங்.... ...*
கலைதெரிந் துணர்ந்து மெண்மை கடைப்பிடியாமை யார்க்கு *
மலைதருங் கேடுசூழ்த லனைத்தினு மொன்றிச்செய்யத்....... *
தலைவருங் கரும மெல்லாந் தாமத கரும மேயால்............ *

(இ-ள்.) கொல்லுகிறது பேராசையாகிய கட்டு பெரியவர்கள் சொன்ன நீதியோடுஞ் சாஸ்திரத்தையோதித் தெளிந்துமேலானகா ரியத்தை மறவாதகடைகட் பிடியாமல் எவர்களுக்கும் அலையச்செ ய்யப்பட்ட கேடுமூடச்செய்கிறது முதலான பொல்லாதகரும மெ ல்லா வற்றிலும் மனது ஒருமை யாகச்செய்ய அதுவே முந்தினதாக வரப்பட்ட காரியமெல்லாந் தாமத கரும மென்றவாறு. (௨௩)

பற்றுமாங் காரந்தானும் பழுத்தறத் துறந்தி யாவு........... *
முற்றெழு முயற்சியோடு நிலையினோ டுணாயு மொன்றி... .. *

பெற்றமோ ரிழிவுபெற்றி துன்பமோ டின்பமென்றுஞ் *
சற்றுமோர் சலிப்பிலாத தலைவன்சாத்துவீக னென்பான்...*

(இ-ள்.) கருமபலத்தி லிச்சையு மாங்காரமுங் கெட எல்லாம்வி ட்டுத்தன்னிடத்தி லிருந்தெழும்புகின்ற வுச்சாகத்தோடும் நிலையோ டும் சௌரியத்தோடுமிருந்து யாதாகிலு மொரு போக்கு வரத்தன ன்றலாப நஷ்டங்கள் துக்கம் அவற்றுடனே சுகமென்ற விவைமுத லாகியன வந்தாலெல்லாவற்றுக்கும் சற்றாகிலு மொருசலிப்பில்லாத கர் த்தன் சாத்துவிகனென்று சொல்லப்படுவ னென்றவாறு. (உச)

(கலிவிருத்தம்.)

வினைப்பயன்றனை வேண்டலும் வேட்கையு... ....... *
மெனைத்துமி யார்க்குமி டாமையுந் தாய்மையு......*
நினைப்பி னீடலு நெஞ்சின் மகிழ் தலு.... ..... ..... ..... *
பினைப்ப வாழ்பவ ரிராசத மாந்தரே.....................*

(இ-ள்.) செய்கிற கருமத்தின்பலனை யிச்சித்தலும் சகலசுகமுந் தனக்கே வேணுமென்கின்ற ஆசையு மெவ்வளவாகிலும் யாருக்குங் கொடாத லோபமுஞ் சுற்றமும் பலசித்தியா கிறதற்கு முன்னே நினைக்கிற நினைப்பிலே ஆமோ ஆகாதோ வென்று அனேக நீளமகா நினைக்கிறதும் பலசித்தியான பேர்க்கு மனதிலே சந்தோஷிப்பிக்கிற தும் இந்தவிதமாக வாழ்கிறமனிதர் இராசதமனிதரென்றவாறு.(உரு

மனமொருக்கலும் வான்கலை நூல்களைத் .............. .... *
தனமொருக்கொடு கற்றலுந் தக்கவ..................... .... .... *
ரினமகிழ்ந்தலு மின்றியுண் டாக்கிய.................... ....... *
சினம்விடுக்கிலார் தாமதஞ் சேர்ந்தவரார்......... ......*

(இ-ள்.) மன்துபலவழி போடாமற் கொடுக்கிறதும் பெரு மையுள்ள கலைசாஸ்திரங்களை த்திரவிய செலவுபண்ணிக் கொண்டாகி லும் கற்கிறதும் பெரியவர்களின் கூட்டத்தைச் சந்தோஷிப்பிக்கிற துமல்லாமல் உண்டாக்கின கோபத்தை விடமாட்டாதவர்கள் தாம தகுணஞ்சேர்ந்தவர்களென்றவாறு. (உசா)

ஈன மற்ற துற வற மில்லற ................................ ......*
ஞானம் பெற்றொடு நல்வினை தீவினை .................*

யான தஞ்சுவ தஞ்சத் தகா தென... ..... .......... *
தானறிந் தது சத்துவ புத்தியே.................. *

(இ-ள்.) ஒருகாரியத்தை நினைக்கிறபோது இது குற்றமற்ற து றவறமோ இல்லறமோ ஞானமோ பந்தமோ இதுபுண்ணியமோபா பமோவென் றுவிசாரித்தாலது இது சாஸ்திர விதி யல்லாததினலே பயப்படுவது இது சாஸ்திரவிதியாகையாற் பயப்படத்தக்கதல்லவெ ன்றுதான்நிச்சயமாகவறிந்ததுசாத்துவிகபுத்தியென்றவாறு.(உ௭)

தரும்ம பாவந் தனக்குச் செய்த தருங்.................. *
கருமஞ் செய்யத் தகாத கரு மங்க ........ ......... ........ *
ரருமை யாவறி யாத வறி வரோ .......... ..... ........ *
விருமை யாயவி ராசத புத்தியே.................... *

(இ-ள்.) தர்மம் பாவந்தனக்குச் செய்யத்தக்ககாரியஞ் செ ய்யத்தகாத காரியங்கள் இவைகளை யருமையினு லறியாதஅறிவுசாத் துவிகதாமதமானவிரண்டுவிதமுங் கலந்ததாகிய இராசதபுத்தியெ ன்றவாறு. ※ தன க்கென்று அவரவருக்கு விதித்த குலா சாரப்ப டியே தனக்குச் செய்யத்தக்க தென்றார். (உ௮)

பாவ மாகத் தருமத்தைப் பார்க் கிலு .............. .... *
மாவ தாமென் றடாதது நோக் கலுந்......... .... ...... *
தீமை செய்கின்ற சிந்தனை தீங் கிலே ........ ... ........ *
போவ தாவது தாமத புத்தியே.......................... *

(இ-ள்.)தருமத்தைப் பாவமாகப் பார்க்கிறதும் அடாதபாவத்தைஅ துதானதருமமாகப் பார்க்கிறதும் பொல்லாதைச் செய்கின்ற மன துபொல்லாதிலே போவதாகியது தாமதபுத்தி என்றவாறு. (உ௯)

மனஞ்செயுந் தொழின் மன் னுயி ரின்றொழி......... *
வினஞ்செய் திந்திரியஞ் செய்தொழி லென்றிவை........ *
கனஞ்செய் தேறினுங் கண்டுபொறுத் தலுஞ்..... ... *
சினஞ் செயாமையுஞ் சாத்துவ திருத்தியே...... ... *

(இ-ள்.) மனதுசெய்கிறதொழில் நிலையான பிராண வாயுவி னு டையதொழில் அஞ்சென்று கூட்டஞ்செய்த இந்திரியங்கள் செய்கி

ன்றதொழிலென்று சொல்லப்பட்ட கருமங்கள் கனமாகச் செய்து அதிகமானாலும் அவைகளை வெவ்வேறாகக்கண்டுபொறுமையுங்கோபமுஞ்செய்யாத பொறுமையுஞ் சாத்துவிகத் தயிரிய மென்றவாறு.— (கய)

பண்ணிக் காமத் தருபய னைக்கொள்வ…………*
னெண்ணித் தாங்குந் திருத்தியி ராசதங்…………*
கண்ணிச் சோகங்க ளிப் பறக்கம் பய…………*
நண்ணித் தாங்குந் தமப யொறை நானுமே…………*

(இ-ள்.) கருமத்தைப் பண்ணி யந்த இச்சையான துரப்பட்டபலனைக் கைக்கொள்ளவேண்டி நினைத்து மனதுபிராண வாய்வு இந்திரியமிவைகளுடைய தொழிலைத்தாங்குகின்ற திருத்தியானதுஇச்ந தயிரியம் தயிரியம் பொறுமைதிருத்தி யிவை மூன்றுமொன்று இப்பால் விசாரிக்கிற சுகம் மதம் நித்திரையபயமிவைகளுண்டாகிறவிஷயங்களை இச்சித்து மனது பிராணவாய்வு இந்திரியங்களில்தொழிலைக் கூடித்தினந்தினமுந் தாங்கப்பட்ட தயிரியந் தாமத தயிரிய மென்றவாறு. (ருக)

துன்ப மாவது பொன்று றுடக் கற…………*
வின்பமாகி வினைவிடை யாவர்க்கு…………*
மன்ப வாரமு தேயென லாவதா…………*
மென்ப சாத்து விதத் தருமின்பமே…………*

(இ-ள்.) தோழா கேள் ஒருசுகத்தைமுதல் பழகுகையில்துன்பமாவதை யொப்பாகி யிருந்து பழக்கந்தீர்ந்தபிறகுசகல கருமத்துடக்கும் அறத்தக்கதாகச் சுகமாகிவிளைகிற விடத்திலே யெல்லாருக்குங் கிடையாத அமிர்தமென்று சொல்லலாவ தாகு மென்பது சாத்துவிகங்கொடுக்கிற சுக மென்றவாறு. (கஉ)

பொருத்த மாம்புல னொடு பொறி யிலே…………*
யருத்த மாயெழுந் தாரமு தென்ன லாய்…………*
விருத்த மாய் விளைந் தாவிட மாகியே…………*
யிருத்த லாகுமி ராசத வின்பமே…………*

(இ-ள்.) இந்திரியங்களுடனே பொருத்த மாகிய விஷயங்

ளிலே விசுவாசமா யெழுந்தால், அமிர்தமென்று சொல்லாகி வெறுப்பா யெழுந்தால் விஷயமாகியிருக்கிறது இராசத சுக மாகுமென்றவாறு. (ருரு)

> துடருறக்க மயக்கொடு சோம்பு மேற் ........ *
> படவுதித் தவை பண்ணும் பொழுதினுங் ........ *
> கடன் விளைத்து முடிந்த காலத் தினு ........ *
> மிடர் விளைப் பது தாமத வின்பமே ........ *

(இ-ள்.) எந்நாளுந் தொடர்ந்து வருகிற நித்திரை மயக்கமுந் தனுடைய சோம்பு இது அதிகப்படவுண்டாகி அவைகள் செய்யும் போது அது முறைமையாக வுண்டாக்கி முடிந்த போதும் ஆத்மஞான சுகம் பிறக்கவொட்டாமல் துக்கத்தை யுண்டாக்குவது தாமதசுக மென்றவாறு. (ருச)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

> இந்த வியற்கை யினு லிக்குணங் களை விட்டவ ரில்
> லை-அந்தணர்க்கும் வணிகர்க்கு மர சருக்குஞ் சூத்
> திரர்க்குந்-தந்தமியற்கையினுய்குணமூன் றின்றன்
> மையினுல் - வந்தவினைத்திற மவற்றைபுணர்த்தக்க
> கேண்முடிமன்னு ........................ *

(இ-ள்.) இந்தச்சுபாவத்தினுலே இந்தக் குணங்களை விட்டவர்களில்லை பிராமணருக்கும் ராசாக்களுக்கும் வைசியருக்குஞ் சூத்திரர்க்குந் தங்கள் தங்கள் சுபாவத்தினுலாகிய மூன்றுகுணத்தினுடைய சுபாவத்தினுலே வந்த கருமவிதங்கள் அவைகளை யுனக்குத் தெரியச்சொல்லக்கேள் கிரீடந்தரித்த ராஜாவே யென்றவாறு. (ருரு)

(கலிவிருத்தம்.)

> களைசெயைம் புலன்களைக் காண நான்குடன் ........ *
> றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும் ........ *
> பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமு ........ *
> மறையவர் தொழிலென வழுத்த வேண்டுமே ........ *

(இ-ள்.) குற்றத்தைச்செய்கிற பஞ்சேந்திரியங்களை அந்தக்

கரணநாலுடனே அவைஅவைகளை அந்தந்தத்துறைகளிலும் அடக்கிறதும் தேகமும் போகங்களை விட்டதயசும் சாஸ்திரவிதியாசாரமான சவுசாதிசுத்தமும் படித்தவர்களிடத்தில் விகாரமில்லாத பொறுமையும் அவற்றுடனே பாரத்துவத்தையறிகிறகல்வியும் வேதசாஸ்திரார்த்தமும் பாரதத்துவநிச்சயமும்பொருந்தின ஞானமும்பிராமணர்களின் கருமமென்று சொல்லவேணு மென்றவாறு. (௬௬)

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையும் ......... *
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னிட்டமுங் .............. *
கொலைபயில் போர்களில் புறங் கொடா மையுஞ் ...... *
சிலைமலி தோளினு ரசர் செய்கையே ............ ......... *

(இ-ள்.) வில்லுச்சண்டைமிகுந்ததோளையுடையஅருச்சுனா கர்த்தத்துவமுந் தானமும் அதினுடனே ஆக்கிர மான ஆண்மையுஞ்சலியாத நிலைமையான தயிரியமுங் கீழ்மைப்படாத மனதுடையமேன்மையுங் கொல்லுகிறதைச் செய்யப்பட்ட சண்டை களிலே ஓடாமலெதிர்நடக்கிறதும் அரசர்கள்தொழி லென்றவாறு. (௬௭)

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணியம் ............ *
வழுவறச் செய்கைதொல் வணிகர்வாழ்க்கையாம் ......... *
பழுதற விவர்களைப் பாது காத்தலே ......... ...... .... *
விழுமிய தொழில்கள் வேளாளர்க் கென்பதே....... .... *

(இ-ள்.) உழவுதொழில் பசுக்களைக் காக்கிறது வாணிபம் குற்றமறச்செய்கிறது இவைகள் பழமையான வைசியருடைய தொழிலாகும் இந்தமூவரையுங் குற்றமற விடைவிடாமல் காக்கிறது மேலாகிய வேர்த்தொழில்கள் செய்கிறது இந்தத்தொழில்கள்சூத்திரரான வேளாளருக்கென்று சொல்வதென்றவாறு. (௬௮)

(கலிவிருத்தம்.)

தீராவகைதஞ் செயலேசெயவே................ *
நாராயணனாமுதனாயகனுக் ....... ... ........... *
காராதனையா மதனாலவரே ............... ... ....... *
வாராவழியா மவரமேதருமால்............... .. *

(இ-ள்,) இந்தநாலுவருணத்தாருந் தங்கள்தங்களின் தொழிலையேசெய்யவே அவைநாராயணனாகிய தலைமையான கர்த்தனுக்குப்

பூசயாம் அதனாலே அந்தநாராயணரோ இவர்கள் திரும்பவாராத வழியாகிய மோக்ஷமாகப்பட்ட வரத்தைத் தருவாரென்றவாறு. ❀ அன்னியவர்ண சாரத்தைச்செய்தவர்கள் நரகில் விழ்வரென்பதற்கு திருஷ்டாந்தம்.— (௬௰௰)

அல்லாவினைதா னழகாவரினுஞ் ........... *
செல்லார்பெரியோ ரவைசெய்வதனிற் .... *
றொல்லாகுலமே தொடருந்தொழிலே ..... *
பொல்லாவெனினுஞ் செயலேபொருளே. *

(இ-ள்.) சுத்தமல்லாத அன்னிய வருணத்தாருடைய தொழில் அழகாய்வந்தாலும் பெரியோர்கள் தங்கள்கருமங்களைவிட்டு அன்னிய கருமங்களிலே போகார்கள் அன்னியவருணத்தாருடைய கருமம் நல்லதென்று அந்தக்கருமத்தைச் செய்வதிலும் பழைய தானதங்களுடைய குலத்துக்கு அன்று முதலாகத் தொடர்ந்த தொழில் பொல்லாதானாலுந் தங்களுடைய குலாசாரஞ் செய்கின்றதே நல்லதிரவியமென்றவாறு. (௪௰)

(அறுசீரடியாசிரியவிருத்தம்)

கனலெரிபுகையோடன்றிக் காணமுன்படாமைபோல .... *
வினைகளுங்குற்றந்தன்னை விட்டிராததலாலே ................ *
யனையதென்றிகழ்தலாகா வடுத்தகாரியங்கடம்மை......... *
நினைவருந்தருமமென்றே செய்கையேநீதியெல்லாம்........ *

(இ-ள்.) சுத்தமுடைய நெருப்புப் புகையுடனேகாண்பதல்லாமல் புகையில்லாமல் நெருப்பைமாத்திரங்காண்பதற்கு எதிர்ப்படாததுபோலக் கருமங்களுங் குற்றத்தைவிட்டுநிர்மலமாயிராதுஆனதையாலே அப்படிக் குற்றமுடையதென்று செய்யாமல் வெறுத்துவிடுவதாகாது தங்கள் தங்கள் குலத்துக்கு அடுத்த கருமங்களை நினைக்கப்படாத பிரமமாகியதருமமென்று எல்லாஞ் செய்வதேவிதி — எ-று. ❀ எல்லாமென்பனேனென்னில். ஒருகுலத்துக்கு விதித்த கருமம் அனேகத்தில் வெகுகருமம் நல்லதாயிருக்குஞ் சிலகருமங் குற்றம்போலத்தோன்றும் அந்தகுற்றமாகக்கண்டத்தை விடாமலெல்லாஞ் செய்வதேநியமமென்றநிதியாவது-சிருஷ்டிக்குமுன் நியமமானது

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வெல்லப்பட்டமனத்தினருப் வேறொன்றினையும்வேண்டாதே.....*

பல்லற்பற்றுமுடற்பற்று மறவேயறுத்தான்வினையாவுஞ் ...... *
செல்லச்செல்லவெறுத்தவனாயதனாற்சித்தமுடிவாகச் ............ *
சொல்லப்பட்டகரணங்களுநான்குந்தூய்தாய்விடுமன்றே ....... *

(இ-ள்.) கெலிக்கப்பட்ட மனசையுடையவனாய் என்னைத்தவிர வேறொன்றையும் இச்சைப்படாமல் துக்கத்தொடர்ச்சியான ஆசைப்பற்றுந்தேகத்தொடர்ச்சியான ஆசைப்பற்றும்ஒருக்காலு மில்லாமலறவேவொறுத்தவனாய்கருமங்களெல்லாம்நடக்க நடக்க அந்தக்கருமபலன்களைவெறுத்தவனாய் அதினாலே மனமுதலாகச் சித்த முடிவாகச்சொல்லப்பட்ட நாலுகரணங்களுஞ் சுத்தபவித்திரமாகிவிடுவன் என்றவாறு.— (௪௨)

சொன்னகரணமவைநான்குந் தூய்தாய்விடுமத்தூய்மையினு ....*
னுன்னலரியாப்பெரும்பொறையை யுடையனாகுமப்பொறையா *
லின்னல்செய்யும் பொறியைந்து மிராகத்துவேடமெனுமிரண்டு..*
மன்னதன்னை நலியாமலாற்றுமதனை மாற்றினன் ............ *

(இ-ள்.) என்னைத்தவிரவேறொன்றையும்இச்சியாமலறவிட்டால்மனம்-புத்தி-யாங்காரஞ்-சித்தமென்றுசொன்னகரணமானநாலும்நிருமலமாகிவிடும் அந்தந்தக் கரணசுத்தியினாலே நினைக்கவறியாத பெரியபொறுமையாகிய தயிரியத்தை யுடையவனாகும் அந்தப்பொறுமையினாலே துக்கத்தைச்செய்யப்பட்ட அஞ்சுவிஷயமும் விருப்புவெறுப்பென்றவிரண்டும் அந்தவேழுந் தன்னை வருத்தாமல் அவைகள்செய்யப்பட்டதொழிலைப்போக்கினவனென்றவாறு.※ராகமாவது-ஆசை-துவேஷமாவது-பிணக்கு-தூய்தாயமென்றுமற்றுயுதாய்விடுமென்றது நிருமலமாய்முன்னிருந்தமலம்விடுமென்பது,

காடுமலையுமலைமுழையுங் கடுநாமுதலை நலிவில்லா .........*
வோடும்புனலாற்றுள்ளிட்ட விடமேயுறையுளாக்கொண்டு .*
தேடும்பொருளொன்றின்றியே சிறிதேயுண்டுசென்றேங்கு *
மாடுமனவாய்மொழியாக்கை யடக்கப்பெறுமாலவனையல் *

(இ-ள்.) காடும் மலையும் முழையுங் கடினமான நாக்கையுடைய முதலையினாலே வருத்தமில்லாத ஓடப்பட்டசலத்தையுடைய ஆறிவைகளுள்ளிட்டவிடமேயிருக்கின்றவிடமாக விருந்துகொண்டு தேடப்பட்ட பண்டமொன்றுமில்லாமலே கொஞ்சமாகஆகாரம்பு

ண்ணியெங்குந்திரிந்துகூத்தாடப்பட்டமனசு-வாய்-வசனஞ் சரீரமிந்தமூன்று கரணங்களையுமடக்கப் பெறுவானந்தநிருமலனென்றவாறு. ஃ கடுமா முதலைநலிவில்லாவென்றுபாடமாயிற்கடியமிருகமுதலான உபத்திரவமில்லாதகாடு என்றுரைப்பது. (சச)

சொன்னவிவையோவடங்கிட்டவே தோன்றுகளிப்புங்காமமுமுன் *
பென்னதியானென்கின்றதுவு மெரிபோல்வெகுளியுமுவவியு...*
முன்னறவிரந்துசாந்திபெறுஞ் சாந்திபெறவேயோரிடத்தும் ... *
பின்னமடையாதொன்றாகி நின்றபொருளின்பேறுருவாம்...... *

(இ-ள்.) மனம்-வாக்கு-காயமென்றுசொன்ன இந்தத்திரிவித கரணங்களும் அடங்கிப்போகவே முன்னமேயுண்டாக்கப்பட்டகெருவமும் ஆசையும், எனதென் கின்ற சுதந்திரமும், நான் கருத்தனென்கின்ற ஆங்காரமும், நெருப்பையொப்பானகோபமும்,இவைகளுடனேபலமும்இவைகளைநினைப்பது விட்டுச்சாந்திபெறுவன இந்தச்சாந்தியைப்பெறவே ஒரிடத்திலும்பின்னமாகவிடைவிடாமல் பூரணமான வேகமாகிச் சலியாமல் நின்ற பிரமத்திலுடைய பெரிய சொரூபனுவனென்றவாறு. (சரு)

அந்தவுருவானவன் பின்னையாதேவரினு மழிவுறு ...... ... *
மிந்தவுலகத்துயிர்க்கெல்லாமொத்தேயிருக்குமிங்கவனும்.*
பந்தமறவிட்டென்னையு மறிபத்தி பெறுமப் பத்தியினாற்... *
சிந்தையிடையே யென்னைத்தெளியு மதனாலென்னையே சேருமால்*

(இ-ள்.) அந்தப்பிரம சொரூபமானவன் பிறகு என்ன வந்தாலும் அதில் இச்சையாய்க்கெடான் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள சீவனுக்கெல்லாம் இவனுஞ்சமனாயிருப்பன் பாசபந்தமறவிட்டுஎன்னையு மறியப்பட்ட பத்திபெறுவன் அந்தபத்தியினாலே மனதினிடத்திலே என்னைத்தெளிவான் அந்தத்தெளிவினாலே என்னையே சேருவானென்றவாறு. (சசா)

என்னைப்பற்றிக்கொண்டிறவே யெல்லாவினையுமியற்றினுற் ........ *
பின்னைப்பிறவாப்பெரும்பதமென் னருளினாலேபெறுங்கண்டாய்*
நின்னைத்தொடரும்வினையெல்லா மென்னைநினைந்தேசெய்யின்வினைக்.
டன்னைக்கடற்றற்கருந்துன்ப மெல்லாங்கடக்கத்தகுதியால் ........ *

(இ-ள்.) உறுதியாகவென்னை இச்சித்துக்கொண்டு எல்லாக்கருமத்தையுஞ் செய்தாற் பிறகு பிறவாதபெரிய மோக்ஷத்தை என்னுடையகிருபையினாலேபெறுவனகண்டாய் அருச்சுனா ஆகையால் உன்னைத்தொடரப்பட்ட கருமத்தை எல்லாமென்னையே நினைத்துச்செய்தால் அந்தவினைகளை அவைகளால்வரப்பட்ட கடக்கிறசற் கரிதானதுக்கமெல்லாங் கடக்கத்தக்கவனாவாயென்றவாறு. ❖ என்னையே நினைப்பதாவது-கருமம்பண்ணுகின்றவனும் பண்ணிவிக்கிறவனும் பதத்தை யடைகிறவனும், நானேயென்றென்னை நினைத்துச்செய்வார் நின்னைத்தொடரும் வினையென்றதனால் நீ வினைகளைத்தொடராதிரும் என்பதுகுறிப்பு. (சஎ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒன்றியமனத்தினாலே யானுரைக்கின்றவுண்மை........*
நன்றிதன்றுணராயாகி னாசமேயடையுமற்றி ..........*
தன்றியமரசர்க்கெல்லா மமைத்தகாரியமாயுள்ள .........*
வென்றியையுடையாயேனும் வேறுநீவினைவங்கேளாய்.. *

(இ-ள்.) ஒருமையானமனதினாலே நான்சொல்லுகின்றவுண்மை இது நல்லதென் றறிந்துகொள்ளாயாகில் நாசத்தையேயடைவாய் இதுவல்லாமலும் ராசாக்களுக்கெல்லாம் அமைத்தகாரியமாயிருக்கின்ற வெற்றியைநீயடையாயாகிலும் இனிவேறொன்று வினைவுண்டோ அதுசொல்லுகிறேன்கேள் அருச்சுனாவென்றவாறு.

(கலிவிருத்தம்.)

விரைசெய்தார்மன்ன வேண்டலையாயினுங் ...........*
கரைசெய்துன்றனைக் காலுறவார்த்திடு.................*
மரசர்தங்குண மாகியவாண்மையே.......................*
புரைசெய்வாள்மர்க் கேபுகுவிக்குமால்....................*

(இ-ள்.) பரிமளிக்கின்ற மாலையைத்தரித்த ராசாவே நீ சண்டையைத் தள்ளிச்சண்டையை வேண்டாதவனானாலும் வங்கிஷக்கிரமயாகக் கட்டுப்பட்ட ராசர்க்களுடைய சுபாவகுணமாகிய ஆண்மையானசேவகமே அஞ்ஞானமென்கின்ற கையினாலே உன்னைச்சேர்த்து நான்சொல்லப்பட்ட பெரியசண்டைக்கே புகுதப்பண்ணும் என்றவாறு. (சஅ)

பொறிகளுண்ணின் றவற்றின்புணர்ப்பெலா... *
மறியவாட்டினன் போலவ ராக்லைகள் .... .. .... *
வறிதுநின் றுதன் மாயையினுல்வினைக் ... ......... *
குறிசள்செய்விப்ப னீசனென்றேகொள்வாய் ... .*

(இ-ள்.) சகலசீவன்களுடைய விஷயங்களுக்குள்ளே நின்று அந்தவிஷயங்களுடைய பொருத்தமெல்லாமறிய ஆட்டுகின்றவனைப்போலத் தன்னுடைய மாயையினாலே அவர்களுடைய சரீரங்களானவை விருதாவாகநின்று கருமத்தினுடைய குறிகளைச் செய்யப்பண்ணுகின்றவன் ஈஸ்வரனென்றே யறிந்து கொள்வா யென்றவாறு. ※ இவைசேவகம் வேண்டா மென்றிருந்தால் ஈஸ்வரனுடைய ஆக்கியாசக்கரந் திரும்பாமல் விடாதென்பதுகருத்து. (ருய)

வேறப்பட்டொரு வற்குவிளம்புவ் ........................... *
மாறப்பட்டபொருளின் வகையெலாந் ......................*
கூறப்பட்ட துனக்கிக் குறிகளை ............................ .... *
யேறப்பார்த்துனக் கேறியவர்செய்வாய்................ *

(இ-ள்.) வேறுவசப்பட்ட ஒருவருக்குச்சொல்லாமல்விலக்கப்பட்டரகசியமான பொருளினுடையவகையெல்லாம்உனக்குச்சொல்லப்பட்டது இந்தக் குறிகளை யுனக்கேறப்பார்த்துப் பொருந்தினபடிசெய்வாயென்றவாறு. ※ ஏறப்பார்த்தலாவது-மனங்கொள்ளவிசாரித்தல். (ருக)

( இதுவுங்கலிவிருத்தம். )

தீதகலாதனவுள்ளோ வினவேண்டிலெனைத்தேறி...... *
யோதலினுனினைத் தலினு லெனைப்போக்கியொன்றறியா
யாதலினுலியாவர்களு மறியாததொருபொருளைக்.... *
காதலினுலுனக்கின்ன முணக்கின்றேன்கண்டைப்பிடி நீ..*

(இ-ள்.) இவன்வேண்டினுற் போகாதபொல்லாங்குண்டோவென்று மனதுக்தேறி ஒதுகிறதினாலும் நினைக்கிறதினாலும் என்னைத் தவிரவேறொன்றை யறியாதாகையினாலே எல்லாருமறியாத ஒருபொருளை ஆசையினாலே இன்னமுனக்குச் சொல்லுகிறேன் அருச்சுனா! மறவாதகடனாகக் கொள்ளுவா யென்றவாறு. (ருஉ)

என்னையேநினைந்தெழுவுன் மனத்தினையென்னிடையேவைத்...... *
தென்னையேநினைந்திருமற் றென்றனக்கேபூசனைசெய்............ *
யென்னையேகுருவாக்கொள் ளுநிசெய்யிலெப்பொழுது....... .... *
மென்னையே வந்தடைவ ரிதுமெய்யென் றுணர்நீயே ........ .... .... *

(இ-ள்.) என்னையே நினைந்தெழுப்பு உன்மனதை யென்னிடத்திலேவைத்து என்னையேநினைந்திரு எனக்கேபூசனைசெய் என்னையே குருவாகக் கொள்ளு இதைவேறாகிலுஞ் செய்தாலெப்போதுமேந்து என்னை யே சேருவாய் இது மெய்யென்றறி அருச்சுனா நீ யென்றவாறு, (௫௩)

இருவேறுவகையாய வெவ்வேறுவினைகளையு .......... *
மருவேனென்றறவிட்டு மாயையினுன்மறைப்பரிய ... , *
வொருவனையேபற்றுதியேல் பற்றினக்கா லுனைப்பிறவிக்,
கருவேலைக்களைந்தேறக் கைதருவேன் கதிர்வேலோய், *

(இ-ள்,) இரண்டுவிதமாய்வேறுபட்டதாகியபலவானவந்தக் கருமங்களையுங்கூடேனென்று அறவிட்டுமாயையினாலேமறைக்கஅரிதாகியவேகமானஎன்னையேசரணமடைசரணமடைந்தால்உன்னை யலையப் பண்ணுகின்றபிறவியினுடையகெர்ப்பவேலைப்பிடிங்கிமோட்சக்கரையிலேற நான்கைகொடுப்பேன் பிரகாசமுள்ள வேலைத்தரித்த அருச்சுனாவென்றவாறு. (௫௪)

மற்றுனக்குச்சொல்லியவிம் மறைப்பொருண்மாதவமிலர்க்கும்.... *
குற்றமறுத்தறிவுறுநுங் குருவழிபாடிலாதவர்க்குஞ் ...... .. ....... *
செற்றமனச்சழக்கினர்க்கு மென்னைநினையாத்திறத்தவர்க்கு...., ...... *
மற்றமறத்தெரிந்துரைக்கை யடாதென்றேயறிகண்டாய்........... *

(இ-ள்.) மற்றப்படி யுனக்குச்சொன்ன இந்த ரகசியப்பொருளைப்பெரியதவமில்லாதவருக்குங் குற்றமான அஞ்ஞானத்தைத்தீர்த்துஞானத்தைக் கொடுக்கப்பட்ட குருவைப் பூசைபண்ணவில்லாதவருக்குங் கோபமுடைய மனசுள்ள பாவிகளுக்கும் என்னை நினையாத காமியகருமிகளுக்குஞ் சமையமறத்தெரிந்து சொல்லுகின்றது ஆகாதென்றறிவாய் கண்டாயருச்சுனா வென்றவாறு. ※ சமைய மாவது- அவர்களுடைய குற்றந்தீர்ந்தசமையம். (௫௫)

எல்லாப்பொருட்கும்பரமாமிப் பொருளைஎன்னன்பாக்கிசையச்*
சொல்லாற்றெரிவிப்பார்தம்மை யறியச்சொல்லவேண்டுமோ......*
நல்லார்களின்மற்றெனக்கினிய நன்மைசெய்கின்றருமவ.........*
ரல்லார்தவரிப்பொழுதில்லை மேலுமவருமுளராகார்......................*

(இ-ள்.) எல்லாப் பொருளுக்குமேலான இந்த அருத்தத்தை என்னுடைய பத்தருடைய மனதுக்கிசையச் சொல்லினாலே தெரியப்பண்ணுகிறவர்களை அறியச் சொல்லவேண்டுமோ அருச்சுன உலகத்திலுள்ள நல்லவர்களிலெனக் கின்பமான நன்மை செய்கிறவர்களும் என்னை அடைகிறவர்களும் அவர்கள் அல்லாதவர்கள் இப்பொழுதெனக்குநல்லவர்களுமல்ல ஆகையால் அவர்கள் இருந்தாலும் இல்லாதவர்கள்இனிமேலும் அவர்களுள்ளவர்களாகார் எப்பொழுதுமில்லாதவர்களேயென்றவாறு, (௫௬)

நாமிருவோம்பேசிய விவ் வறநூலினையே யெடுத்துரைப்ப ..........*
நாயஞான யோகத்தாலெனையே யாராதிக்கின்றான்..... ... ........*
மேயபொருளை தனைவிட்டு விருப்பாலொலாக்கக்கேட்பானுந்...*
தீயவினைகளறவிட்டுத் தேவருலகஞ் சேருமால்.........................*

(இ-ள்.) நாமிருவருமிசையப்பேசின இந்தத் தருமசாஸ்திரத்தையே யெடுத்துச் சொல்லுகிறவன் நிறைவேறிய ஞான யோகத்தினாலென்னையே பூசிக்கிறவன் மனதிலே சேர்ந்தபொருளையைவிட்டு ஆசையினாலே மனதொத்துக்கொள்ளக் கேட்கிறவனுஞ் சொல்லுகிறவனும் பொல்லாதபாவங்களை அறவிட்டுத் தேவர்களுடைய வுலகத்திலே சேருவார்களென்றவாறு. (௫௭)

(கலிவிருத்தம்.)

என்னதுமொழியினாலா னியம்பிய ஞானத்தாலே..... ........*
மன்னவவுனக்குறுவன் மயக்கெலாங் கேட்டதேயான்... ...*
சொன்னவிப் பொருள்களெல்லாந் துணிந்தனை கொல்லோ
வென்று - தன்னகை கூறநின்று நாயகனருளிச் செய்தான்..*

(இ-ள்.) என்னுடைய வார்த்தையினாலே நான்சொன்ன ஞானத்தாலே ராஜாவே வுனக்குவலிய அஞ்ஞான மெல்லாம்நாசமாயினவோ நான்சொன்ன இந்த அர்த்தங்களெல்லாம் ஏகமனதுடனேகே

ட்டு நம்பி நிச்சயமென்று துணிந்தாயோவென்று நல்லசிரிப்புச் சிறு க்கத்தேரிலே நின்று கர்த்தனாகிய கிருஷ்ணசுவாமி அருளிச்செய்தா ரென்றவாறு.— (௫அ)

(இதுவுங்கலிவிருத்தம்.)

மன்னவவென் மாயமது சூதன்மறை நூலின்........ ... *
முன்னவை மொழிந்ததிரு வாய்மொழிகளாலே... .... *
என்னகுறை யுண்டினி யுனக்கென வியம்பத் ... ....... *
தன்னகமகிழ்ந்துயர் தனஞ்சய னுரைப்பான்......... *

(இ-ள்.) இராஜாவே யுனக்கினி யென்ன மயக்கம் இனி என்னகுறை யுண்டென்று பரவாசுதேவனாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி வேதசாஸ்திரங்களை முன்சொன்ன திருவாய் மலர்ந்தருளின வார்த்தைகளினாலேசொல்லத் தன்மனது சந்தோஷமாகக் கீர்த்தியா னுயர்ந்தஅருச்சுனன் சொல்லுவா யென்றவாறு. (௫௯)

பையரவி லேயினிது பள்ளியமர் வோனே ... .. ....... *
வையமுமிவ் வையமதின் மன்னுயிர்கள் யாவுஞ்... ... *
செய்யவினை யற்றது சிதைத்தலது தானு ... .... ...... .. *
மெய்தெரியி னீமுன்விளை யாடும்வகை யன்றோ...... *

(இ-ள்.) படத்தையுடைய பாம்பிலே சுகமாகப் பள்ளிகொள்ளுகிற சுவாமி பிரபஞ்சமும் இந்தப்பிரபஞ்சத்தில் வாசமானசகலசிவன்களும் உண்டாகச்செய்த தொழிலுள்ளது அழித்தல்இஃதிரண்டும் மெய்யாகத்தெரிந்து பார்க்கில் நீமுன் விளையாடப் பட்டவினோத மல்லவோ வென்றவாறு. (௬௰)

அணித்தகைய சோதியம லாவுன் னருளாலே .......... .. *
கணித்தலரி தாயபிற விக்கடல் கடைந்தேன் .... ....... *
பிணித்தபெரு மாயைமலங் கெட்டதுபிரானே...... *
பணித்தபணி யல்லதுசெ யப்படுவ துண்டோ....... *

(இ-ள்.) அழகியசுபாவமான பிரகாசமுள்ள நிர்மலமாகிய சுவாமிஉம்முடைய கிருபையினாலே கணக்கிடப்படாத பிறவிக்கடல்களைக் கடைந்தேன் இந்தப் பிறவிக் கடல்களிலேஎன்னைக்கட்டிவிழப்பண்ணினபெரியமாயையினுடைய விசாலமான துநாச மாயிற்று

என்னுடைய கர்த்தனே நீர் கட்டளையிட்ட ஏவலை யல்லாமல் வேறு ஏவல் செயப்படுவது உண்டோ யில்லை என்றவாறு. ❁ பிறவிக்கடலைக்கடக்கவே மோக்ஷக்கரை யேறினேனெனவும் மாயைநாசமாகவே ஞானம்பெற்றேனெனவுஞ் சந்தேகந் தீர்ந்து இருதாரத நானேனெனவு மருத்தாபத்தி. (௬௧)

வையமுழு துண்டதிரு வாய்மொழி திறந்திட்.........❁
டுய்யவடி யேனமு னுரை செய்த வுரையாலே ......❁
ஐயமு மகன்றதெனன் வாவுமற விட்டேன் .......❁
செய்ததினி யுந்தனரு ளிச்செயல்க ளன்றோ.......❁

(இ-ள்.) பிரபஞ்சமெல்லாவற்றையும்பொசித் தருளியதிருவாய்மொழியைத்திறந்து அடியேன் மாயையை விட்டுத் தப்பிப் பிழைக்க அடியேன் முன்னே யருளிச்செயத திருவார்த்தையி லுடனே சந்தேகம்போயிற்று என்னுடைய சுயமாக விசாரிக்கிற தரும பாவ விசாரணையையுஞ் சுகத்தையுஞ் சுத்தமாக அறவிட்டேன் இனி உம்முடைய அருளிச்செய்த செயல்களே யல்லவோ அடியேன் செய்வது என்றவாறு. ❁ அற்பு மற விட்டேனென்று பாடமோதில் என்னவர்க ளென்றவர்கள் மேல்வைத்த அன்புமற விட்டேனென்பது கருத்து.— (௬௨)

(வேறு.)

தோன்றுதனவுந் தோன்றவையுஞ் செய்புந்தொழி லிமித்தமாய்த திகழுஞ்சூழ் கதிரோன் போலச்-சான்றுநின்றனைத்தும் கரணங்கள் செய்யுந்தகைமை களுக் கெல்லாந் தனிமித்தமாகி - வான்று னெனவோர் வடிவின்றி யொரு துவரம் பிகழ்ந்து நின்று லிம்மன் னுயிர்களெல்லா - மீன்றுலுங் காதசழிததல் செய்தாலு முன்றனியல் பொம மாறுகாத தெவ்வகையோ யெந்தாய்......❁

(இ-ள்.) நினையாததை நினைப்பிக்கிறது சத்த பரிச ரூப ரச கெந்தமென்கின்ற ஐந்து காரியத்துடனே செய்தொழிலென்றுந் தொழில் நிமித்தியமா யெங்கும் பிரகாசிக்குஞ் சூரியனைப் போல சாஜியமாயிருந்து மனம் புத்தி சித்தம் ஆங்கார மென்கின்ற கரணங்கள் செய்யுங்காரியங் களுக்கெல்லாம் தானிமித்தியமாகிக் கூடிவா

நீயென்றவனென்றும் ஒருவடிவுமில்லாமல் ஞானயோகத்தினாலேயெ
துவுஞ்சேராமல் இருக்கிறவனென்று மன்னுயிர்களை யெல்லாங்கா
த்தழித்து உண்டாக்குகின்றதுமுன்னுடையவியல்பினாலேஆகின்றது
அல்லாமல் பின்னை யொன்றினாலேயு மாகின்ற தில்லையென்றுசொ
ன்னார் அருச்சுன ராச னென்றவாறு. (௬௫)

எரியாய தவனுக்கு வெம்மைதானேவடிவாகியிருந்தாப்
பொலியாது மொன்றுந் - திரியாத மெய்யறிவி னுரு
வாயேதுந் திரியாமையெவ்வடிவாங் காண்ப யாவும்-பிரி
யாதுநினைப்பற்றி நின்றுதத்தம் பெருந்தொழில்கள்புரி
கின்றபெற்றிகண்டாற் - கரியானே யுன தடிமைத் திற
மைபூண்டு காதலியாற் கியலாத கருமமுண்டோ......*

(இ-ள்.) அக்கினிக்கு வெம்மையானது வடிவா யிருந்தாற்
போலே எதிலேயுஞ் சேராமல் மெய்யறிவி னுருவா யெதுவுந் தெ
ரியாமல் இருக்கிறவடிவானவனே யென்றுங் காணமெல்லாம்பிரியா
ம லுன்னைத்தியானித்திருந்த பேருக்கு ஊனானவனே யென்றும்பெ
ருந்தொழில்கள் செய்கின்றபேருக்கு மரியவனே யென்று முனக்க
டிமைபூண்டு பத்திசெய்தபேருக்குநினைத்தகாரியமெல்லாமாகுமெ
ன்றுசொன்னார் அருச்சுனராச னென்றவாறு. (௬௬)

நானுவிதமாங் கரணங்களேது நணுகாத வுருவினாய்ந
ற்புலன்க ளேனும்-கானுறுதனிலுழலுங் கரணக்கட்செல்
லாங் காரணமாய் நின்றவர்கள் காண்கின்ற வெல்லாந்-
தானாகும்வகைகாட்டிய கரணத்தோறுந் தனித்தனியேநி
ன்றுதலையளியாநின்று - யானு முன்னையவை யெது
மொன்று மறியாத வகைநிற்ப தெவ்வகைநீ யையா...*

(இ-ள்.) நானுவித மான வெல்லாஞ்சேர்தரூப முண்டான
வனேயென்றும் நலன்புலன்க ளென்கின்ற காட்டிலே யுழலுகின்ற
கரணங்களுக் கெல்லாம் கரணமாய்நின்றவனே யென்றும் கரணங்
கள்காணுகின்ற தெல்லாந்தானாகின்ற வகைக்காட்டினவனே யென்
றும்அந்தக்கரணங்கள்தோறும்பிறம்புபிறம்பா யிருந்து அறி வைத்
தாராம லிருந்தாயானா லுன்னைக் கரணங்க ளேது மறியா வென்
றுந்தேவரீ ரிருக்கின்றவகை இந்தவகை ஐய்யா வென்றுஞ் சொன்
னார் அருச்சுனராச னென்றவாறு. (௬௭)

ஆடியினில் வேறுபடத் தொன்றுகின்ற வந்நிழலு முணை
ர்வினா லுணர்ந்துபார்க்கிற் - கூடியவந்நிழல்போக்கிவே
றிலாமை குறியாலே நிகழ்ந்தாற்போற் குணங்களாலே-
தேடிய விவ் வுடறோறுந் தோன்றித்தோன்றிச் சீவனாய
த்திகழுகின்றதிகழ்ச்சிதானும்- பாடியவிம்மறைநெறியே
யுணர்ந்துபார்க்கில் நீயல்லாவகையுண்டோபரமயோகி *

(இ-ள்.) கண்ணாடியிலே வேறாய்க் காணுகின்ற நிழலை அறிவினாலே அறிந்து அந்தநிழலைப்போக்கி வேறில்லாமல் குறிப்பினாலே நீ சொன்னஞானமார்க்கப் பிரகாரம் பார்த்தால், மூன்றுவிதகுணத்தினாலே வந்தசகலதேகங்கள் தோறும் பிறந்து சீவனாய்த் திகழ்கிற இகழ்ச்சி யெல்லாம் உலகத்திலே யுன்னையல்லாமல்வேறேவகை யுண்டோ பரமயோகி யென்றுஞ் சொன்னார் அருச்சுன ராச னென்றவாறு.— (௬௬)

செறிவாகுமாடியிலா திடத்திலாங்கே திகழ்கின்றமுகநிழ
ற்செய்கை தானும் - பிறிவாகிவேறுபடத் தோன்றாதே
மூன் பேசுகின்றமுகமேயாய்ப் பேதமகன் றாப் போ-
னெறிவாழுங்கரணங்க ளெல்லாமெய்த்து நீயேயா யொ
ழிவின்றி நித்தியாகி - லறிவானு மறி பொருளு மன்றி
யொன்றே யாயிருக்கு மதுவேனின் னியற்கையாதி....*

(இ-ள்.) கண்ணாடியிலேகண்டமுகத்துநிழலுடையசெய்கையைப் பிறிவாய் வேறாகவெண்ணாமல் துலக்கமான கண்ணாடியில்லாதஇடத்திலே இருக்கின்ற முகம்போலப் பேத மில்லாமலும் நெறி வாழ்கின்ற கரணங்களல்லாமலும் போக்கி நீயோகி ஒழிவில்லாமல்நித்தியமாயறிகிறவனு மறிந்த பொருளான வஸ்துவு ம்புறம்பும் இல்லையொன்றாக விருக்கின்றது மதனாலே உன்னுடைய இயற்கையென்றமாதியா யிருக்கின்றவனே யென்று சொன்னார் அருச்சுன ராசனென்றவாறு. (௬௭)

ஆதித்தனொன்றொருவ னாகிநின்றே யகறோறுமமர்ந்திருந்
துபுனல்கடோறும், பேதித்துப்பலவாக்கித் தோன்றினா
ற்போற் பிறிதின்றி நீயேயாய்ப் பிணைக்கிறநீ றுநின்றே,
வாதித்தமதியாதி கரணந்தோறு மற்றவைபோற்றோன்

றுநின்ற மாயவனேமெய்மை, சோதித்து நின்பெருமை சொல்லுதற்கு மேலைச்சுருதிகடாம் வல்லவோசெல்லிறந் தசோதி ........................................................*

(இ-ள்.) சூரியனென்வன் ஒருவனாக இருந்தும்வீடுகள்தோறு ம்வைத்திருக்கிற குடத்தூத்தண்ணீர்கள்தோறும் பேதித்து பலவாய்க்கண்டதுபோலப் பிரமமெங்கும் நீயாய் சாந்தமடைந்து ஆதித்தனைப்போல் ஏகமாய் சரணங்கள்தோறும் காணுகிறமாயனேயென்று உன்னைச்சோதித்து உன்பெருமையைச் சொல்லுதற்குச் சுருதிகளாலுஞ் சொல்லிமுடியாது சொல்லிறந்த சோதியென்றுஞ் சொன்னான் அருச்சுனராஜனென்றவாறு. (௬௮)

நிலையொன்றிச் சலிப்பின்றியொருவனேயாய் நின்றுலும்வானிரவி நிழற்றன்றலே; பலையொன்றுநீரோடேயலைந்துமற்றுங்கசலமாநீரதனோடசலமாயுந், தலைநின்றுவருப்படிபோல்திவுதோன்றுமவத்றுக்குத்தகநிற்குந்தகையோவுன்னைக், கலைநின்றமறைதெரிய வல்லவாகக் காட்டுவதுஞ் சிலர்கண்டாலாவதென்னே ........................ *

(இ-ள்.) நிலையில்லாமலு மசைவில்லாமலும் எங்கும் பரிபூரணமாய் ஒருவகையாயிருந்தும்ஆகாயமெல்லாம் நிறைஞ்சும் நீராய் நீரோட்டமலைசேர்ந்து கலந்து பின்னையுமிந்த புவனமெல்லாம்அழிந்துப்போய் நீர் மேலாகவிருந்தபிறகு சேனுருவாய்உண்டாகியநிலேயும் பொருந்தியிருந்தும் உனக்குத் தடையுண்டோ வென்றும் வேதாகமபுராண சாஸ்திரங்களினலேயும் உன்னை அறியப்போமோவென்றும் அப்படிக்கொத்த மகிமையைக் கருமமிருனுக்குக் காட்டுகிறதென்ன வென்றும் அவர்களைக்கண்டு ஆகுதென்ன வென்று சொன்னார் அருச்சுனராசனென்றவாறு. (௬௯)

ஒரொன்றுவன்றியேயல்கிலுள்ள வுறுபொருள்களனைத்திலையு மொருகாலத்தே, யொரொன்றுநின்றகதி ரிரவிகாட்டுஞ் செயல்போல்யாவர்களுஞ் செய்வினைகளெல்லா, மாவொன்றுநின்றகதி ராழியானே யருங்காலமொன்றிலறிவித்திடுதியென்று, னெமொன்று யுனையொழிந்து செய்கின்றாய் நிற்கின்றவவருடைய நிலைமையென்னே ........*

(இ-ள்.) பூலோகத்திலுண்டான சீவராசிகளெல்லாவற்றுக்கும் மேகமாயிருக்கிற சூரியன் மத்தியானத்திலே கண்டத்தைமறைத்து இராத்திரிக்கு இருள்காட்டினதுபோல எவர்களுஞ்செய்கிறவினைகளெல்லாம் நீயேயென்று வசமாயிருந்து சங்கசக்கரத்தைத்தரித்தவனேயென்றும் ஓய்கிறகாலத்திலே யறிந்து இநலைபனென்றுமையென்றும் ஒரு தேரின்மேலிருந்து மூலகத்திலே சஞ்சரிக்கிற சூரியனைப்போ லிருக்கிற ஞானவான்களிடத்திற மென்மையோ அறிவேனென்றுஞ்சொன்னார் அருச்சுன ராசனென்றவாறு. (எய)

அலர்கதிரோன் காட்டிடவெப் பொருளுங்கண்டாக்கவ
னொழியப் பொருளைவிழி யறிகிலாபோ, விலகுறும் வெ
ங்கதிர்காட்டற் கேதுவாகியியா தொன்றுங் காட்டுமது
தானுமொன்றாய், நிலவுறுமப் பொறியது நின்வடிவமெ
ன்று நிறையினுன் மறையின்முடி விறந்த தேனு, முலக
றியக்குழலூதி நிரைகண்மேய்க்கு முரவோனை யாருண்
னையுணர்கிற்பாரோ .................................... *

(இ-ள்) பிரகாசம்பொருந்திய சூரியனாலே சகலமானபொருளுங்காணப்படுமென்று அந்தசூரியனையல்லாமல்சகல பொருள்களையும், விழி யறியாதென்றும் அந்தவகைபோல எங்கும்வியாபகமாயிருக்கிறவஸ்துவைக் காட்டுகிறதுக்கு ஏதுவாகி எல்லா வற்றையுங்காட்டுகிற வஸ்துவேயென்றும் மேகமா யிருக்கிறபே ரறிவார்கள் அப்படியறிகிறபேர் உன்னுடைய வடிவமென்றும் நிதானமாய் வேதத்தினுடை முடிவு சொன்னதினாலே உலகத்தார் அறியஆயக் குழலூதிப் பசுக்களைமேய்க்கிறவனே யென்றும் லோகத்திலே உண்பகினையை ஆரறியப்போருமென்று சொன்னார் அருச்சுன ராசன்.—எ-று.

விண்ணினுற் கின்றமுகிற்படலமூடத் தன்னுடையவிழிய
தனைமறைப்பரிமற்போய்க், கண்ணினு லுருவக்காண்
கிலாதான் கதிரோனை யொளியிலனய்க் கருதினுட்போ,
லெண்ணிலா தவர்களெலா முன்னைமெய்யே யிறந்துபிற
ந்துழலுதிநீ யென்றுகொள்ளப், பண்ணினு யுன்னுடை
யபான்மைபாற்கித் பற்றுண்டோ வீடுண்டோபரமமூர்
த்தி .................................... *

(இ-ள்) ஆகாயம்போல மேகப் படலமானது தன்னுடைய
கண்ணைமறைத்தபிறகு கண்ணினாலேயுருவப்பார்த்தபோ் சூரியனை
மறைத்ததாக நினைத்ததுபோல உன்னைத்தியானம்பண்ணுகிறத்துக்
கு அன்பில்லாதபேரெல்லாரும் பிறந்திறந்துழல்கின்றாரனேகரொன்
றும் உன்னுடையமகிமையைப்பார்க்கி லுனக்குப்பற்றுண்டோவீடு
ண்டோ பரமமூர்த்தியென்றுஞ் சொன்னார் அருச்சுனராசன். எ-று.

உலவாதபெருவானமெங்குந்தானே யூடுருவிநின்றுலா
ங்கதன்றொடொன்றுங், கலவாதவகைபோலிவ் வுலகமெங்
குங் கலந்துனையாநின்றாலுங் கணித்தற்காகாப், பலவாய
வுலகங்களுடனேயொன்றும் பற்றாதவகைநின்றபரிசுக
ண்டாற், குலவாயாமகளாகி யளைநெய்யுண்டு கோகுல
மேய்த்திடுவதற்குக் குறைபாடுண்டோ…………*

(இ-ள்.) விஸ்தாரமான ஆகாயம் அசைவில்லாமல் எங்கும்
வியாபித்துஊடுருவியிருந்தாலும் அதனோடே ஒன்றுஞ் சேராது
அந்தவகைபோல இந்த உலகமெங்குங்கலந்துநிறைந்திருந்தாலும்
பலவிதமான உலகங்கள் நின்னோடே ஒன்றுஞ் சேராது ஒன்றுஞ்
சேராமலிருக்கிறவருக்கு ஆயர்குலமகளாகி ஆவெணயுண்டு பசுக்களை
மேய்த்தானென்றால் குறையுண்டோ வென்றுசொன்னார் அருச்சுன
ராசனென்றவாறு. (எரு)

விடுத்ததொழி லினவாகிநின்றவேனும் வேறுசிலகூடுத
லால்விகாரம்போன்றிட், டடுத்துங்காட்டும்பளிங்குநீரி
னூடே யலைகின்றவவிர்மதியம் போலவாங்கே, தொடு
த்தமனமுதலாய கரணந்தோறு மாங்கவற்றின்றொழில்
புரிவாயாகித்தோன்றுங், கடுத்ததிறலாழியங்கையுடையா
யுன்னைக் கண்ணினாற்காண்கின்றார் கண்டபரிசுண்டோ.

(இ-ள்.) ஒருகாரியமுஞ் செய்யாமல் விட்டுவிட்டு இருந்தா
லு மனமுதலான கரணங்கள் வேறொன்று அதனுடனேயுஞ் சேராகி
றத்தினாலே விகாரஞ்செனிக்கும் அதெப்படி யென்றால் பளிங்கினடு
த்துக்காணுகிறாப்போலவும் நீரிலேயுற்ற சந்திரனைப்போலவுங் கர
ணங்களைக்கொண்டு அதினுடையதொழில் செய்விப்பாயென்றுஞ்ச
ங்குசக்கரத்தைத்தரித்த கையுடையேயென்றுங் கண்ணினாலே காண்கிற

பேருக்குச் சமானமுண்டோவென்றுஞ் சொன்னார் அருச்சுனராச னென்றவாறு. (எச)

பொற்புடைய குடத்துவிளக் கொன் றாய் நின்ற புகழ்
தோறு மவ்விளக்கே புலனும் வண்ணம், பற்பலவா மெ
னத்தோன்றும் பரிசுபோலப் பரிசோதித்தெழுந்துள்ள
பற்றினாலே, நிற்பனவா நடப்பனவா முடம்புதோறு நி
ன்றாய்போ லிருக்கின்ற நிலைமைகண்டா, லற்புதம்வேறி
னுண்டோ மாயாவுன்னை யாராயா வறிவுடையோர்க்க
றியலாமோ.......................................*

(இ-ள்.) சல்லடைக் கண்போலிருக்கிற குடத்திலே ஒரு தீபம் வைத்துப் பார்க்கப்பார்க்க நிதானப்படாமல் பலபல வாய்க் காணும் அவைபோல அன்பில்லாமல் மனவழுக்கினாலே பிறந்த தாபரசங்கமாய்ப் பிறந்திருக்கிற ரூபங்கள் தோறும் வியாபித் திருக்கிற நிலைமையைக்கண்டால் அற்புதமான அதிசயம்வேறே யுண்டோவென்று மாயவனே உன்னையறிவினாலே ஆராயாதபேருக்கு அறியப் போமோவென்றுஞ் சொன்னார் அருச்சுனராச னென்றவாறு. (எரு)

கதிரொளியைக் கண்காணக் கண்ணினுள்ள காசதிமிரங்க
ளையக்கதிரோன்காணு, மதிசயமேயெனவுன்னை யுலகுகா
ணாவவ்வுலகை நீகாண்டியாதலாலே, விதமொழியுந்தெ
ரியமாட்டா மெய்ப்பொருளே யுனைக்காணவேண்டிமே
லாந், துதியெனநின் றவைசொல்லி மலர்கடூவிச் சுரர்க
ணமுமுனிக்கணமுந் துதிப்பதென்னே................*

(இ-ள்.) சூரியப்பிரகாசத்தைக் கண்ணறியாது கண்ணிலுண்டான காசபடலத்தை அந்தச்சூரியனறிவான் அவைபோல அதிசயமான உன்னை உலகமறியாது அந்த உலகை நீயறிவாய் அவையல்லாமல் வேதசாஸ்திரமும் உன்னைக் காணமாட்டாது உன்னைக் காண மெய்யான வஸ்துவேயென்றுந் தேவகணங்களும் முனிகணங் களும் மேலானஸ்துதிபண்ணி புட்பங்களினாலே அருச்சனை பண்ணுவார்களென்றுஞ் சொன்னார் அருச்சுனராசனென்றவாறு. (எசு)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பிணித்தபிறவிப் பெருந்தளையைப் பெயர்த்தென்பேரு
ம்பேதமைநோயைத், தணித்தவரசே யெனக் கருதான்

நகாதேயாகத்தகுமாகத், துணித்தவிறல் வான்போரினை
யே தொடங் கென்று நீயிங்குப், பணித்த படியே செய்வ
னெனப் பார்த்தனவனு முடன்பட்டான் ...... .. .... ..... *

(இ-ள்.) கடினமிரவியாகிய பெரியவிலங்கை யறுத்துநீக்கி
னேன் பெரிய அஞ்ஞானமாகிய வியாதியைத் தீர்த்தகர்த்தனே என
க்கு அந்தச்சண்டை யாகாததே ஆனதாகட்டும் எப்படி யானாலுந்
துணித்ததாகிய வெற்றியுள்ள பெரிய சண்டையே தொடங் கென்று
நீரிங்கே ஏவினபடியே செய்வேனென்று அருச்சுனனுஞ் சம்மதித்
தானென்றவாறு. (எஎ)

(கலிவிருத்தம்.)

மாதவனுந் தனஞ்சயனுந் தங்களிலே மகிழ்ந்துரைத்த ...... .... *
வோதரியபொருளினை நீ யுணர்ந்தவாறெங்ஙனெனில் .... ..... ....... *
வேதவியாசனனுடைய மெய்யருளை மிக வுடையே................. *
னாதலினா லறிந்தனன்வே றறியலாம் வகையுண்டோ................ *

(இ-ள்) கிருஷ்ணசுவாமியும் அருச்சுனனும் தங்களிலே இப்ப
டிசந்தோஷிப்பட்டுச் சொன்னத்தை யாவராலுஞ் சொல்ல வரிதான
அர்த்தத்தை நீயறிந்தவழி யெந்தவழியென்று கேட்பீராகில் சொல்
லுகிறேன் கேளும்திருதராஷ்டிரமகாராஜாவே என்றுசஞ்சயன் சொ
ல்லுகிறான் வேதவியாச மகாமுனியினுடைய சத்தியமானகிருபை
யைமிகவுமுடையவனானபடியினாலே அறிந்தேன் அவர் கிருபையல்
லாமல் வேறுவிதங்களினாலே அறியலாகும் வகை யுண்டோ யில்லை
என்றவாறு. (எஅ)

அப்பொருளை நினைந்தோறு மற்புதமா மகமகிழ்வு ......... .......*
மெய்ப்பொழுதும் வருமவன்ற னிருக்கின்ற வகைவிரித்த ........ *
வொப்பரிய திருக்கோல முணர்தோறு முணர்தோறுஞ் .. ....... *
செப்பரிய பெருங்களிப்பின் சிந்தையிலே சிறக்குமால்........... *

(இ-ள்.) அவர்களிருவரும் பேசிக்கொண்ட அந்த அருத்தத்தை
நினைக்கிறபோதெல்லாம் அதிசயமான ஆனந்தமும் திஷ்டையும்
எப்போதும் வருகின்றது அந்தக்கிருஷ்ணசுவாமி தாமிருக்கின்றவி
ராட்டுரூப வகையை விரிவாகக்காட்டின ஒப்பில்லாத விசுவரூபமா
கிய திருக்கோலத்தை அறியும்போதெல்லாம் என்னுடைய மனதி

லேசொல்ல அரிதானபெரிய மனக்களிப்பு மென் மேலு மதிகமா குமென்றவாறு. (அ௫)

அஞ்சலி லிப்பொருள் தனை யிப்படியே புகுந்தெனச் ......... *
சஞ்சயனின் றெடுத்துரைப்ப நூற்றுவர்க்குத் தாதையாய் . *
வஞ்சனை கண்ணாக வாழ்கின்றான் மற்றிவர்க்குப் ... ......... ... *
பஞ்சவரோ வலியவரென் றிவ்வண்ணம் பகர்வுற்றான்.........*

(இ-ள்.) குறைவில்லாத இந்தஅருத்தத்தை இந்தப்படியே நடந்ததென்று வகையாக வெடுத்து நின்றசஞ்சயன் சொல்லக்கௌரவர் நூறுபேருக்குந் தகப்பனாகி முகத்திலே கண்ணில்லாமல் வஞ்சனையேகண்ணாக வாழ்கின்ற திருதராஷ்ட்டிரன் இவர்களாகியகௌரவர்க்குப்பாண்டவர்களான பஞ்சவரோ வலியவர்க ளென்றறிந்தபடிசொல்லுகிரு னென்றவாறு. (அ௬)

(கலிவிருத்தம்.)

திருவற நீதி செயம்புக ழெல்லா.... ......... .... ......... *
மருவுரு மாயைசெய் மாதவன் வாய்மை......... ......... *
தருமம் விடாத தனஞ்சய னென்று..... ... ... ...... ... *
மிருவரு கின்ற விடத்தன வென்றான் ............ ....... *

(இ-ள்.) அழகுள்ள -தருமம் -நீதி-செயம்-கீர்த்தி இதுவெல்லாம்எங்கேயிருக்குமென்றால்யாருங்கண்டுகூடப்படாதமாயைசெய்யப்பட்ட கிருஷ்ணசுவாமி சத்தியத்தையுந் தருமத்தையும் விடாத அருச்சுனனென்று சொல்லப்பட்ட விருவரும் நின்ற விடத்திலிதுவெல்லாம் இருக்குமென்று னென்றவாறு. (அ௭)

என்ற பொருட்டிற மிப்படி யென்றுக....................... *
குன்ற மெடுத்தருள் கொண்டல் பணிப்பான் .... ......... *
வென்ற குலத்தின் வியாசன் விரிப்பா .... ......... ......... *
நின்ற வருக்கிது நேர்பட வன்றே..........................*

(இ-ள்.) என்றுசொல்லப்பட்ட பொருளினுடைய வகையை இப்படியென்று அந்தக்கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத்தடுத்துப் பசுக்களையு மிடையரையுங் காத்த மேகரூபமான கிருஷ்ணசுவாமி சொல்லுவார் அவர் சொன்னதை யெல்லாகுலத்துக்கு மேலான வெற்றிபொருந்திய பிர்ம்மரிஷியாகி

யவேதவியாச மகாமுனி விரிவாகப்பாடினா ரிவர்க ளிருவருமே உப
தேசிக்கவும் பாடவும் வல்லவர்கள் அல்லாமலிவர்களைத் தவிர நின்ற
மற்றப்பேர்களுக்கு இதுசொல்லவும் பாடவு முடன்பட மாட்டுமோ
மாட்டா தென்றவாறு. ❋ உடன்படல்பயனதுக்கெட்டுதல். (அஉ)

(இதுவுங்கலிவிருத்தம்.)

வேதநூல்களின் முடிவினை வியாச னிற்பினன் ....... .....*
ரோதநீர்கட லுலகி லுண்டாக்கிய வுரவோன் .... ......*
கோதிலாநெறி யுணர்ந்தகோ விந்தமா முனியின் ..…*
பாததாமரைப் பற்றிவிட் டின்பமே படைத்தான்....*

(இ-ள்.) இந்தவேதாந்தத்தை வியாச மகாமுனிக்குப் பிற்
கு அலையும் நீளமுமுடைய கடல்சூழ்ந்த வுலகத்திலுண்டாக்கியபெ
ரியவராமென்னில் குற்றமில்லாத முத்திமார்க்கத்தை யறிந்தகோவி
ந்தமகாமுனியினுடைய பாதாரவிந்தத்தைத் தெப்பமாகப் பிடித்
துப் பிறவிக்கடலைக்கடந்து மோட்சமாகிய கரையிலேறி பிறவிக்க
டலிலலைந்த அனேககாலவருத்தமுந் தீர்ந்து ஆனந்த சுகத் தைப்
பெற்றவ னென்றவாறு. (அ௩)

(கலிவிருத்தம்.)

ஆற்றியல் வழுவிய புலன் களைந்தையும்..........*
பாற்றிய சங்கர பகவற் பாதனென் ......... .........*
னேற்றிய பெயரினா னருளி னாலியான் ......... ....*
சாற்றிய திப்பெருந் தரும நூலையே.........…*

(இ-ள்.) மோக்ஷமார்க் கத்தினுடைய சுபாவத்தைத் தவறின
அஞ்சு புலன்களையு மான்றுபடச்செய்தவராகிய சங்கரபகவற்பாத
னையேற்றிவைத்த பெயரையுடை யவருடைய கிருபையினாலே.இந்தப்
பெரிய தருமசாஸ்திரத்தை நான்சொன்ன தென்றவாறு. (அ௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சேயமா மதுரை நின்றுஞ் செம்மை யாய்ப்பாடி தேடி ... *
யாயனும் மாயனார்தா மவதரித் தருளி னாலே ........... ......*
போயமுன் மொழிந்த கீதை புலன்கட லடைத்தார்க்கன்றித்*
தூயமா தவர்க்கு மிந்தச் சுருதி நூல் கருதொணாதே..... ...*

(இ-ள்.) செவ்வியபெருமையுள்ள மதுராபுரியில் நின்றுந்திருவவதாரஞ்செய்தருளிச் செம்மையுள்ள திருவாய்ப்பாடி தேடிஇடையனாய்ப்போய் கிருபையினாலே அந்த அவதார காலத்திலே அருளிச்செய்த கீதையானது பஞ்சேந்திரியக்கடலை யடைத்தவர்களாலே நினைக்கலாம் அவர்களல்லாமல் மற்றசுத்தமான பெரியதவஞ்செய்கிறவர்களுக்குமிந்த வேதார்த்த நூலை நினைக்கப்படாதென்றவாறு.— (௮௫)

தேற்பட்ட கன்றுக் கன்று சேயைச் சிதைத்த சென்னிக்கு... .... *
நாற்பத் திரண் டாஞ் சன்ம நல்லமாரது தன்னில் ................ *
மேற்பட்ட வேளாண் குடிமுதல் வேதாப்பட்டா கானேயெனும் · *
பாற்பட்ட பத்தியா லானந்த பரமார்த்த தெரிசனமே........ *

(இ-ள்.) தேரிலேயகப்பட்ட பசுங்கன்றுக்குப் பதில் முன்னாலே பிள்ளையைத்தேரிலேகொடுத்த நீதிராசனாகிய சோழனுக்குஅந்தநாள் முதல் நாற்பத்திரண்டு ஜென்மத்துக்கு நல்லவனானபடியினாலே மேற்பட்ட வேளாண்குடிமுதல் வேதப்பட்டா கானையே யவருடைய யுறுதியான பத்தியினாலே யுண்டான பரமார்த்ததெரிசனமென்றுஞ் சொன்னானென்றவாறு. (௮௬)

கட்டார் மயலிருட் காதபச் சோதி கலை நிரம்பி ............... *
எட்டா ததுய ராத்தின்ப மாக்கலின் மாமதியெவ்வினையும்... *
விட்டார்கள் விட்டபின் வேதச் சுடரொளி மெய்யுணர்ந்த ..... *
பட்டா கானரு ளாம்பர மார்த்த தெரிசனமே.............. *

(இ-ள்.) உலகத்திலே யிருட்போன்ற மயலைக்கட்டார்களென்றும் இருளணுகாத புத்தியை சோதிப்பிரகாசமாய் யெங்குமெட்டாம லுயர்ந்த இன்பமாகின பேர் எந்தவினையும் விட்டுவிட்டவர்கள் விட்டபிறகு வேதச்சுடரொளியை மெய்யாயறிந்த பட்டாகானுடைய கிருபையினாலே அவர்களுக்கு பரமார்த்த தெரிசனமென்றுஞ்சொன்னாரென்றவாறு. (௮௭)

பதினெட்டாவது சகலஉபநிஷத்துப் பிரதிபந்தனமோ
க்ஷயோக அத்தியாயம் முற்றிற்று முற்றும்.

ஆக-அத்தியாயம்-௰௮-இ கூடிய செய்யுள் (ருாகாகூ.)

பகவத்கீதைமுற்றிற்றுமுற்றும்.

# அத்தியாயங்களின் - அட்டவணை.





அத்தியாயங்களின் அட்டவணை

முற்றிற்று முற்றும்.



